ஓம்

அருணகிரிநாதர் அருளிச் செய்த

# கந்தரநுபூதி

மூலமும்

அதற்குச்
சென்னை, இராயப்பேட்டை
வேதப்ரவசனமந்திரத்து
சிவத்தியாஞனந்த மஹர்ஷி
இயற்றி யருளிய

கூடார்த்த தீபிகை
மறைபொருள் விளக்கம் என்னும்
விருத்தி உரையும்

வேத ப்ரவசன மந்திர வெளியீடு 3
(முதற்பதிப்பு 1000 பிரதிகள்)

இம் முதற்பதிப்பின் சுதந்தரம் மட்டும்
முருகவேள் புத்தகசாலையாருக்கு
அளிக்கப்பெற்றது.



1932

விலை ரூபா 1.

# முகவுரை

—o—

கந்தர் அநுபூதி அருணகிரிநாதரது வாக்கினின்று பழுத்துவந்த மறைநூ லென்னல் தகும். கந்த ரலங்காரத்திலுள்ள பல அருமைகளைக் கண்ட ஒருவருக்கு இக்கந்தரநுபூதி அதனினும் சிறந்த நூலென்பது வெளியாகும். இந்நூலைப் படிக்கவோ அல்லது ஜபிக்கவோ தொடங்குவோருக்கு முக்கியமாகச் சில தன்மைகள் வேண்டும். அத் தன்மைகள் ஒவ்வொரு மனிதனுக்கும் இருக்கவேண்டிய தன்மைகளே யாம். வேதாந்தியைப் பற்றிச் சொல்லுங்கால் அவன் அறியாத சாஸ்திரமே யொன்றும் உலகி லிருக்கப்படா தென்பர். இவ்விதியே தார்க்கிகனுக்கும் ஒவ்வுமாயினும், தார்க்கிகன் சொல்லளவிலே நின்று பொருட்பயனை யநுபவியாது மிதந்து நின்றுவிடுகிறு னாதலின், அநுபூதிமானுக்கு அப் பொருட்பயனும் கைகூடி வருவதற்கான நிலை வருகின்றதாகலின், இவ் வநுபூதிமானே அருளாட்சி பெற்ற அத்வைதி யென்பது விசதம். அதனுலேயே அத்வைதிகளை உலகினர் இருபிரிவினராகப் பிரித்தனர். வாசா ஞானமாக வாதவளவில் நிற்கும் வாய் வேதாந்திக ளென்றும், குருவின் உபாசனையைப் பெற்று, நிற்கவேண்டிய நன்னிலையில் நின்று, தெய்வ வருளை யாண்டு அத் தெய்வ வருள் நடத்தத் தாம் நடக்கும் அநுபூதிமான்க ளென்றும் இருவகையினராகப் பகுத்தனர். இவ் வநுபூதி மான்களாகிய உபாஸகர்களுடைய பெருமையைச் சுட்டித்தான், தாயுமானவர்,

“ பன்முகச் சமய நெறி படைத்தவரும்
யாங்களே கடவு ளென்றிடும்
பாதகத்தவரும் வாத தர்க்கமிடு
படிறரும் தலைவணங்கிடத்,
தன்முகத்தி லுயிர் வரவழைக்கு மெம
தருமனும் பகடு மேய்க்கியாய்த்
தனியிருப்ப, வடமீழ லூடுவளர்
ஸனகனுதி முனிவோர்கள்தம்

சொன்மயக்க மது தீர, அங்கைகொடு
மோன ஞானம துணர்த்தியே
சுத்தசித்த வரு ளியல்பதாக வள
சோமசேகர க்ருபாளுவாய்த்
தென்முகத்தின் முகமா யிருந்தகொலு
எம் முகத்தினும் வணங்குவேன் ;
தெரிவதற் கரிய பிரமமே அமல
சிற்சுகோதய விலாசமே.''

என்று கூறிப்போந்தார்.

அதனால் இவ் விருவகையினர் தவிர மற்றெவ் வகையினரும் வேதாந்திக ளென்ற பெயருக்குப் பொருத்தமுள்ளவ ராகார். இவ் வேதாந்திகள் ஆதியில் அத்வைதிகளாகவே யிருந்தனர். இப்பொழு தும் அந்த அத்வைத நிலை தவிர மற்ற நிலையெல்லாம் லோகாயத நிலை களே யன்றி வைதிக தெய்வ நிலைகள் ஆகமாட்டாவென்பது இந் நூலின் உரையில் பல விடங்களிலும் விளக்கப்பட்டுள்ளது. அதனால், ஈசுவரனே உலகத்துக்கு உபாதான காரணனும் நிமித்த காரணனும் ஆவான். அவ் வீசுவர னென்னப்படுவான் ஸத்தென்னும் பெயரில் உலக நிலையையும் சித்தென்னும் நிலையில் உலக அநுபவத்தையும் அறிந்து ஆநந்த மெய்துகிறான். அவனது பிரதிபிம்ப சைதன்யங்களே ஆன்மாக்கள். அதனால் அவ் வான்மாக்கள் அவனின்றும் பிரித்து எண் ணப்படத் தக்கவைக ளல்ல. அப்படிப் பிரித்து எண்ண நிற்பனவாக வியவகார தசையில் அல்லது கண்ட நிலையில் தோன்றினும், பார மார்த்திக அல்லது அகண்டத் தியான நிஷ்டை கூடும் நிலையில் ஆத் மாவே 'தானலாதுலகமில்லை' என்பதைத் தெளிவாக வுணர்கிறது. பேதத் தோற்றங்களெல்லாம் புறத் தோற்றங்களே யொழிய, ஆழ்ந்து பார்ப்பவர்களுக்கு ஸத்தொன்றைத் தவிர மற்றொன்றுமே யுலகி லில்லை என்பது நன்கு விளங்கும். சித்தினு லுணரப்பட்டாலன்றி உலகம் எப்படிப் பயனுள்ள தாகாதோ, அப்படியே ஸத்தில்லையானல் அதனிடத்துப் பற்றி நிற்கும் உலகமு மில்லையென்றே துணிவாகக்கூற லாம். அதனால் முக்கிய வஸ்து ஸத்து ஒன்றேயாகும். மற்றவை அப் பிராதான்ய மானவை யானதுபற்றி, இல்லை யென்று கொள்ளுவதில் யாதொரு தவறுமில்லை என்பதே பண்டையோர் துணிபு. 'பண்டைக்

காலத்திலிருந்து அநுபூதி பெற்றுப் பாடியுள்ள எல்லாருடைய நூல்களிலும் இவ் வுண்மையே வெளிப்பட்டு நிற்பது' என்பதை விளக்குவதே இவ்வுரையின் முக்கிய அம்சமாகும். இவ் வுண்மை, சங்கர பகவத்பாதர் வெளிப்படுத்துவதற்கு முன்னரே, நம் நூல்களில் அமைந்து கிடக்கும் உண்மை யென்பதைக், கால நிலை, சமூக நிலை, தேச நிலை முதலியவற்றின் இயல்புகளோடு விளக்கி இம் 'மறை பொருள் விளக்க வுரை' தெளிவு படுத்திற்று என அறிக. இவ்வளவு விஷயங்களும் நூலாசிரியராகிய அருணகிரிநாதருக்குத் தெரிந்திருக்குமா வென்று சிலர் கேட்கத் தலைப்படுகின்றனர். அன்னோர்க்கு இதுவே பதிலாகும்: அநாதியாகவுள்ள இவ்வுண்மைகள், ஆதியில் தட்சிணாமூர்த்தி குருவாகத் தோன்றி உலகுக்கு உபதேசஞ் செய்த காலந்தொட்டும், அதன் பின்னர் நமது முருகனாகிய குருநாதன் விரித்துக் கூறிய காலந் தொடங்கியும், நாத ரூபமாக அந்தரத்து உலாவிக்கொண்டே இருக்கின்றனவென்றும், அவ் வுண்மைகளை யறியும் அமைதியுடைலப்பெற்றவர்கள் அவற்றை அறிந்து பெற்று அநுபவித்துக்கொண்டே வந்துள்ளாரகளென்றும், அப்படியே பின்னும் வருபவர்களும் அநுபவிப்பார்களென்றும், ஸ்வாநுபூதிமான்கள் கண்ட வுண்மையெனத் தெளிந்து, இன்னோர் சமாதானம் பெறுவார்களாக.

இந் நூலாசிரியராகிய அருணகிரிநாதரைப்பற்றி நமக்கு விசேஷமாக ஒன்றும் தெரியாது. பாண்டியனது அரண்மனையில் இராஜ குடும்ப நிர்வாஹகரா யிருந்து, வடமொழி தென்மொழி இரண்டிலும் சிறந்து, தென்மொழியில் உத்தமோத்தமமான நூலொன்றை யியற்றிய திருவள்ளுவரைப்பற்றிப், பதப்பொருளின் வேற்றுமை யுண்மை காரணமாக, வள்ளுவனென்ற சாதியைச் சேர்ந்தவரென எவரேனும் மயங்கிக் கூறிவிடப் போகிறார்களே யென்று 'வள்ளுவ னெனபானோர் பேதை அவன் வாய்ச்சொற் கொள்ளார் அறிவுடையார்' என்று தெளிவுறக் கூறியிருக்கவும், ஆதி பகவர்களைச் சிருஷ்டித்து, எழுவர் மக்களை யுடன்கூட்டிக், கற்பிதமான பிறப்பு வளர்ப்பை விநோதரஸம் ததும்ப எழுதிவிட்ட புலவனும் உண்மைப் புலவனாக மதிக்கப்பட்டு அவன் வாய்ச்சொல்லே உறுதியாகக் கொள்ளப்படும் இத் தமிழுலகத்தில், அருணகிரியாரைப்பற்றி யெழுதப்பெற்ற கதைகளை யெல்லாம் நம்புவோர் தவப்பல ராகலின், அவர்களது மத்தியில் உண்மை கண்டு

ரைத்தல் அரியதென்று உணர்க. ஆனால் அவருடைய நூல்களினின்று எவ்வளவு தெரிகிறதோ அவ்வளவுமட்டும் கூறுவதை யாரும் தடுக்கவியலாது. அவர் எல்லாக் கலைகளையும் நன்குணர்ந்த பெரியாரென்பதும், அவருக்கு வடமொழி தென்மொழிப் பயிற்சி இரண்டுமுண்டென்பதும், அவர் தந்திர மார்க்கானுஸாரியாய் அத்வைத வுண்மைகளைச் சிறு வயதிலேயே அநுபூதி வாயிலாகப் பெற்றவரென்பதும், வேஷதாரிகளான ஆண் பெண் இருபாலாரையும் அவர் தாட்சண்யமின்றிக் கண்டித்துப் பேசும் இயல்புடையவரென்பதும், அப்படிக் கண்டிப்பதிலும் அவர்கள் திருந்தவேண்டுமென்ற நல்லுபகார சிந்தையோடன்றி வெறும் வசைமாத்திரமாகக் கண்டிப்பவரல்லவென்பதும், அவர் காலத்திருந்த பலருக்கும் அவர் ஒரு முன்மாதிரியாக விருந்து காட்டினாரென்பதும், நக்கீரரால் முருகாற்றுப்படையிற் கூறப்பட்ட முனிவர்களது இலட்சணங்களுக்குச் சுட்டாக விருந்தவரென்பதும், அநேக வுண்மைகளை நுணுகி யுணர்ந்திருந்த காரணத்தால் சாமான்ய ஜனங்களிடத்துக் காணப்பட்டுவந்த அநேக விபரீத ஒழுக்கங்களையும் கொள்கைகளையும் கண்டித்து உண்மையைத் தமது நடையின் பெருமிதத்தினால் வெளிப்படுத்தி வந்தவரென்பதும், நமக்கு அவரது சரித்திரத்திலிருந்தும் நூல்களிலிருந்தும் வெளியாகின்றன. இவற்றிற்கு மேல் கர்ண பரம்பரையாக வந்துள்ள கதைகளை நம்புவோர் நம்புக; நம்பாதார் நம்பா தொழிக. இவ் விஷயத்தில் இவ் வுரையாசிரியர்க்கு யாதொரு கவலையு மில்லையாகும். இனிக் கந்தரநுபூதி நூலாசிரியரால் அநுபூதியி லுணரப்பட்டு வெளிப்படுத்திய மறைகளிற் கண்ட சில வுண்மைகளை உரையிற் காட்டியுள்ளபடி மூன்றுவிதமாக வகுக்கலாகும். கௌமார மதம் வெளிப்பட்ட காலத்திருந்த தேச நிலை சமூக நிலை, கொள்கை நிலை என்பவை அவை. கொள்கை நிலை முன்னரே சிறிது கூறப்பெற்றது.

தேச நிலையைப்பற்றிக் கூறுங்கால், இப் பூமியமைப்பு மூவகைப் பட்டிருந்தது. மேரு பர்வதமெனக் கொண்டாடப்படும் ஆல்டாய் (பொன்மலைப்) பிரதேசமானது உன்னதப் பிரதேசமாய் இப்பொழுதுள்ள வடதுருவத்திற்போல சூரியன் தன்னைச் சுற்றுவதாகக் காணப்படுவதாய், ஆறுமாதம் பகலும் ஆறுமாதம் இரவுமுள்ளதாய், ஆதித்தியவாதிகளால் ஆளப்பட்டு இமயம்வரை சரிவாக விருந்தது. இமயம் இப்

பொழுது போலல்லாமல் தாழ்ந்து மனஸரோவார் ஏரிப்பிரதேசமும் இப்பொழுது கங்கை பாயும் பிரதேசமும் (இது ஒரு காலத்துக் கடலாக விருந்ததெனஅறிக.) இலகுவாகப் போய் வருவதற்கான ஸாதனங்களோடு கூடிய சிறுமலைப் பிரதேசமாக இருந்தது. மேற்கு ஆசியாவான, ஐரான், கால்டியா, எகிப்து முதலிய பிரதேசங்கள் மேரு பர்வதவாசிகளின் ஒரு குடும்பத்தினரும் மற்றொரு வகை ஆரியர்களுமான அசுரரால் (அஹுரர் மதத்தவர்களால்) ஆளப்பட்டு வந்தன. இவர்களை மேரு பர்வத வாஸிகள் தங்களுடைய ஆத்ம பலத்தாலும், சொல்லாற்றலாலும் அடக்கித் தமது கொள்கைகளையே அநுஷ்டிக்குமாறு செய்துவந்தனர். இந்நிலையி லிருக்கும்போது தங்களுக்குத் தெற்கிலும் தென்கிழக்கிலும் விசாலமான பிரதேசங்கள் குடியேறுவதற் கிருப்பதை யறிந்து அவ் வசுரர்கள் பொதியத்தை வடக்கெல்லையாகக் கொண்ட அப் பிரதேசத்தை யாக்கிரமிக்க லாயினார். இப் பூமிபாகத்திற்கு **மகேந்திர** மென்ற பெயர் வழங்கி வந்தது. கால வியற்கையினால் விந்தத்துக்கும் இமயத்துக்கும் இடையிலிருந்த சமுத்திரபாகம் மேடிட்டுப் போகத் தொடங்கியது. இதனால் மேருத் தாழ்ந்து இமயம் உயரலாயிற்று. இதனையே '**மேரு வரைக்கும் வந்தன்று வளைவு**' என்று பெரியார் கூறினார் என்க. அது ஒரு பூகம்பத்தால் நேர்ந்ததென்ப. பின்னொரு பூகம்பத்தின் பயனாக விந்தியம் தாழவும் இமயம் பின்னும் உயரவும் தொடங்கியது. இதற்கு முன்னர் அரக்கன் யோமா மலைப் பிரதேசம் ஆறுகத் தெற்கே மகேந்திரத்துக்குப் போகும் கிழைவழி யொன்று அமைந்து கிடந்ததை முதல் முதல் மகேந்திரத்திற் குடியேறிய அசுரரே யுணர்ந்தனர். அவ் வசுரர் இந்திரனது நாட்டை (தற்கால இந்து சீனப் பிரதேசத்தை)த் தமக்குள் சிற்சில காலங்களில் அடக்கி வாழலாயினர். மேற்கிலுள்ள அதல விதல சுதலப் பிரதேசங்களை (அதாவது கால்டியா எகிப்து முதலிய பிரதேசங்களை) தேவ ஆரிய நிலைக்குக் கொணர முயன்ற ஆதித்தியவாதிகள் வடக்கு இமயப் பிரதேசத்தில் தங்கியபின் இந்திரனாட்சிக் குட்பட்டாராதலின், இந்திர வாதிகளாய் அவனுக்குத் தலைமை கொடுத்து நின்ற காலம் அதுவாயிற்று. மாவலி உபேந்திரனுக் கடங்கு முன்னரே இவ் விந்திராதித்திய வாதிகளுக் கடங்கினார் போக மிகுந்திருந்த அசுரர்கள் மேற்கு ஆசியாவினின்று வெளிப்பட்டு மகேந்திரத்தில் குடியேறி மலாயம் ஆறுக வடக்கண்

வந்து அவ் விந்திரப் பிரதேசத்தைக் கைக்கொண்டு அத் தேசத்துத் தேவவாதிகளை மீண்டும் தங்கள் ஆளுகைக்குள் அடக்கத் தலைப்படவே, தெற்கு இமயப் பிரதேசத்தினர்க்கு மற்றொரு வேலை முக்கியமானதாயிற்று. அசுரர்கள் மேலை கீழை இரண்டு திக்குகளினின்றும் தங்களை ஒடுக்கி விடுவார்களென்ற பய மெழவே, அக்காலத்துத் தங்களைக் காப்பாற்றுவான் ஒரு புண்ணிய புருஷனை நாடி நின்றனர். ஆதித்திய வாதிகளும் இந்திரவாதிகளும் கூடிச் செய்த பரிசீலனைக் கிடையில், அக்கினியே சிவம் எனக் கொண்டு வாதஞ்செய்யும் ஒரு கட்சியினர் தலையெடுத்தனர். அதற்கேற்ப இமயமும் பூமியின் அகட்டியக்கத்தால் உயர்ந்து காட்டவே, விந்தம் தாழவும், அப்பொழுது கங்கை வந்து பாயும் சமவெளி யேற்படவும், தெற்கே விந்தியந் தாண்டி மேற்கு மலைத்தொடர் மெட்டு நிலங்களின் வழியாக மகேந்திரத்திற்கு இச் சிவவாதிகள் போய்த் தமது சிவ மதத்தினைப் பரப்பவும் இடம்பாடேற்பட்டது. இவ் விடம்பாடு காரணமாக ஆதித்திய வாதிகளையும் இந்திர வாதிகளையும் முதலில் அக்கினி வாதிகளாக்கிப் பின்னர் சிவவாதிகளாக வாக்கவும் பிரமேயம் ஏற்பட்டது.

இதிலிருந்து அப்பொழுது கண்ட பூமிப் பரப்பெல்லாம், அதாவது மேற்கே (அதல விதல முதலாகிய) எகிப்து, கால்டியா என்னும் பிரதேசங்களும், கிழக்கே இந்திர அக்கினிப் பிரதேசங்களாகிய இந்து சீனமும், தெற்கே விந்தியத்திலிருந்து மகேந்திரம் முடியவும், சிவ மதமே மதமெனப் பரவலாயிற்று. இம் மதத்தினருக்கு மத்திய ஸ்தானம் கைலாய மலையாக அமைந்தது. இம் மதத்தைத் துல்லியப்படுத்தித் திக்குவிஜயஞ் செய்த பரம ஆசாரியனே குமார சிவம் ஆவான். இக் குமாரக்கடவுளது வல்லமைகளிற் சிறந்தது, தமது ஒரே தோற்றத்தில், ஞானி, குடும்பி யென்னும் இரு தன்மைகளையும் உடம்படுத்திக் காட்டியதாகும். இக் குமாரக் கடவுள் குழந்தைப் பருவத்திலேயே ஞானியாய்த் தெய்வ நிலையை யடைந்த பெரியாராதலின், அவரைக் குழந்தை, முருகன், பாலாஜி, குமாரன் எனப் பற்பல விடத்தினரும் பற்பல விதமாகக் கொண்டாடலாயினர். இக் கௌமாரமானது வைதிக சைவ மதமாகவும் ஒப்புக்கொள்ளப் பெற்றது. அதற்கு முன்னிருந்த சாக்தேயம், காணாபத்யம், பைரவங்களெல்லாம் மலினப்பட்ட சைவமெனவும், இக் கௌமாரம் மலினமெல்லாந் தீர்ந்த சுத்த சிவ அத்வைதமெனவும் கருதலாயினர். இம் முரு

கோபாஸகர்களுக்கு யமவாதையின்மையின், பிதிர்லோகத்தைப்பற்றிய கவனமே ஜனங்களிடை அற்றுப்போக லாயிற்று. ஜனங்கள் கைலாசம் ஆரூக விடுதலையை யடையும் மார்க்கத்தைக் கண்டனர். அதற்கேற் பச் சமூகம் மற்றப் பழைய நம்பிக்கைகளையும் பழக்கவழக்கங்களையும் விடுத்துச் சுத்த சிவாத்துவித மார்க்கங்களையே கைக்கொள்ளலாயிற்று. எனினும் அடிக்கடி ஜனசமூகத்தில் உண்மைக்குச் சோர்வு ஏற்படு வதைக் காணும்போ தெல்லாம், அக் கௌமார மதத்தை உத்தாரணம் பண்ண மாந்தர் எழுந்து அம் மதத்தைத் துல்லியப்படுத்தி வைத்துச் சென்றனர்.

அத்தகைய மகான்களிலும் முனிவர்களிலும் நம் அருணகிரி நாதர் தமிழ்நாட்டிற் றலைசிறந்து நின்றவ ராவர். அவருடைய கொள் கைப்படி, சைவ மதத்தினைத் தெளிவுற வுணர்ந்து அநுஷ்டிப்பவர் யமவாதைக் குள்ளாகார். ஏனெனில், பாசங்களால் உறுதியாகக் கட் டப் பெற்றுள்ள கிரந்திகளை உபாஸனையாகிய யோக சாதனையால், ஒவ்வொரு மனிதனும் தானே அவிழ்த்துவிடும் சக்தியைப் பெறு கின்முன்; ஆனதுபற்றி,யமனுக்கு அம் மனிதனிடத்து ஒரு வேலையும் இல்லாமற் போகிறது. அதனால் பிதிர் லோக வாஸனை இவனைப் பற்றுவதில்லை. அநுஷ்டாதாக்களாய் நின்று அநுபூதி யடைபவர் பெறும் அணிமாதி ஸித்திகளை, அவ் வநுபூதிமான்கள் 'விதி வழி அவை வந்தன' வென அநுபவித்துத், தமது இலட்சியத்தில் தவறுமல் நின்று, இச்சரீரத்தைப் பழஞ் சட்டையைக் கழற்றி யெறிவதுபோல எறிந்துவிடும் தன்மை பெற்றவர்களாகின்றார்கள். கேவலம் அஷ்டாங்க யோக மார்க்கத்தைத் தழுவி அதனால் சரீரத்துக்குத் துன்பத்தை யளித்து நிற்பதினும், உபாஸனையைச் செய்து, குருநாதனை நேரிற் கண்டு, அக் குருநாதன் அளித்த சிவஞான நெறியில் நிற்பதே சிறப்பான தாகும். இந்நெறியில், மனம் பண்பட்டு நிற்பது மாத்திரமே யன்றிச் சுகதுக்கங்களின் வாதையு மற்றுப் போவதுடன், துன்பமென்பதை யே இவ் வான்மா காணுமல் ஸதா ஆநந்தமயமாய் நிற்கிறதென்பது அருணகிரியாரது முடிந்த கொள்கை யாகும். இது இயற்கை நெறி யாக விருப்பது மாத்திரமன்றிச் சுக நெறியாகவு மிருப்பதால், இவ் வழியில் பக்குவப்பட்ட ஆன்மா, அப்போதைக்கப்போது ஏற்படுஞ் சூழ்நிலைகளுக்கேற்ப ஆடிக் காட்டித், தனது உண்மை நிலை சோரப் பெருது எப்பொழுதும் ஸமாதி நிலையிலே நிற்கவல்ல தாகிற தென்

பதை அவர் தெளிந்துணர்ந்தவர். செய்தற்கரிய மற்ற நிலைகளை போலாது, இந்நிலை ஸுலப ஸாத்தியமாக விருத்தலின் எல்லாராலு அநுஷ்டிக்கப்பட வேண்டுமென்றே லோகோபகாரமாக இவ் வநுபூ நூலை யவர் உலகத்துக்கு அளித்துச் சென்றனர்.

இந்நூலைப் படித்து உணர்ந்து இதிற் சொல்லப்பட்ட நெறியி நிற்பவர்களெல்லாரும் அருள் வர்க்கமே யன்றி மனிதரல்ல ரான பற்றி அன்னோர்க்கெல்லாம் எனது பிரணாமத்தைத் தந்து இக் கூடார்த் தீபிகை என்னும் விருத்தியுரையை வெளிப்படுத்தலானேன்.

"நவசக்தி" யாசிரியர் திருவாளர் திரு. வி. கலியாணசுந்த முதலியார் அவர்கள், சென்னை, இராயப்பேட்டை 'குகாநந்த நிலயத்' ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் பிரமோதூத வருஷ துக் கந்த சஷ்டி காலத்து இக் கந்தாநுபூதியைப்பற்றி என்னை பிரஸங்கஞ் செய்யுமாறு தூண்டியதன் பயனாகத், தமிழுலகம் இ வரு மறைநூலின் உரைப் பயனைப் பெற்ற தானதுபற்றி, இ நூலுரையின் பெருமை அவருக்கே யுரியதெனக் கூறினும் அ தகாது. ஏனெனில், யான் அநுபூதி பெற்று இற்றைக் இருபத்து நான்கு வருஷமாக அநுபவித்து வரும் உண்மைப் பய உலகமும் அடைந் தநுபவிக்கட்டுமென எண்ணி, யான் இவ்வுரை வெளிப்படுத்துவதற்கு மூல காரணமாக விருந்தவர் அவரே யென்க.

முருகன் புகழ் ஓங்குக! அவனடியார் வாழ்க! அவனால் விமரிசிக்க பெற்ற ஸர்வமத ஸமரஸமான இக் கௌமார மார்க்கமும் வாழ்க

வேதப்ரவசனமந்திரம்,
இராயப்பேட்டை.
20-2-1932.

சிவத்தியானனந்த மஹர்ஷி

---

குறிப்பு:—இந் நூலுரையை வெளிப்படுத்துங்கால், ஸ்ரீமான் ஆர். ஸ்ரீநிவாஸய்யங்கார் என்பவர், கந்தனுக்கு இப்பொழுது செய்யு ஆராதனை விமரிசை யெல்லாம் கிருஷ்ணனுக்குச் செய்யும் லாலனை களைக் கண்டே செய்யப்படுவன வென ஹிந்துப் பத்திரிகையி வெளிப்படுத்தி யுள்ளதைக் கண்டேன். அது காளிதாஸன் முதலி பழைய பெரியாரின் கருத்துக்கும் உண்மைக்கும் முரணான தெ பதை இரண்டாம் பாகத்தில் வெளிப்படுத்துவேன்.

# பாட்டு முதற்குறிப் பகராதி

| எண் | முதற்குறிப்பு | பாட்டெண் | பக்கம் |
|---|---|---|---|
| 1 | அடியைக்குறி | 23 | 94 |
| 2 | அமரும்பதி | 8 | 31 |
| 3 | அரிதாகிய | 20 | 82 |
| 4 | அறிவொன்றற | 48 | 213 |
| 5 | ஆடம்பரி | 1 | 5 |
| 6 | ஆதாரமிலே | 26 | 103 |
| 7 | ஆதாளியை | 38 | 166 |
| 8 | ஆருறையு | 47 | 208 |
| 9 | ஆனாவமுதே | 28 | 110 |
| 10 | இல்லையெனு | 29 | 114 |
| 11 | உதியாமரியா | 18 | 72 |
| 12 | உல்லாச | 2 | 8 |
| 13 | எந்தாயு | 46 | 206 |
| 14 | கரவாகிய | 45 | 202 |
| 15 | கருதாமறவா | 21 | 87 |
| 16 | கலையேபதறி | 32 | 129 |
| 17 | கார்மாமிசை | 10 | 36 |
| 18 | காளைக்குமரே | 22 | 91 |
| 19 | கிரிவாய்விடு | 37 | 163 |
| 20 | குறியைக்குறி | 42 | 189 |
| 21 | கூகாவென | 11 | 42 |
| 22 | கூர்வேல் | 24 | 97 |
| 23 | கெடுவாய் | 7 | 23 |
| 24 | கைவாய் | 14 | 55 |
| 25 | சாகாதெனை | 41 | 180 |
| 26 | சாடுந்தனி | 44 | 198 |

உ

வேலுமயிலுந்துணை

# கந்தர் அநுபூதி

## கூடார்த்த தீபிகை என்னும் விருத்தியுரை



### காப்பு

விபூதி தியானம்

நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமாலை சிறந்திடவே
பஞ்சக்கர வானை பதம் பணிவாம்.

தோற்றுவாய்

கந்தரநுபூதி மனஸ் தத்துவ உண்மைகளை மாந்தர்க்குப் போதிக்கும் ஒரு மறை நூல். மந்திரம், தந்திரம், பிரயோகம் என மூன்றையும் தன்னுள் அடக்கியுள்ளதோடு, மந்திர ரத்நாகரம் முதலிய சில வடமொழித் தந்திர நூல்களைப் போலாது, முருகப்பிரானது ஆறுக அநுபூதி பெறு வழியொன்றையே உணர்த்துவது. மேலும் உண்மை விளக்கம்போலப் பீஜமந்திரங்களை யுணர்த்தும் நெறியிலேமட்டும் நின்றுவிடாது, படிப்போன் அநுபவிக்கக்கூடிய பயனை

யும் அப்பயனுக்கான நெறியையும் உணர்த்து முகத்தால் இது எல்லா மந்திர சாஸ்திரங்களினும் உயர்ந்த நூலென்னல் தகுதி யுடைத்து. இதனை யறியாதார் சிலர் இதன்கணுள்ள தலைப்புக்களை மாற்றியும், 'சூரவிபாடனனே' போன்ற சொற்றொடர்களுக்குப் பொருளறியாது மயங்கியும், திருப்பரங்கிரி யநுபூதி போன்ற போலிநூ லெழுதியும் விடுத்தனர். அதனால் செய்யுட்களின் தெளி பொருளோடு மந்திர இரகசியங்களையும் முன்னோர் கருத்தின் வண்ணம் வெளிப்படுத்துமாறே இவ்வுரை தொடங்கிய தெனவறிக. தண்டபாணி சுவாமிகள் புலவர் புராணத்தில் கந்தரநுபூதியிற் சித்தியடைந்து பெரும் புலவரான ஒருவரது புராணத்தையும் எழுதியுள்ளார். அதுவும் இக்கொள்கையையே வற்புறுத்தும்.

## பொழிப்புரை

தலைப்பு:—[விபூதி, ஐசுவரியம். ஒருவோன் ஐசுவரியம் பெறுமாறு இதனால் தியானிக்கப் பெறுவது. ஈண்டு ஐசுவரியம் என்றது, மனவலிமை என உணர்க.] மன வலிமையாகிய ஐசுவரியத்தைத் தரா நினைத்திருத்தல்.

செய்யுள்:—நெஞ்சமாகிய கனத்த கல்லும் நெகிழ்ந்து உருகுமாறு, தன்னை வந்தடைந்தபோது அருள்கின்ற ஆறுமுகக் கடவுளுக்கு இயல்பாக அமைந்த செஞ்சொற்களாலான மாலையானது சிறந்து விளங்க, ஐந்து கரங்களோடு கூடிய ஆனைமுகக் கடவுளது பாதங்களை வணங்குவாம்.

## விசேடக் குறிப்புகள்

இச்செய்யுள் அருணகிரியார் வாக்கல்ல. ஏன்? கந்தரலங்காரத்தின் முதற் செய்யுளில் "அடலருணைத் திருக்கோபுரத்தே....வடவருகிற் சென்று கண்டு கொண்டேன்....

கடதடகும்பக் களிற்றுக் கிளைய களிற்றினையே" என்று சொன்னது போலவே, இக் கந்தர் அநுபூதியிலும் முதலில் 'ஆடும் பரிவேல்........சாடும் தனியானை சகோதரனே' என விநாயக வணக்கம் அழகாகக் கூறியிருப்பதை நுணுகி நோக்குக. அன்றியும் 'தஞ்சத்தருள் சண்முகன்' என்பது அநுபூதி வாக்கன்று; 'பஞ்சக்கர' என்னும் வடமொழித் தொடரும் இலக்கணச் சிறப்பமைந்த தன்று.

பல விஷயங்களைப் பற்றியும் தமக்கு முருகக் கடவுளது அநுபூதி ஏற்பட்டபோது தாம் கண்ட முறைகளை மறைபோன்ற செய்யுட்களாக அருணகிரியார் அப்போதைக் கப்போது குறித்து வைத்தநா லிதுவானதுபற்றி, இந்நூலுக்கு எண் குறிப்பிடவேண்டிய அவசியமே இன்று. பின், 43 என்பாரும், 51 என்பாரும், 100 என்பாரும் உளரேயெனின், இவருள் எவரும் உண்மையைப் பூரணமாகக் கண்டாரல்லர். அருணகிரிநாதர் கண்ட ஒரு சிறப்பு மறைநூலுக்கு நூறு என்ற எண் உயர்வை யளிக்கும் என எண்ணின பெரியார் சிலரோ அல்லது ஒருவரேயோ தந்திரத்தின் வாழும் தவமாண்மைப் பெற்று, அவ்வருணகிரியார் நெறியையே பின்பற்றி இப்பிரபந்தத்தினை நூறாக்கினரென்க. அவரே இக்காப்புச் செய்யுளையும் கூட்டினரென்க. இந்நூலின் 93-வது செய்யுள் எனது நிஷ்டையின்கண் முருகப்பிரானாலேயே அளிக்கப்பெற்றதை அநுபவ வாயிலாக உணர்ந்த வெனக்கு இந்நூற்கணுள்ள நூறு பாட்டுக்களும் அநுபூதிச் செய்யுட்களே எனப் பறை சாற்றும் மனவன்மை கிடைத்தது. அக்காரணம்பற்றியே இக்காப்புச் செய்யுட்கும் உரை எழுதலானேன்.

இந்நூல் மனஸ்தத்துவ வுண்மைகளை விளக்கவெழுந்ததெனத் தெரிவிக்க முன் வந்தவர் ஆதியில் "நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந்துருக" எனத் தொடங்கினர். 'பஞ்

சக்கர' என்னும் சொற்றொடரால் பிரணவத்தின் கண்ணுள்ள ஐந்து எழுத்துக்களையும் தோற்றுவாய் செய்தாரேனும், பஞ்சாட்சரத்தையும் தொனிக்கச் செய்தார். இப்பஞ்சாட்சரமே விபூதி என்பதை வெளிப்படுத்தவே 'விபூதி நியானம்' எனத் தலைப்புமிட்டார். அகார, உகார, மகார, விந்து, நாதங்களாயுள்ள பொருள் யானைமுகக் கடவுளென்ப. சண்முகன் வியாபக முகம் வாய்ந்தவன். எப்படியெனில் ஆறுதாரங்களிலுமுள்ள வாரணமுகவன், மலரோன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவனென ஆறு தேவதைகளுந் தானே எனத்தோற்ற ஆறுமுகம் படைத்தவன். இனி 'அஞ்சுமுகந் தோன்றில் ஆறுமுகந் தோன்றும்' என்றபடி சிவபரத்துவ வாதிகளுக்கும் ஆதித்திய பரத்துவ வாதிகளுக்கும் ஏற்பட்ட பிரமாதமான கலகத்தை நீக்கிச் சமாதானம் செய்ய எழுந்த மூர்த்தம் என்ற பொருளிற் கொள்வாருமுண்டு. எவ்விதத்திலும் ஆறு என்ற எண்ணில் பக்தர்கள் மயங்காதிருப்பார்களாக. பஞ்சபூத தத்துவங்களோடு மனஸ் தத்துவத்தையும் தன்னுளடக்கியவனென்பதை அவனது பிறப்பு முறை கூறும் 'காந்தம்' உணர்த்தா நிற்கும்.

"தேவர் முறையிட நின்வடி வீந்தனை செய்யபொரு
ளாவலி னேங்கிய புன்மையினே னஃதறிந் தனனல்
தாவரு மன்னதை அனல்வளி யப்புகு சார்த்தியநங்
காவல் முறைபிற மாவியல் காட்டிற்றுக் கண்மணியே"

—கண்மணிமாலை.

விரிக்கிற் பெருகுமென இதனோடு நிறுத்தினேன்.

# நூல்

மதயானை அநுசரிக்க

ஆடும் பரிவேல் அணிசேவல் எனப்
பாடும் பணியே பணியாய் அருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனி யானை சகோதரனே ! 1

## அந்வயம்

தேடும் கயமா முகனைச் செருவில், சாடும் தனி யானை சகோதரனே ! ஆடும்பரி வேல் அணிசேவல் எனப் பாடும் பணியே பணியாய் அருள்வாய்.

## தோற்றுவாய்

இந்நூல் அருணகிரிநாதர் தமக்கு முருகனது அருள் தோன்றின போதெல்லாம் கண்ட உண்மைகளைச் செய்யுள் வடிவில் எழுதி வைத்த தனிப் பாசுரங்களாலான நூலென்பது முன்பே சொல்லப்பெற்றது. நம்பெரியார் யாவரும் தாம் கண்டு அநுபவித்த சுகங்களைப் பிற்காலத்து வரும் ஒவ்வொரு மாந்தரும் பெற வேண்டுமென்ற நோக்கத்தோடு நூல் எழுதுவதே யன்றித், தமக்காகப் பூஜா மாடங்கள் கட்டித் தம்மையும் தம் நூல்களையும் சாமானிய ஜன சமூகத்தினின்றும் வேறு படுத்தித் தம்மைத் தெய்வங்களாக வணங்குவதற்காக எழுதுவதன்று. இந்த நிலையில் அருணகிரி நாதருடைய பரகாயப் பிரவேச வன்மையும் அவருடைய கிளிரூபத்வமும், அக்கிளி தனது மூக்கால் எழுதுகையும் இந்நூற் பெருமையை உணர்த்தவேண்டற்பாலனவல்லவென்று உணர்க. 'எமது நண்பர்களினின்றும் என்னைக் காப்பாற்றுக' என்னும் ஆங்கிலப்பழமொழி

போன்றது பெரியார் நூலுக்கெல்லாம் இவ்வகைப் புராணம் கற்பிப்பதென்பது. இப்புராண கற்பனை, உண்மையை ஒரு பக்கத்து ஒதுக்கி மறைத்து விடுவதோடு, அப்பெரியார் நூலின் உள்ளக்கருத்தை யுணர்ந்து அவ்வகை அநுஷ்டிக்கும் வன்மையும் மாந்தர்க்கு ஏற்படாதபடி செய்கின்றது. ஆனது பற்றி, இவ்வநுபூதி கற்போர், இத்தகைய புராணக் கதைகளில் மயங்கி நின்று விடாது, அப்பெரியார் தமது நூலிற் கூறியுள்ள வழிகளை யநுஷ்டித்துத் தாங்களும் பிறப்பின் பயனை அடைவார்களாக என எச்சரித்து இச்செய்யுளின் உரையைக் கூறத் தொடங்குகின்றேன்.

## பொழிப்புரை

தலைப்பு :—[மதம் கொண்ட யானையைத் தன் வழி நடக்கச்செய்ய விரும்பும் மாவுத்தன் ஓதும் மறை இது வானதுபற்றி இத்தலைப்புக் கொடுத்தார்.] மதங்கொண்ட யானை தன்னிச்சைப்படி நடக்குமாறு செய்ய.

செய்யுள் :—[பின்னிரண்டடியை விளியாக முற்கொணர்ந்து நிறுத்தி, முன் இரண்டடியை அதனோடு இயைத்துப் பொருள் கொள்க.] தன்னை எதிர்ப்பவர்களைத் தேடிச் செல்லும் கஜமுகாசுரனை யுத்தத்தில் கொல்லுகின்ற ஒப்பற்ற யானைமுகக் கடவுளோடு உடன் பிறந்த முருகக் கடவுளே! (உனது) ஆடுகின்ற குதிரையாகிய மயில் என்றும், (உனது) படையாகிய வேல் என்றும், அழகிய (கொடியாகிய) சேவலென்றும் பாடும் வேலையையே (எனக்கு) வேலையாக அருள்வாயாக.

## விசேஷக் குறிப்புகள்

யானையை அடக்கியாள விரும்புவோன் கொள்ள வேண்டிய மனோபாவனையை மாந்தர்க்கு ஊட்டும் மறை யிது. நான் வணங்கும் தெய்வம் யானை முகத்தோடுவந்த

அசுரனைக் கொன்ற கஜமுகக் கடவுளது சகோதரனென்ற பாவனை வலுக்கவே, 'துஷ்டத்தனம் செய்யும் யானையைச் சிக்ஷிக்கும் ஆற்றல் அக்கந்தனது அநுபூதி பெற்றதனால் தனக்கும் உண்டு' என்னும் உண்மையை, ஒருவன் தன் உளத்தில் நன்றாகப் பதித்துத் தனது மனவலியைப் பெருக்கிக் கொள்ள இம்மறை ஏதுவாவது காண்க. அம்முருகப்பிரானது சாயுஜ்ஜிய பாவனையில், ஸர்வாண்டங்களையும் தனது உருவாகக்கொண்ட மயிலைத் தன் வாகனமாக வுடையவனது சக்தி தன்னைவந்து பற்றிக்கொண்டதென எண்ணுவதனால் தனது விசுவரூபத்தை இம்மறை யோதுவோர் அநுபூதி வாயிலாக அடையும் வழியையும் உய்த்துணர்ந்தறிக. இவ் வுண்மையை, "தடக்கொற்ற வேள் மயிலே......திரிகுவையே" (க. அல. 96.) என்பதுகொண்டு கண்டறியத்தகும். இதனோடு நில்லாது தன் கைக் கோட்டி வேலனது வேலென்ற பாவனையையும் கொள்ளத்தூண்டியது இச்செய்யுள். அன்றியும், "படைபட்ட வேலவன் பால் வந்த வாகைப்பதாகை........இடிபட்டவே" (க. அல. 12) என்ற கருத்தையும் ஓதுவோன் மனங்கொள்வானாயின், தனக்குத் துணை வலி எவ்வளவு உண்டென்பதை எளிதின் உணர்வானாதுபற்றி, அவனால் ஒரு மதயானையையேயன்றி ஒரு மந்தை மதயானைகளையும் அடக்க முடியுமென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் வெளியாகும். எனினும் மாவுத்தனது தொழிலில் நிற்பவன் இத்தியானத்தை ஒரு நிமிஷம்கூட விட்டிருக்கலாகா தென்பதை வற்புறுத்துவான், 'பாடும் பணியே பணியாய் அருள்வாய்' என்றார். அதனாலேயே, மாவுத்தர்கள் தெய்வபக்தி வாய்ந்தவர்களாயும் எப்போதும் தூய்மையுள்ளத்தோடு கூடியவர்களாயும் இருக்க வேண்டுமென்பதையும், அந்நிலையினின்று நழுவின் தம் ஆற்றலை இழக்க நேரும் என்பதையும் சூசிப்பித்தபடி

யாகும் இம்மறை. ஏனையோரும் இதனால் பயன் பெறலாமென்பதையும் உணர்த்தியபடி.

இச்செய்யுளிலேயே கஜமுகனையுங் கூட்டி புரைத்து வைதிக சம்பிரதாயத்தை நழுவ விடாதபடி பாதுகாத்ததையும் உணர்க. அசைந்தாடும் யானையை யடக்கத் தியானஞ் செய்பவன் ஆடும்பரியைத் தியானிப்பது அநுகூலத்தைத் தருவதென்பதும், 'மத்த வாரணத்தைக் கண்டால் விடுமோ மற்றவ்வாரணமே' என்ற பெரியார் வாக்கின்படி, சேவல் தியானத்தின் பயன் மிகவும் அதிகமானதென்பதும் ஊகிக்கக் கிடப்பதென்பர் ஒரு சாரார். இவற்றை வலிந்து பொருள் கொள்ளுதலில் அடக்குவர் மற்றொரு சாரார். ஆனதுபற்றி இவற்றை மிகவும் விரித்திலனென்க.

வணங்காரைத் தண்டிக்க

உல்லாச நிராகுல யோக விதச்
சல்லாப விநோதனும் நீ அலையோ
எல்லாம்அற என்னை இழந்த நலம்
சொல்லாய் முருகா சுரபூ பதியே. 2

அந்வயம்

முருகா! சுரபூபதியே! உல்லாச நிராகுல யோகவிதச் சல்லாப விநோதனும் நீ அலையோ? எல்லாம் அற என்னை இழந்த நலம் சொல்லாய்.

பொழிப்புரை

தலைப்பு :—[தன்னை மதியாமலும் தன் சொல்லுக்கு அடங்கி நடவாமலும் ஒழுகும் யாத்தரைத் தண்டித்துத் தனக்கு அடங்கி நடக்குமாறு செய்யும் நெறியை உணர்த்தும் மறை இது.] வணங்காதவர்களை சிக்ஷிக்க.

செய்யுள் :—முருகக் கடவுளே! தேவலோகத்துக்கு அதிபதியே! ஸந்தோஷ சித்தமும், துக்கமற்ற தன்மையும், பலவகைப்பட்ட யோக வழியில் நின்று பேசும் வன்மையும் பெற்ற வேடிக்கை வாய்ந்தவனல்லவா நீ? உலகத்தில் ஒன்றிலும் பற்று அறநின்று என்னையும் யான் இழந்து (உன் மயமாக) நிற்கும் நன்மையை (எனக்கு) உபதேசிப்பாயாக.

## விசேடக் குறிப்புகள்

உலகத்து மதியாதாரை மதிக்குமாறு செய்வதற்கான தந்திரம் இம்மறையிற் கூறப் பெற்றுள்ளது. 'இடுக்கண் வருங்கால் நகுக' என்றபடி, துன்பம் எதிர்ப்பட்டுழி அத்துன்பத்துக்கு மாறான இன்ப நிலையை மனங்கொண்டு ஒன்றையும் மதியாதவனாக உரையாடுதலே சிறந்தநெறி என்பதை வற்புறுத்த வந்தவர், 'உல்லாச..........நீ அலையோ?' எனக் கேள்வி முகத்தால் அறிவுறுத்தினார். "எல்லார்க்கும் காலன் துறவு ஈவான் ஈயாமுன் நல்லார் துறப்பர்." என்பதைப் பின்பற்றி ஒழுகுவதனால் எவனாலும் (யமனாலும் கூட) வெல்ல முடியாது என்பதை நன்குணர்த்துவான் "எல்லாம் அற என்னை இழந்த நலம் சொல்லாய்" என முருகனிடத்து இரந்து நின்றார். 'நிராசை யின்றேல் தெய்வ முண்டோ?' என்னும் தாயுமானார் வாக்கையும், 'உன் மேல்வேஷ்டியைக் கேட்டால் அரைவேஷ்டியையும் அவிழ்த்துக் கொடு' என்னும் இயேசுவின் வாக்கையும் இது நினைப்பூட்டுகிறது. இக்கருத்தை மனத்துட் கொண்டே இந்நூலாசிரியர் "காலன் வெம்பி, வந்து இப்பொழுது என்னை என் செயலாம்? சத்திவாள் ஒன்றினால் சிந்தத் துணிப்பன் தணிப்பரும் கோப த்ரிசூலத்தையே" (க. அல. 59) என்றும், 'என் அவிரோத ஞானச் சுடர் வடிவாள் கண்டாயடா?' (க. அல. 25) என்றும், தமது கந்த

ரலங்காரத்துக் கூறியுள்ளார். ஒருவனது விரோதிகள் அவனுடைய பாச நிலைகளை யுணர்ந்து அப்பாசத் தூண்டில்களை அவன்மாட்டு வீசி அவனை வணக்குவது கண்கூடானது பற்றியே, ஒன்றிலும் பற்றில்லாது நிற்கும் தன்மை அத்தகைய விரோதிகளது என் முனைப்பை முறித்து அவர்களை அவன்மாட்டுப் பணிவோடு நடக்குமாறு செய்யுமென்பதனை இம்முறையால் விளக்கினார். இதனை ஒவ்வொருவரும் தமது அநுபவத்திலும் உணர்ந்தறியலாகும்.

## கல்வியில் மேச்ச

வானோ புனல்பார் கனல் மாருதமோ
ஞானோ தயமோ நவில்நான் மறையோ
யானோ மனமோ எனை ஆண்ட இடம்
தானோ பொருளாவது, சண்முகனே ! 3

## அந்வயம்

சண்முகனே ! பொருள் ஆவது, வானோ புனலோ, பாரோ, கனலோ, மாருதமோ, ஞானோதயமோ, நவில் நான்கு மறைகளோ, யானோ, மனமோ, எனை ஆண்ட இடம் தானோ ?

## பொழிப்புரை

தலைப்பு :—[படிப்பிற் றேர்ந்தவனெனப் பலரும் தன்னைப் புகழ உதிப்பணர்கும் மறை இது.] படித்துணர்ந்தவனென்று பலரும் கொண்டாட.

செய்யுள் :—(ஆறு நாமங்களிலும்) வியாபித்த முகத்தோடு கூடிய முருகக்கடவுளே! நான் லக்ஷியமாகக் கொள்ள வேண்டியது வான் முதலிய ஐந்து பூதங்களையா ? அல்லது ஞானம் உதயமாகும் நிலையையா ? (அன்றிப் பலரும்)

சொல்லுகின்ற நான்கு வேதங்களையுமா? (அல்லது) இவற்றை யெல்லாம் உணரும் என்னையேயா? அல்லது என்னறிவிற்குக் கருவியாயுள்ள மனதையா? அன்றி என்னை நீ ஆட்கொண்டு வெளிப்படும் பூமிகை (அல்லது யோகநிலை) யையா? (நீ சொல்வாயாக.)

## விசேடக் குறிப்புகள்

ஈண்டு குருவின் மேலான அநுக்கிரஹம் உணர்த்தப் பெறுகிறது. உலக கல்வி, உயர் அருள் ஞானம் என இரண்டு உள. இவற்றுள் உலக கல்வியினும் அருள் ஞானமானது சிறந்தது. ஏனெனில் அது பிரத்தியக்ஷ அநுபூதி ஞானமானதுபற்றி. இதனை உட்கொண்டே, முனிவரது இலக்கணம் கூறப்புகுந்த நக்கீரர், 'யாவதும் கற்றோர் அறியா அறிவினர், கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர்'' என்று சொல்லிப் போந்தார். இம்முறையினிடத்தே அருணகிரிநாதர் அந்தப் பிரத்தியக்ஷ ஞானநுபவத்தைத் தெள்ளிதின் உணர்த்தியுள்ளார். எச்சிற்குப் பட்டினத்தார் கூறிய இலக்கணம் போலவும், குருவுக்குத் தாயுமானுர் கூறிய இலக்கணம் போலவும் உள்ளது, கல்விக்கு அருணகிரிநாதர் கூறிய இவ்விலக்கணமென்க.

"எச்சிலென்று சொல்லி இதமகிதம் பேசுகிறீர்
எச்சி லிருக்கு மிடமறியீர்—எச்சில்தனை
உய்த்துணர்ந்து பார்த்தா லுண்மை வெளிப்படும்பின்
சுத்த நிராமயமே யாம்." —பட்டினத்தார்.

"தானேயு மிவ்வுலக மொருமுதலு மாகாத்
தன்மையினாற் படைத்தளிக்கும் தலைமை யதுவான
கோனைக வொருமுதலிங் குண்டெனவும் யூகம்
கூட்டியதும், சகமுடிவிற் குலவுறு மெய்ஞ்ஞான

வாளுக வம்முதலே நிற்குநிலே நம்மால்
மதிப்பரிதா மெனமோனம் வைத்ததும், உன்மனமே ;
ஆனாலும் மனஞ்சடமென் றழுங்காதே ; உண்மை
அறிவித்தஇடம் குருவாம் ; அருளலது ஒன்றிலேயே.''

—தாயுமானர்.

பூத சமுதாயங்களுக்கு முதன்மையதான வானைக் கூறி அது வல்லவென ஒழித்து, அதிலிருந்து வெளியாகும் மற்ற பூதக்குழுக்களையும் எடுத்தோதி அவற்றையும் ஒழித்து, ஞானம் தோன்றுவதோ எனக் காரியப்பாட்டை ஐயுற்று அதையும் நீக்கி, அக்காரியப் பாட்டால் தடித்து எழுந்து விளங்கிய முந்தை நான் மறைகளும் நித்தியப் பொருளைத் தெள்ளிதின் விளக்கத் தடையாக நிற்பதை யுணர்ந்து அவற்றையும் விலக்கி, இத்துணை யறிவிக்கும் துணைக் கருவியாயுள்ள பசு ஞானத்தையும் அகற்றி, அப் பசு ஞானத்துக்குப் பற்றுக் கோடாகவுள்ள மனதையும் 'சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும் மன மிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே' என்றபடி ஒழித்து நீக்கி, "யான் தானென்னத் தோன்றாது எல் லாம் விழுங்கும் சொரூபமாகி, அல்லை உண்ட பகல்போல அவித்தையெல்லாம் அடைய உண்டு, தடையற உன் அறி வைத் தானே வெல்ல உண்டு, இங்கு உன்னையும் தானகக் கொண்டு, வேதகமாய்ப் பேசாமை விளக்கும்" அருளை தன்னை ஆண்ட இடம் என்பதை முடிவுபடுத்திக் காட்டு வார், 'எனை ஆண்ட இடம் தானே பொருள் ஆவது ?' என வினு முகத்தாற் கூறிக் கடாயினர் என அறிக. "துரி யாதீத மகணிடையே புருடனென்றி யமருஞானம் பழுத் திடு சிந்தைய ரறிவர்" என்றபடி, இத்தகைய உண்மை ஞானத்தைப் பெறுவதற்கே கல்வி துணை செய்யவேண் டுமேயன்றிக் கடபடமென்று உருட்டுதற்கு அல்லவென்

பதை இம்மறையால் வற்புறுத்திக் காட்டியதும் அறிக. இவ்வுரையை எவ்வளவு விரிப்பினும் அநுபவஞான இச்சையில்லாதார்க்கு ஒரு பயனும் அது தருதவிலதாகு மானது பற்றி இதனோடு நிறுத்தலாயிற்று.

“ஐயா அருணகிரி அப்பா வுனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர் யார்?”

என்று தாயுமானுர் கூறியதற்கு இச்செய்யுளும் ஒரு காரணம் போலும்!

துறவு பேற

வளைபட்ட கைமாதொடு மக்கள் எனும்
தளைபட்டு அழியத் தகுமோ தகுமோ
கிளைபட்டு எழுசூர் உரமும் கிரியும்
தொளைபட் டுருவத் தொடு வேலவனே. 4

அங்வயம்

கிளைபட்டு எழுசூர் உரமும் கிரியும் தொளைபட்டு உருவத் தொடு(ம்) வேலவனே! வளைபட்ட கை மாதொடு மக்களெனும் தளைபட்டு அழியத் தகுமோ? தகுமோ?

பொழிப்புரை

தலைப்பு:—[‘உற்றுரையான் வேண்டேன்.......வேண்டுவனே’ என்றபடி ‘தேட்டமொன்று அற அருட் செயலில் நிற்’றற்குப் போதிக்கும் மறை இது.] வேண்டாம் என்ற நிலையைப் பெற.

செய்யுள்:—(வேலானது ஊடுருவிய பின்னர் மயிலாகவும் சேவலாகவும்) கிளைத்து வெளிவந்த சூரபத்மனது நெஞ்சும், (கிரௌஞ்ச) கிரியும் பிளந்துபட ஏவிய வேலாயுதத்தை யுடைய முருகக் கடவுளே! வளையல்களை யணிந்த

கைகளோடு கூடிய மனைவியென்றும், குழந்தைகளென்றும் சொல்லப்படும் சுற்றங்களால் ஏற்படும் பாசமாகிய விலங்கினால் நான் கட்டுப்பட்டு எனது பிறவிப்பயனை இழந்து கெடுவது நியாயமாகுமோ? (நீ சொல்வாயாக.)

## விசேடக் குறிப்புகள்

இச்செய்யுளைப் புராண கதையின்றியே தத்துவமாகப் பொருள் கொள்ளுமாறும் ஆசிரியர் அமைத்துள்ளார். அருளை நாடி அநுக்கிரஹம் பெற விரும்பும் உபாஸகனுக்கு முருகனது வேல் தனது சிரத்தூடும் நெஞ்சூடும் பாய்ச்சப் பட்டுப் 'பிரமரந்திரப் பெருவழி திறப்பதும்' நெஞ்சத்தினிடத்துள்ள ஆசாபாசா வுணர்ச்சிகள் களையப்படுவதும் நன்றாகத் தெரியவரும். இவ்வநுபவத்தைச் சிவகிரிப் புராணம், புலிப்பாணிப் படலத்தில்,

" வீழ்தலு முருக னுருவமாங் கவன்மேல்
விழுமிய தனதடி யமைத்துக்
காழ்படு வினையின் கதிப்பினை யொழிந்தாய்
கருத்தினிற் கவலுற லினிநீ
பாழ்படு மவதி நீங்கினய் காமே
பண்டைய புலியுருக் கொளுமால்
தாழ்கலை யெவர்க்கும் வையக ருன்னைச்
சாற்றுவார் புலிக்கா னென்றே "

" வேலினைச் சிரத்தி னிறுவினன், றெழுநோய்
மேவுறு முடலினில் வேலும்
கோலினிற் புண்போ னுழைவுறக் கண்டான்,
கூடிய பத்தரை மாற்றுத்
தோலினை யடைந்தான், தொழுதன னெழுந்தான்,
துள்ளினன் கூத்தக ளாடி,
மாலினின் மருகா வென்னிரு வினையை
மறுக்கிய முருக செவ்வேளே ?"

ஆதிய செய்யுட்களால் அறியலாம். இம்முறையிற் பொருள் கொள்ளில்,

"ஒன்று பலவாகக் கிளைத்துத் தோன்றுகிற எனது (சூர்)அச்சத்தைப்பொருந்திய நெஞ்சமும்,எனது (கல்லென நிற்கும்) சிரமாகிய மலையும், தொளைபட உருவிச் செல்லுமாறு எனது சிரத்தின்மேல் துவாதசாந்தத்திலுள்ள உனது உபயபாதங்களையும் நிறுத்தி, எனது குண்டலினி சக்தியை நிமிர்த்திச், சுழுனையாருக லம்பிகாயோகம் யான் புரிந்து அச்சத்தையும் அவ்வச்சத்துக்கு ஏதுவான அஞ்ஞானங்களையும் ஒழித்து எனது ஆசாபாசக் கொத்துக்கள் அறுந்தோட யான் கபாலமோட்சத்தைப் பெறுமாறு உனது வேலை எனது சிரசூடும் நெஞ்சூடும் உருவச் செலுத்தும் வேலனே" எனப் பின்னிரண்டடிக்குப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

### மாயையை ஒழிக்க

மகமாயை களைந்திட வல்லபிரான்
முகமாறு மொழிந்து மொழிந்திலனே !
அகமாடை மடந்தைய ரென்றயரும்
சகமாயையுள் நின்று தயங்குவதே ? 5

### அங்வயம்

மகமாயை களைந்திட வல்லபிரான் முகம் ஆறும் மொழிந்தும் மொழிந்திலன் (ஏ) ! (மொழிந்ததும் அம்மொழியை யான் பின் பற்றியதும் உண்மையாகில்) அகம், ஆடை, மடந்தையர் என்று அயரும் ஜகமாயையுள் (யான்) நின்று தயங்குவதே ?

இச்செய்யுளை வேறு விதமாக அங்வயிப்பாரும் உளர். மகமாயை...........மொழிந்தும், அகம் ஆடை........(நான்)

தயங்குவது ஒழிந்திலன்' என்று கூறுவோர் கூற்று அத்துணைச் சிறப்பினதன்று என்பது விசேடக் குறிப்பைப் படிப்போர்க்கு நன்கு விளங்கும்.

## பொழிப்புரை

தலைப்பு :—[உள்ளதை விடுத்து இல்லதில் களிக்கும் பிராந்தி ஞானமாகிய மாயையினின்றும் ஒருவன் ஒழிந்து நிற்க ஓதி புணரும் மறை இது.] பிறழ்வறிவை நீக்க.

செய்யுள் :—மகத்தாகிய மாயையும் நீக்கவல்ல பிரானாகிய முருகக்கடவுள் தன்னுடைய ஆறுமுக தத்துவத்தையுபதேசித்தும் அவ்வுபதேசத்தைச் செய்யவில்லை என்றே யான் எண்ணவேண்டி யிருக்கிறது! (ஏன் ?) அப்படி அவன் சொல்ல நான் உணர்ந்திருப்பின், வீடு, ஆடை, பெண்டிர் என்று (மயங்கி அவற்றில் உழன்று) அயர்கின்ற ஜகமயக்கத்துள் (நான்) தயங்குவதாகுமா ?

## விசேடக் குறிப்புகள்

மகத் என்னும் மூலப் பிரகிருதியை ஒழிந்து நிற்க வல்லவன் பிரான் என்பார், 'மகமாயை களைந்திட வல்ல பிரான்' என்றார். 'களைந்திட' என்ற சொற் பிரயோகத்தால் தானொழிந்து நிற்பது மட்டுமே யன்றித் தனது அநுபூதியை அடைந்தவர்களும் ஒழிந்து நிற்குமாறு செய்ய வல்லவனென்பது தெளிவாயிற்று. இதனுண்மையை,

“ அவ்யக்த நின்று மனிர்வச னீய அருநெறியில்
இவ்யக்த முற்ற தெனும்பேர் விலங்கல் எழிற்பொழிலில்
எவ்யக்தமு முறத் தோன்றினை சாலும் இனிஉனது
திவ்யக் குழுவடைந் தோய்வு பெறத் துயில்சேருகவே ”

என்னும் சத்திநிபாதக் கோவைச் செய்யுளாற் காண்க. நிர்க்குணமான இறைவனைச் சக்திபற்றி நிற்பதும் அவ்வல்லமை

யிறைவனுக்குள் ஒடுங்கி நிற்குங்கால் உலகினது இல்லாமை யும், அவ்வல்லமையை அவ்விறைவனே விரியுமாறு விடுங் கால் அகிலப் பிரபஞ்சமும் மகத் தத்துவத்திலிருந்து வெளிப்படும் குணத்ரய பேதங்களால் விரிந்து வெளிப் பட்டு நிற்பதும் வெளியாகும். இதனை இம்மாதிரி கொள்ள வறியாது அநிர்வசனீயமென ஓர் இல்பொருள் முறைமை யைக் கையாண்டவரது மதத்தைக் கண்டிக்கவே சத்தியி னது சமய வுண்மை எடுத்துரைக்கப் பெற்றது மேற்கோட் செய்யுளில் என்று அறிக. இத்தகைய சக்தி அண்டத்துப் பரவி நிற்பது போலவே, பிண்டாண்டமாகிய உடலிலும் பரவி நிற்கின்றது என்பதை விளக்க வெழுந்தவர் 'முக மாறும் மொழிந்தும்' என்றார். அம்மொழியின் வரலாறு இது :

"ஆறு முகங்களும் ஆறு ஆதார தேவதைகளின் பிரதி நிதிகளாக நிற்பன. அவை வாரணமுகவன் முதல் அறு வர் என்பது காப்புச் செய்யுளின் விசேடக் குறிப்பில் கூறப்பெற்றது. இத்தேவதைகளை யாராதிப்பதனால் அவ் வவ்வாதாரங்களில் குறிக்கப்படும் இதழ்களின் அளவு கொண்ட பாசவுணர்ச்சிகள் விலக்கப்படுகின்றன வென்பது மந்திரமயி குண்டலினி மார்க்கத்தின் இரகசியம். இதற் காகவே ஆதாரசக்கரங்களில் இதழ்கள் குறித்துக் காட்டப் படுகின்றன. மூலாதார சக்கரத்திலுள்ள 4 இதழ்கள் அங்கு எழும் நான்கு விதமான பாச வுணர்ச்சிகளை உபாஸ கனுக்கு ஞாபகமூட்ட அமைக்கப்பெற்றன. அவ்வுபாஸ கன் தனது உபாஸனை பலத்தினால் அங்கு தோன்றும் நான்கு வகைப்பட்ட பாச உணர்ச்சிகளையும் அறுத்தெறிகி றான். இவ்விதமாகவே சுவாதிஷ்டானத்தில் குறிக்கப் படும் சக்கரத்திலுள்ள ஆறு இதழ்களினால் சூசிப்பிக்கப் படும் ஆறுவித பாச உணர்ச்சிகளையும் உபாஸகன் தியான

தாரணையினால் அறுத்தெறிகிறான். அதுபோலவே மணி பூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை என்ற விடங்களில் முறையே குறிக்கப்படும் 10, 12, 16, 2 என்னும் இதழ் களால் சூசிப்பிக்கப்படும் பாச வுணர்ச்சிகள் அவ்வவ் வாதா ரங்களிலுள்ள தேவதைகளைத் தியானித்துச் சித்தியடைவ தால் உபாஸகனால் தொலைக்கப்படுகின்றன." என்பது.

இவ்வுண்மையை முற்றும் முருகப்பிரான் எனக்கு மொழிந்திருப்பானாயின் யான் அவ்வழியில் சித்தியடைந்து சகமாயையுள் நின்று தயங்கி யிருக்கமாட்டேன் என்பது நிச் சயம். அப்படி நான் தயங்குவதாக எனக்குத் தெரிவதால் அவன் சொல்லியும் சொல்லாததுபோலவே நான் நினைக்கி றேன் என்று சொன்னபடி. இனி முருகப்பிரான் சொல்லியும் எனக்கு அநுஷ்டான பலமில்லாததால் சகமாயையுள் நின்று தயங்குவது ஒழிந்திலன் எனக் கொள்ளவேண்டுமென்பா ரது உரையில், 'அவனன்றி ஓரணுவுமசையாது' என்ற அநுபூதி ஞானத்துக்குக் குறை ஏற்படுவது காண்க. 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ அதற்கு நாயகமே' என் னும் பெரியாரின் வாக்குண்மை பொய்க்குமாறும் அறிக. அதனால் மொழிந்தும் அம்மொழி ஏகதேசமாக யான் உணரு மாறு மொழிந்ததாகத் தெரிகிறதே யன்றி முற்றுணர்வு அம்மொழியினிடத்து ஏற்படுமாறு எனக்கு மொழியவில்லை என்பதை ஒரு குறையாக எடுத்துக் காட்டி அப்பிரானையே மாயையை யொழிக்கத்தக்க முற்றுணர்வை மேற்சொன்ன நெறியில் தருமாறு பிரார்த்தித்தபடி அறிக.

இனி, "இவ் வாறு முகங்களால் குறிக்கப்படும் ஆறு ஆதாரங்களிலும் எழும் பாசவுணர்ச்சிகளை ஜோதிர்மயி குண்டலினிநெறியால் எழுப்பச் சொல்லிக் கொடுக்கவில்லை. அதனால்தான் நான் சகமாயையுள் நின்று தயங்குகிறேன். ஆனதுபற்றி அந்நெறியையும் எனக்குப் போதிப்பானாக"

என்று குருமுகமாகப் பெற விழைந்து அநுஷ்டித்து மன மாயையைப் போக்க வெண்ணிப் பிரார்த்தித்து அதையும் பெற்றாரென்றலும் ஒன்று. இம்மந்திரமயி ஜோதிர்மயி குண்டலினியின் விரிவையெல்லாம் ஷட்சக்கிர நிரூபணம் என்னும் வடமொழி நூலில் கண்டு உணர்க. இவ்விரு நெறிகளி லொன்றினுறுகப் பாச உணர்ச்சிகள் தொலைந்தவர்,

"உலக முறைகளிற் றேய்ந்தே யுடலை யொழிக்கினுமென்
கலக மிடுகயற் கண்ணியர் வெம்முலை தோய்கினுமென்
நலகவின் யோக வழிகளிற் சென்று நலியினுமென்
கலைகளை யோதினென் என்னை யடைந்தபிற் கண்மணியே"
—கண்மணிமாலை.

என்றபடி உலகியல்களிற் பழகும்போதும் மோனத்தின் மனதை வைத்துப் பற்றற்று நிற்பாரென்னும் உண்மை வெளிப்படுவதுணர்க. அருணகிரி நாதர் உள்ளத்துறவில் நம்பிக்கை யுள்ளவரேயன்றி வேஷத் துறவுகளில் நம்பிக்கை யில்லாதவரென்பதை அவரையும் சம்பந்தாண்டானையும் புணர்த்திக் கூறும் சரித்திரமே வெளிப்படுத்தும். அத் துறவு பெற்றாலன்றி மனஸ் தத்துவ வுண்மைகளை அறிதல் இயலாது. அத்துறவும் மாயையின் மயக்கமுள்ள வரையில் ஏற்படாது. ஆனதுபற்றியே இம்மாயையின் மயக்கத்தை ஒழிக்கவே இம்மந்திரத்தைத் தனக்கு அநுபூதி ஏற்படு முகத்தால் பிறருக்கும் உபதேசித்தனரெனக் கொள்க. இனி விரிப்பிற் பெருகும்.

### மாதரைத் தழுவ

திணியான மனோசிலைமீ துனதாள்
அணியார் அரவிந்தம் அரும்பு மதோ
'பணி யா?' எனவள்ளி பதம் பணியும்
தணியா அதிமோக தயாபரனே. 6

## அந்வயம்

பணி யா(து) என வள்ளிபதம் பணியும் தணியா அதி மோக தயாபரனே! திணியான மனோசிலைமீது உன தாள் (ஆகிய) அணி ஆர் அரவிந்தம் அரும்பு(ம் அதோ) மோ? (சொல்லுவாயாக.)

## பொழிப்புரை

தலைப்பு:—[(தன்னோடு ஊழின் பயனாகப் பழக நேர்ந்த) மாதர்களோடு (தெய்வ சம்மத மது வென வெண்ணி) ஸல்லாபிக்கச் செய்யும் மறை இது.] மாதரோடு கூடிப்பழக.

செய்யுள்:—'எனக்கு இட்டவேலை எது?' என்று கேட்டுக் கொண்டே வள்ளி நாச்சியாரது பாதங்களில் வணங்குகின்ற குறையாத பெருமோகமுள்ள அருளுக்கிடமான முருகக் கடவுளே! நெகிழ்ச்சி யென்பதே யில்லாத என் மனமாகிய கல்லின்மீது உனது பாதங்களாகிய கிருபை நிறைந்த தாமரைப் பூக்கள் பூக்க இடமேற்படுமா? (நீ சொல்லுவாயாக.)

## விசேடக் குறிப்புகள்

ஈண்டு உலக நெறிக் கண்ணுள்ள இரண்டு பாகு பாடுகள் நன்றாகக் கருதத்தக்கன. ஒன்று கேவலம் அறநெறி; மற்றொன்று அருள் நெறி. அறநூலாரது மதத்தைக் குறளாசிரியர் "அறன்கடை நின்றாருளெல்லாம் பிறன்கடை நின்றாரிற் பேதையாரில்" என நன்குணர்த்திச் சென்றார். அதற்கு முன்செய்யுட்கு உரை கூறிய பரிமேலழகரும் காமநூலாரும் கண்டித்திருப்பதை எடுத்துக் காட்டிப் பாரீயத்தைக் கண்டித்தபடியாகும் அக்குறளென எழுதி விளக்கிப் போந்தார். இனி அருள்நெறியென்பது இன்னதென நோக்குவோம். இந்நெறியைப் பெருந் திணைக்குள் அடக்குவர் அகப்பொருளிலக்கண முறைப்போர். இந்நெறியில் மெய்

யுறு புணர்ச்சி நிகழ வேண்டுமென்பது கட்டாயமின்று. ஐம் பொறிகளையும் நன்கு அடக்கின ஆண் பெண் இருபாலார்க் கும் இடையே நடைபெறும் அளவளாவுகள் கேவலம் அன்புபற்றி நிகழ்பவையானதுபற்றியும், அந்நிகழ்வுகளாற் சமூக ஒழுக்கத்துக்குத் தீங்கு நிகழாதானதுபற்றியும், அருள்பெற்ற ஆண் பெண் பாலார்களாலன்றி இம்முறை மற்றவர்களாலறியக் கிடக்காமைபற்றியும், இத்தகைய நிகழ் ச்சி யொன்று தவற்றின்கட் படாததாக உள்ளதென்பதை யே இம்மறையாற்குறிப்பிட்டார். இதன் உண்மை, ஏட்டறங் களை மட்டும் ஓதுதல் வாயிலாக உணர்ந்து உலக அநுபவம் இல்லாதவர்களால் அறியக் கிடப்ப தொன்றன்று. இவ்வுண் மையை முற்றும் அநுபவிக்கவல்ல மனைவியும், சத்தி நிபாதத்தால் வரும் தேகசமத்துவ தத்துவமும் இல்லாத வர்கள் இத்தகைய உண்மைகளை யநுபவிக்கும் அருட் குணப் பெரியாரைக் காமுகர்களென மயங்கி அப்பெரியார் களது பாப மூட்டைகளைத் தாங்கிச் செல்ல முன்வருவதும் உலகத்திற் கண்கூடு. அருள் நெறி அறநெறிக்கு மாறாக எக்காலத்தும் செல்லாதாயினும் அறநெறியால் அநுபவிக்க முடியாத சில ஆன்ம வின்பங்களை அது அநுபவிக்கச் செய் யும். அவ்வான்ம வின்பம் ஆண் மக்களிடத்து மட்டு மறி யப்படுமேயன்றிப் பெண்மக்களிடத்து அறியப்படமாட்டா வென நினைப்பது அறியாமை. கடவுளது சிருஷ்டியே ஆண் பெண் ஈருருக்கொண்டு ஆன்ம லாபத்தைப் பெற வேண்டு வதற்காக ஏற்பட்டிருக்க, அதனை அறியும் பக்குவமும் தேகதிடமும் மனோதிடமுமில்லாது சந்நியாசிகளாகவும், பிக்குணிகளாகவும் சென்று மனப் பண்பைக் கெடுத்துக் கொள்வது நல்ல நெறியாகுமா? ஆகாதென்பதை வற்புறுத் தவே அருணகிரியார் இம்மறையைக் கூறினர். மனித ஒழுங்குகள் ஒரு புறம் அமைந்து கிடக்க, தெய்வ ஒழுங்கை

எல்லாரும் அறிய வேண்டுமென்ற அருள் மனத்தோடு, அசுத்த மாயையைக் கடந்தார் அநுபவிக்கவல்ல வின்பங்களை இச்செய்யுளில் உணர்த்தினர். மாதர் என்ற மாத்திரையானே பாபமூட்டைகளென ஒதுக்கப் பார்ப்பவர் அறியாதாரென்பதும், அம்மாதரிடத்தும் சரீர சுகமேயன்றி உள்ள வோட்டங்களை யுணர்வதாலுண்டாகும் இன்பமொன்றுண்டென்பதும் இதனால் வெளியாயின. இவ்வுண்மையே 'மாயையை ஒழிந்தால் நடக்கக் காலெழுமோ!........'முதலிய பிரபுலிங்கலீலைச் செய்யுட்களால் அறியக்கிடப்பது. இவ்வுண்மையே ராஸக் கிரீடையிலும் அறியக்கிடப்பதொன்றாகும். இது கேவலம் பசுத்துவ வின்பமன்று. பதித்தன்மை பெற்று நிற்கும் ஆண் பெண்பாலார் தங்கள் உள்ளங்களைச் சமாதி நிலையாகிய மோன நிலையிலே பதித்துவிட்ட பின்னர், உயிர்ப்பின் பயனாக வரும் உலகநடைகளை உதாஸீன புத்தியோடு அநுபவிக்குங்கால் ஏற்படும் இவ்வின்பமானது சளத்தைப் பற்றிநில்லாதென்பதை விளக்குவார், 'பணியாவென வள்ளி பதம் பணியும் தணியா அதிமோக தயாபரனே' என்றுரைன அறிக. இதனால் பெண்ணென்ற பெயரைக் கேட்கவும் காதை மூடிக் கொள்ளும் பொய்த்தவர்கள், உலகறியாமை அல்லது அசுத்த மாயை யொழியாமை என்னும் குற்றங்களிரண்டினு ளொன்றுக்குட்பட்டவர்களென்பது வெளியானமை யறிக. இம்மறையினால் வெளிப்படுத்தப்படும் உண்மைகளை அநுஷ்டானத்துட் கொண்டு வந்துள்ள நாட்டினர் சுயேச்சையிற் பிறழாது நிற்கவல்லவராக விளங்குவதைத் தற்காலத்து நிதர்சனமாகக் காண்கிறோம். முன்னொருகாலத்து இந்நிலை நம் நாட்டிலிருந்த பலராலும் அநுபவிக்கப்பட்டு வந்ததனாற்றான் நாடு சுயாதீன நிலையிலிருந்ததென வறிக. நம் சமூகத்தினர் இப்பொழுதும் பொருளற்ற சில சங்கேத ஒழுக்கங்களைக் கை

விட்டு இவ் வருள் நெறியாகிய உண்மை யொழுக்கத்தைக் கையாளத் தொடங்குவாராயிற் பாச வினைவிலங்குகள் அவர்களை இன்னே விட்டொழிய, அவர்களது பிறவியற, இச்சிறையும் விரைவின் விடுதலை யடையுமென்க. இனி அடுத்த மறையை நோக்குவோம்.

தீராப்பிணி தீர

கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினை யாவையுமே. 7

அந்வயம்

கெடுவாய் மனனே! கதிகேள்; கரவாது இடுவாய்; வடிவேல் இறை(யினது) தாளை நினைவாய்; நெடுவேதனை தூள்பட (ஏ) சுடுவாய். வினையாவையுமே விடுவாய், விடுவாய்.

பொழிப்புரை

தலைப்பு:—[தீராப்பிணியாகிய பிறப்பு இறப்பு என்னும் பவநோய் தீர்வதற்காகச் சிந்திக்கும் மறை இது.] நீங்காத பிறவிநோய் நீங்க.

செய்யுள்:—அழிந்து போகக்கூடிய மனமே! நீ பிழைத்து உய்யக்கூடிய வகையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக; உன் கையிலுள்ளவற்றை ஒளித்துவையாமற் கொடுப்பாயாக. கூர்மையான வேலைக் கையகத்தேந்திய இறைவனாகிய முருகக் கடவுளது பாதாரவிந்தங்களை (ஸதா) ஸ்மரிப்பாயாக. (ஜன்மங்கள் தோறும் உன்னை விடாதுபற்றி வரும்) பெரிய பிறவித்துன்பமானது பொடியாகி மறுபடியும் முளைத்தெழாதபடி அதனைத் திருவடி ஸ்மரணத்தில்

எழுந்த ஞானத்தினுல் சுட்டெரிப்பாயாக. மூவகைப்பட்ட இருவினைகளின் கொத்தினை முற்றும் விட்டொழிப்பாயாக.

## விசேடக் குறிப்புகள்

தீராப்பிணியாகிய பவப்பிணியை மாற்ற வழிசொன்ன காரணத்தினுலே மற்றச் சிறுபிணிகள் தாமே தீர்ந்தொழிவதற்கு ஏதுவாயிற்றென்பது சொல்லாமலே பெறப்பட்டது. அப் பிறப்பு இறப்பாகிய வியாதியை நீக்குதற்குச் சுலபமானதொரு மார்க்கத்தை இம்மந்திரத்திற் கூற வந்தவர், 'அந்தக்கரணம் அடங்கத் துறப்பதுவே எந்தத் துறவினும் நன்று எந்தாய் பராபரமே' என்றபடி, அந்தக்கரணத்தின் நிலையாகிய அழியுந் தன்மையைத் தனது ஸ்வாநுபூதியில் அறிந்தபடி 'கெடுவாய்' என்று முன்கூறி மனதை விளித்தார். 'கெடுவாய்' என்பதை 'அடகெடுவாய் பலதொழிலுமிருக்கக் கல்வி' என்ற செய்யுளிற்போல நிந்தைக் குறிப்புவாய்ந்த ஆச்சர்ய வாசகமாகக் கொள்ளுதலே சிறப்புடைத்து. அதுவன்றி, 'மனம் சடமாம்' என்றும், அது அழியத்தக்கதென்றும், அதனைக் கருவியாகக்கொண்ட உபாஸகன் அம்மனதின் அழிவுத் தன்மையை நன்குணர்ந்து 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்' என்றபடி அம் மனமானது அழியுமுன்னர் அதனையே கருவியாகக்கொண்டு உண்மை அருளைப்பற்றிக் கொள்ளவேண்டுமென்றும் வற்புறுத்தவே 'கெடுவாய் மனனே' என்று தொடங்கினுர் என அறிக.

இனி அம்மனதுக்கு உபதேசம் செய்யும் முகத்தானே உபாஸகனுக்கு நற்கதியையடையும் மார்க்கத்தைக் கூறத் தொடங்கினவர், 'கரவாது இடுவாய்' என்ருர், பற்று அற்று நிற்கவேண்டுமென்பதை வற்புறுத்த. "சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார்" என்ற நிலையில் இருக்க வேண்டியவர்கள் அப்போதைக்கப்போது உள்ளதை

ஒழித்துவிட்டு இறைவனது அருள் நெறியைப்பற்றிப் புரப்பான்றன் அருள் நாடி இரப்பவன் நிற்பதுபோல நிற்க வேண்டுமென்றும், அப்படி நிற்பதனாலேயே மூவ்வகைப் பட்ட இருவினையும் ஒழியுமென்றும் நன்கு வெளிப்படுத்தக் 'கரவாது இடுவாய்' என்றார். உள்ளக்கரவு ஒழிந்த இடத்து உண்மை ஞானமானது புலப்படும். அதனாலேயே விஷயங் களை நன்கறிந்து தெளிய விரும்புகிறவர்கள், முன்னபிப் பிராயங்களை யெல்லாம் உள்ளத்தினின்றும் முற்றவொழித்து, எதிர்ந்த நிறத்தை யேற்கும் உபலம் போல் அவ்வுள்ளத்தை வைத்துக் கொள்ளவேண்டும் என்று வெற்றி விரும்பும் தார்க்கிகர்களைப் போலக் கூறுவது. இவ்வகை ஒருவனது மனமானது சுத்த ஸ்படிக ஸங்காசமாக இருக்கும் பட்சத்தில், அத்தெளிந்த மனதில் பிறருடைய வாதாநுவாதப் பிரதிவாதங்கள் விழும்போது, அம்மனமானது அவற்றிலுள்ள பெருமை சிறுமைகளையும் சரி தவறுகளையும் தெளிவாக உணரவல்லதாகும். அதுபோலவே மனமானது கைப்பொருளிடத்துப் பற்று அற்றுக் கருணாநிதியாகிய கடவுளினிடத்துப் பற்றுவைக்க வேண்டுமானால் இக் கரவாதிடுகை மிக இன்றியமையாததாகும்.

இவ்வகை உள்ளக்கரவை ஒழித்துக் கையிலுள்ளதைப் பிறருக்கு அளித்து விட்டுச் சூனிய நிலையில் நிற்பது மாத்திரம் போதாதென்றும், அந்நிலையில் ஆணவமாதி மலங்கள் முறுகப் பற்றிக்கொள்ள 'நாம் வள்ளலாயினோம்' என்னும் தவற்றுணர்ச்சியையும் கர்வத்தையும் அவ் இடுகையானது கொண்டு தருதலும் கூடு மானதுபற்றிப் பிறவிக்கு வித்தாகிய அந்நிலையை விட்டொழிய வேண்டுமென்றும் வற்புறுத்தவே, 'வடிவேல் இறைதாள் நினைவாய்' என்றார். வேல், ஞானசக்திக் கறிகுறி. தற்காலத்துச் சிலுவை ரூபமாகச் சிலர் பாவிக்கும் உருவமும் அவ்வேலினது மாற்றுரு

வமேயென அநுபூதிமான்கள் தம் அருள் ஞானத்தாற் கண்டது. மூலாதாரம் முதல் துவாதசாந்தம் வரையிலுள்ள ஆதாரங்களை ஒழுங்குபடுத்திச் சுழுனையைத் திறந்து பிரமரந்திரத்தையும் நிமிர்த்தி ஸஹஸ்ரதள பதுமத்தில் (உச்சி மூளையாகிய புஷ்பத்தில்) வீற்றிருக்கும் இறைவனது ஞான சக்தியாகிய திருவடியை மர்க்கடம்போல் பிடித்து நிற்கும் ஞானத்தைத் தருவது அவ்வடிவேலே. அவ்வேலைத் தாங்கி நிற்கும் இறைவனது தாளின் நினைப்பே நாம் சதா ஞானமயமாய் நிற்பதற்கு மூலகாரணமானதுபற்றி 'வடிவேவிறை தாள் நினைவாய்' என்றார். இனி அந்த ஞானத்தைப் பெற்ற பின்னர் அதனை மத ஸ்தாபகங்களிலும், அணிமாதி அஷ்டஸித்தி யநுபவங்களிலும், மற்றும் துறைகளிலும் செலவிட்டு மயங்கிப் பிறவிப்பயனை அடையாமல் ஸாதகனாகிய உபாஸகன் வழி தவறிப்போய் விடலாகாதென்பதை உணர்த்த வந்தவர், 'சுடுவாய் நெடுவேதனை தூள்படவே' என்றார். ஈண்டு நெடுவேதனை என்றது, ஈசுவரத் தன்மையை விட்டுப் பிரிந்துவந்த நாள் தொடங்கி வினையாகிய சக்கரத்திலேயே சுழன்று தான் பட்ட சுக துக்கங்களால் ஏற்பட்ட கஷ்டங்களை. துக்கத்தினால் வருவது மட்டும் கஷ்டமாவதேயன்றிச் சுகத்திலும் கஷ்டமுண்டோ வென்று ஐயப்படுவோர்க்கு யான் உணர்த்துவது இது :

"ஒருவன் மலையுச்சியில் நின்று சுற்றுப் பக்கங்களிலும் விரிவாகத் தோன்றும் காட்சிகளைக் காணும் இன்பத்தைப் பெற விரும்புவானாயின், அம்மலை யேறுதலாகிய கஷ்டத்தை முன்னர் அநுபவியாமல் தீராது. பிறருடைய உதவி கொண்டு வாகனாதிகளிற் செல்லக் கூடுமே என வாதிப்போர்க்கு, நுனித்த மன வுணர்ச்சியுள்ள ஒருவன் பிறவுயிர்களின் துன்பத்தையும் தன் துன்பத்தைப் போலவே பாவிப்பானென்பதை மட்டும் எடுத்துக் காட்டுவேன். ஆகவே

சுகமும் துக்கம் உட்பொதிந்த வெளிப்பரிணாம மென்பதும், அவ்வகையே துக்கமும் அறியாமையினால் வந்த (சுகமுட் பொதிந்த) தென்பதும் ஆழ்ந்து யோசிப்பவர்க்கு நன்கு விளங்கும்" என்பது. எனவே சுக துக்கங்கள் ரூபமாயுள்ள பிறப்பிறப்பான் வந்த நெடுவேதனையைத் திருவடி ஞானத்தால் சுட்டெரித்துத் 'தக்த படம்' (நெருப்பிலிட்ட வஸ்திரத்தைப்) போல, பற்றும் அதனால் வரும் அசுத்த மாயையும் ஒழிந்து பிறவிக்கு மூலமாகிய அஞ்ஞானவித்து வறுக்கப்பட்டு நிற்பதற்கு வழியைக் காட்டப் புகுந்தவர் 'சுடுவாய் நெடுவேதனை தூள்படவே' என்றார். 'தூள்பட' என்றதனால் சுட்ட மண்ணினது அணுக்கள் மறுபடியும் ஒட்டிக்கொள்ள முடியாதது போலப் பிறவி மூலமாகிய பாசவுணர்ச்சிகள் அவ்வகைச் சுடப்பட்டவனிடத்து மறுபடியும் ஒன்று சேர்ந்து ஒட்டிக்கொள்ள முடியாதென்பது விளக்கப்பட்டது. இதனையே வற்புறுத்தி 'விடுவாய் விடுவாய் வினையாவையுமே' என முடித்துக் காட்டினார்.

இருவினைக்கு எல்லாம் என்ற சொல் பொருத்தமாகுமோ எனக் கேட்பார்க்குச் சமாதானம் இது: "முதல் பிறப்பில் அதாவது ஈசுவரத் தன்மையாகிய 'நிராசை' என்னும் பூமியினின்றும் இழிந்த நிலையில் செய்யப்பட்ட ஆகாமியமானது, அதாவது தானே ஸர்வசக்தனென நினைத்துச் செய்த ஒரு தொழில் அல்லது வினையானது, அப்பிறப்பிலேயே ஒழித்தற்கு அரியதான பத்து நூறு ஆயிரக்கணக்காக விரிந்து நிற்க, அவ்வினையை மாற்றுவதற்காகப் பின்னும் ஒரு பிறப்பை எடுக்க அது செய்தது. அப்பிறப்பும், எடுத்த வினை முற்ற முடித்தற்குப் போதுமானதல்லாததாக, பிறவித் தொடரொன்று அவ்வினையாளனைப் பற்றலாயிற்று. இனி அவ்வினையும் ஒரு பிறப்பில் தானாக நினைத்து அகங்கரித்துச் செய்வது (ஆகாமியம்), முன்

செய்த அவ்வினையை முடித்தொழிப்பதென்ற சங்கற்பத்தோடு செய்வது (பிராரப்தம்), கொஞ்சமும் முடி வெய்தாமலே தொடங்கப்பட்டவளவில்நின்று அவ்வகைத் தொடங்கியோனது காலத்தைக் கருதிப் பையுளாக (சஞ்சிதம்) நிற்பது என மூவ்வகையாக விரியலாயிற்று. இவ்விரிவில் காலமும் இடமும் அவ்வாத்மாவை வாதிக்கலாயின. காலாதீதமாய் தேசாதீதமாய் எண்ணமற்றிருந்த தனக்குத் தன்னுடைய சக்தியை மூலப் பொருளிலும் புறம்பாக உபயோகிக்கும் ஆற்றலொன் றிருப்பதைக் கண்ட அறிவு காரணமாக ஆகாமிய, பிராரப்த, சஞ்சிதவினைப் பெருக்கங்களும் அவற்றிற்காக ஏற்படும் பிறப்பு இறப்புக்களும் பெருகிவிடவே, தான் வந்த விடமும், தான் அப்போது நிற்கும் இடமும், அதற்குமேல் போக நிற்கும் இடமும் தெரியாது மயங்கி நிற்கும்போது,

“உடலும் பொறியும் வெறியுற்று நிற்க வுயர்மனந்தான்
அடலிற் றனதகங் காரத்து மெய்யடக் காதொழுக
மடநீக் கறிவுதன் போத மிழக்க மகிமையொடு
கடவு ளருளவற் பற்றலிற் செல்வன்றேர் கண்ணுற்றதே.”

—சந்திநிபாதக் கோவை.

என்றபடி, கடவுளின் அருளானது கண்ணெதிர் தோற்றி அவ்வாத்மாவானது வினைவழிச் சென்றதன் பயன் அதுவெனக்காட்டி, அவ்வினையை யொழிந்து நிற்றலே மறுபடியும் பிறப்பற்றுத் தெய்வநிலையை எய்துதற்கு மார்க்கமென வெளிப்படுத்தலாயது. இதுவரை ஆணவத்தால் இக்காட்சி மறைந்திருந்ததனுலும், இப்பொழுது அவ்வாணவம் முறிந்து போனதனுலும், ஆத்மாவுக்கு உண்மை, மேகத்தின் மின்னுப்போல் தோன்றலாயிற்று. எனினும் அவ்வுண்மையுணர்ச்சி யொன்றுமே கடவுட்டன்மையை உடனே தந்துவிடாதானதுபற்றி, முன் மாயா காரியமாகிய பிரபஞ்ச

வழியிற்சென்ற அறிவை, அவ்வறிவு தங்கிய மனதின் உதவி கொண்டே உண்மை விசாரஞ் செய்வதில் ஆன்மா உபயோகிக்கலாயிற்று. இந்த நிலையில் வெளிமுகப் பட்டிருந்த அந்தக்கரணங்கள் உள்முகப் படலாயின. அப்படி யுண்முகப்படவே, மாயாகாரிகளாயுள்ள உலகத்தவர் இவனை மருளன் என முதற்கண் மதிக்கலாயினர். இம்மதிப்பினால் இவ்வான்மாபெற்ற லாபம் ஒன்று உண்டு.

"மேலே சொன்ன மூவ்வகை வினைகளையும் இம்மாயாகாரிகளுக்கு இலகுவாகப் பங்கிட்டுக் கொடுத்துவிடல் முடிந்தது. இம் மூவ்வகை வினைகளும் இருபகுதிப்பட்டு நிற்பதை இவன் உணர்ந்தான். அதில் நல்வினையும் பிறவிக்கு வித்து என்பதை அறிந்தான். அந்நல்வினையால் வரும் பொன்னுலகமும் 'மத்தமதியினர் வேண்டும் மால்' எனத் தெரிந்தான். 'க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி' என்னும் கீதைவாக்கியத்தின்படி, அப்பொன் விலங்கும் நல்வினையின் பயனற்றபோதே அறும் எனக் கண்டான். தீவினையின் பயனைக் கண்ட வுணர்ச்சிதான் ஆதியில் இவனைப் பஹிர்முக ஒழுக்கங்களை விடுத்து அந்தர்முக ஒழுக்கத்துச் செல்லத் துணிவித்தது. ஆனதுபற்றித் தீவினையின் பற்று இவனுக்கு முதற்கண்ணேயே ஒழிந்தது என்னலாம். எனினும் உள்ள நிலையில் ஏதாவது பற்றி நிற்குமாயின் அதனை உலகமே அவனிடத்தினின்றும் பெற்றுக் கொண்டு அவனுக்கு விடுதலை தர முன்வந்தது. அதனால் இவனது புண்ணிய பாவங்களுக்கு ஆதாரமாயிருந்த நல்வினை தீவினைகள் இவனைவிட்டு ஒழியலாயின. இவனைக் கண்டு உவப்பவர் மாட்டு இவனது நல்வினைப் பயன்களும், இவனைக் கண்டு நிந்திப்பவர்மாட்டு இவனுடைய தீவினைப் பயன்களும் பற்றிக் கொள்ளலாயின. இவ்வகையாக இவன் வினைச் சக்கரத்தின் தொடர்பு ஒழிந்து திருவடி ஞானத்

தைத் தந்த அருளைப்பற்றி நிற்கலாயினன். இந்நிலையில் நிற்கும் இவன் சுத்த மாயை மட்டும் உள்ளவனைதுபற்றி உலக விஷயங்கள் இவன் கண்ணுக்குப் படுமாயினும், 'அண்ட கோடியை யெலாம் அடுக்கடுக்கா அமைத்துப் போராமல் நின்ற பரவெளியிலே மனவெளி பிறங்குவது அலாது ஒன்றினும் பின்னம் உற மருவாது, நன்னயத்தால் இனிப் பேரின்ப முத்திநிலையும் தாராது தள்ளவும் போகாது உனல்' என்றபடி, அவ்வுலக விஷயங்களைக் காணும்போதெல்லாம் இறைத்தன்மையை யணுகி யடைந்து அத்தன்மையைப் பற்றிச் சல்லாபிக்கும் தொழிலை விருத்தி பண்ணுவானே யொழிய அவ்வுலக விஷயங்களுக்கு அருகி லும் போகான் என்பதை மக்கள் நன்குணருமாறும், இவ் வுண்மையை உபாஸகனுக்கும் தெளிவுறுத்துமாறும், இம் மறையாசிரியர், மனதை முன்னிலைப் படுத்தி 'விடுவாய் விடு வாய் வினையாவையுமே' என்றார்." 'யாவை' யென்று பன்மை கொடுத்ததற்குக் காரணம் இதன் மூலம் வெளியா யிற்று. அம்மனமும் இறந்துபடக்கூடிய தென்பதும் அவ் விறந்துபாட்டின் காலத்து ஆன்மாவுக்குப் பற்றுக்கோடு எது என்பதும், அப் பற்றுக்கோட்டால் வரும் பயன் இன்னதென்பதுமே சுருக்கமாக இம்மறையிலிருந்தும் இம் மறையின் தலைப்பினின்றும் விளங்கி நிற்கின்றன. காவா திடு வாய் என்பது மனதுக் குபதேசமாக, கையில் உள்ளதை யென மனிதனுக்கு ஏற்றிச் சொன்னதுபோலச் சொன்னது நெறியோ என்று கேட்பாருமுளர். அவர்கட்கு யான் புகல் வது ஒன்றுதான். உலகமும் அதன் தூலகாரியப் பொருள் களும் சூக்குமத்தன்மை வாய்ந்த மனதினின்றே தோற்றி யவையாகும். அதனால் பொருளென்பது தூலம், சூக்குமம், காரணம், மஹாகாரணம் என்னும் அளவுக்கும் கூடச் செல்லவல்லதாய், கல்வி செல்வம் என்னும் இரண்டிற்கும்

மேற்போந்த ஞானப் பொருளையும் பற்றுமானதுபற்றி உலக நிலையிற் சொல்வதுபோலவே அம்மனதையும் தூலப் படுத்தி விளித்து உன்னிடத்திலுள்ள முழு ஞானத்தையும் ஒளியாமல் கொடுத்து விடுவாயாக என்று கேட்டுக்கொண்ட படியாகும் என்றறிக. இந்நிலையில் உலக அறிவு, உண்மை ஞானம், அருளொழுக்கம் முதலிய எல்லாம் உபாஸகனுக் குக் கிடைப்பதும் உய்த்துணர்க.

## குடிகளைத் தன்வசம் ஆக்க

அமரும் பதி கேள் அகமா மெனுமிப்
பிமரங் கெட மெய்ப் பொருள் பேசியவா!
குமரன் கிரிராஜ குமாரி மகன்
சமரம் பொரு தானவ நாசகனே. 8

### அந்வயம்

குமரனும், கிரிராஜகுமாரி மகனும் (ஆன) சமரம் பொரு தானவ நாசகன், அமரும்பதி, கேள், அகம், (ஒருவ னுக்கு) ஆம் (மற்றவை ஆகா) எனும் இப்பிரமரம் கெட மெய்ப்பொருள் பேசியவா(று என்னே!)

### பொழிப்புரை

தலைப்பு :—[எல்லா ஜனங்களையும் தன்வசப்படுத்திக் கொள்ளும் இரகசியத்தை எடுத்துக் காட்டும் மறை இது.] குடிஜனங்களைத் தன்னிடத்துப் பிரியமுள்ளவர்களாகச் செய்ய.

செய்யுள்:—குமாரக் கடவுளும், பர்வத ராஜகுமாரியின் செல்வப்புத்திரனுமாய், யுத்தஞ் செய்யும் தானவனாகிய சூர பன்மனை யழித்த முருகக்கடவுள், யானுள்ள ஊர், உறவு, வீடு (இவையே) எனக்கு இதம் செய்பவை (மற்றவை அத் தகையவல்ல) என்னும் இம்மயக்கம் என்னை விட்டொழிய,

உண்மைப் பொருளை எனக்கு உபதேசித்த தன்மையை என்னென்று சொல்லி வியந்து கூறுவேன்! (அது எ சொல்லால் அறுதியிட்டுக்கூறத் தகுந்ததன்று என்றபடி.

## விசேடக் குறிப்புகள்

பிமரம், பிரமரம் - ப்ரமரம், சுழற்சி, ஈண்டு மய உணர்ச்சியைக் குறித்து நின்றது. அப் பிரமரம் தா யாது? 'நமது ஊரார் தாம் நமக்கு இதம் செய்பவர். நம பந்துக்களே நமக்கு நன்மை புரிபவர். நமது கிருஹ தினரே நிலையானவர், அவரையே நேசித்தல் வேண்டுப் என்ற பிறழ்வுணர்ச்சியாம். ஊரும், உறவும், வீடுமே ஒ வனுக்கு இதஞ் செய்வன என்னும் இத்தகைய மயக்கத்தை மாற்றி முருகக்கடவுள் உபதேசஞ்செய்த உண்மை என்ன "பள்ளியிற்கற்கும் மாணவன் அப்பள்ளியிற் கற்பனவெ லாம் அப்பள்ளியினின்றும் வெளியேறினபோது க நேரும் பெரு நூல்களைக் கற்பதற்கான மார்க்கத்தைக் றுக் கொள்வது என்ற ஒரு பயனுக்காகவேயன்றி, அப்ப ளிச் சாலையிலேயே கல்வி பூரணப்பட்டு விட்டதாக எண் விடற் கன்று. அதுபோல ஒருவனது சிறு வயதில், தா வசிக்கும் ஊர், தன்னுடைய உறவு, தன்னுடைய கிருஹ இவற்றினிடத்து அன்பு காட்ட அவன் பழகுவதெல்லா தனது உடலிளமை நீங்கிய பின்னர்ப் பரந்த பெரிய உல தினிடத்துப் பழகத் தலைப்படும்போது அவ் அன்பை அ வுலகத்தினரிடத்து எப்படிக் காட்டவேண்டு மென்ப நன்கு தெரிந்து, அவ்வகைத் தெரிந்து தெளிந்த வண்ண பழகுவதற்காகவே." என்பதுதான் முருகக் கடவுள் உ த்திய வுண்மையாம். இவ்வளவும் இம்மறையினுள்ளுரை யென்பதை,

"உற்றவர் பெற்றார் உடல்தம தென்பர் அஃது ஓர்ந்துளன்யான்
அற்றவ ரன்னதை யாதரித் தல்பயத் தாதரமே

*மற்றவ ரும்மிதைக் காதலிக் கும்முறை மன்னுவதென்*
*கற்றவர் 'அன்பிற்குத் தாழிலை' என்பதோ கண்மணியே.''*

—கண்மணிமாலை.

என்ற மேற்கோளாலும் அறியலாம். 'அகமாம்' என்னும் சொற்றொடரில் உள்ள ஆம் என்பதனை அசையென்றும் வாக்கிய முடிவுச் சொல்லென்றும் கருதிப் போந்தார் உரைகாரர் பலரும். அச்சொல் ஆகா என்பதன் எதிர்மறைப் பொருளில் இம்மறையாசிரியர் உபயோகித்திருப்பதை அநுபூதிமான்களே யறியவல்லுநராவர். இத்தகைய தலையன்பு உலகத்தின் மாட்டு ஒருவனுக்கு ஏற்பட்டுழி, அந் நன்மகன், தனது பதி, கேள், அகம் என்னும் மூன்றிடத்தும் அடைந்த பயனைப் பேரளவில் உலகத்தில் அடையவல்லவனுவன். அதுபற்றியே இம்மறைக்குக் 'குடிகளைத் தன்வசமாக்க' என்னும் தலைப்புக் கொடுத்தார் என அறிக. இதனால் உபாஸகனுக்குப் பதியும், கேளிரும், அகமும் விசாலப்பட்டுத் தோன்றுவதையும் கூர்த்துணர்க. தானவன் என்னும் சொல் அசுரனென்ற பொதுப்பொருளில் வந்து ஈண்டு சூரபன்மனைக் குறித்தது. குமரனைத் தன் வழிபடுகடவுளைக் கருதுவோனுக்கு நித்தியயௌவனமானது அவனது மனப்பண்பாலொட்டுமென்பதும், அப்பண்பினால் உபாஸகன் உலக முழுவதையும் திருப்திப்படுத்தும் சேவகம் செய்யவல்லவனுவன் என்பதும், அத்துதி மொழியில் தொனிப்பது காண்க. அவ்விளமையும் கட்டிளமைப் பருவமென்பதை வற்புறுத்தி யுணர்த்தவே ஈன்றுளையும் கிரிராஜகுமாரியென வருணித்ததென்க. இதனால் உபாஸகனுக்குக் கிழப்படா உள்ளம் மாத்திரமன்றி உடலும் இளமையின் கண் நிலைத்ததாக நிற்குமென்பதும் சூசிப்பிக்கப்படுவதென்று வலிந்து பொருள் கூறுவாரு

முண்டு. அது வேண்டற்பாலதன் றாயினும், அக்கௌமார நிலையிலும் தீமைக் கிடந் தராது ஒட்டவல்ல மனோதைரிய முண்டென்பது மட்டும் 'சமரம்........நாசகன்' என்பதனால் கொள்ளக் கிடப்பதறிக. உண்மையாக ஒழுகும் ஒருவன் பகைவனே யெனினும், உலகம் அவனுடைய மேதக்க குணங்களுக்காக அவனிடத்தும் விருப்பங் கொள்ளுமென் பதை இவ் விளியின்மூலமாக உணர்ந்த உபாஸகன், மாந்தரிடத்துப் பழகும் உண்மை நெறியையும் அறிதற்கு இத் துதிவிளிகள் ஏதுக்களாயின.

## பெண்ணாசை ஒழிக்க

மட்டூர் குழல் மங்கையர் மையல்வலைப்
பட் டூசல்படும் பரிசென் றொழிவேன்
தட் டூடற வேல் சயிலத் தெறியும்
நிட்டூர நிராகுல நிர்ப்பயனே. 9

### அந்வயம்

தட்டு ஊடற வேலைச் சயிலத்து எறியும் நிஷ்டூர! நிர் ஆகுல! நிர்ப்பயனே! மட்டு ஊர் குழல் மங்கையரது மையல் ஆகிய வலையிற்பட்டு ஊசல்படும் பரிசு என்று ஒழி வேன்?

### பொழிப்புரை

தலைப்பு:— [ஈண்டு, அன்பு அல்லது காதலுக்கும் மோகத்துக்கும் பேதம் அறியத்தக்கது. மோகம் ஒரு பக் கப்பட்டது. காதல் இருதலைப்பட்டதாகும். அதனாலேயே 'அன்பினைந் திணை' என்றார் அகப்பொருள் நூலாசிரியர். இம் மோக வாசையை யொழிக்கக் கூறும் மறை இது.] பெண் ணினிடத்து உண்டாகும் அதிமோக வாசையை விலக்க.

செய்யுள் :—இடையில் தங்கு தடைகள் ஏற்படாதபடி வேலாயுதத்தைக் கிரௌஞ்சம் என்னும் மலையின்மீது எறிகின்ற கோபக்காரனே! வியாகூலமென்ப தில்லாதவனே! பயமற்றவனே! வாசனை நிறைந்த பூக்களை யணிந்த கூந்தலோடு கூடிய மாதர்களிடத்து ஏற்படும் ஆசையாகிய வலையில் அகப்பட்டு அல்லாடுகின்ற மனத்தின் தன்மையினின்றும் யான் என்று நீங்கியிருப்பேன்? (நீ சொல்வாயாக.)

## விசேடக் குறிப்புகள்

ஊசல்படும் படர் என்பாரும் உளர். படர் - துன்பம். சுத்தமாயை யளவில் நிற்போனுக்கு இம்மையல், கண்டு நீங்குவதே யன்றித் துன்பம் விளைக்காதானது பற்றி, பரிசு என்ற பாடமே சிறந்தது. மாணுர் விழியைக் கடந்தேறி வந்தவர்களுக்கும் வாசனையால் இம் மையல் மாதர் உருவைக் காணும்போது உள்ளத்துத் தைத்து அறிவு விலக்கவும் விலகுவதால், அதனை 'ஊசல்படும் பரிசு' எனக்கூறினார். அத் தோற்றமும் உண்டாகாதபடி ஒழிக்கவேண்டியது உபாஸகனது கடமையாமென்பதை யுணர்த்தவே 'ஊசல்படும் பரிசு என்று ஒழிவேன்?' எனக்கூறினார். ஈண்டு மனஸ் தத்துவக் கலையாளர் (Hypnotic eye) 'உறுத்த நோக்கு' என்பதைப்பற்றிக் கூறும்போது அந்நோக்கை மாதர் மாட்டு உபயோகிக்கலாகாதென வுணர்த்துவதையும் மனங்கொள்ளுக. "உறற்களத்தும் அட்டிலும் பெண்டிர்கள் மேலும் நடுக்கற்ற காட்சியார் நோக்கார்," என்னும் ஆசாரக் கோவை வாக்கும் உள்ளத் திருத்தற்பாலது. மேலும் ஒரு மகன் தன் முன் சுமார் இரண்டு அல்லது இரண்டரையடி தூரத்துக்கு மேல் தனது பார்வையை நீளவிடாது செல்வது அநேக பாபங்களினின்றும் அவனை விலக்குமென்பதும் ஈண்டு கருதற்பாலது. இத்தகை யெல்லாம் அநுஷ்டிப்போரும் கருவி

கரணங்களின் தற்செயலான நடப்பினால் பெண்ணிச்சை ஏற்படுவதை யடக்கக் கடவுள் நினைப்பு முன்னிற்க வேண்டு மெனவும், அந்நினைப்பிற் சதா நிற்பவர்க்கு ஆகுலமும் பயமும் ஒழியுமெனவும் சூசிப்பித்தே நிராகுல நிர்ப்பய பாவனை தோன்றத் துதிவிளிகள் கூறப்பட்டுள்ளன வென வறிக.

'போதந் தனம் கல்வி பொன்றவரும் காலத்து மாதர் மேல் வைப்பர் மனம்' என்றும், 'என்போதப் பொருள்பறிக் கென்றெண்ணாது உனை மறந்தேன்' என்றும் பெரியார் பலர் கூறியிருப்பதனாலும், இத்தகைய 'ஆசை யெனும் பெருங் காற்றூடு, இலவம் பஞ்சு எனவும் மனது அலையும் காலம், மோசம் வரும்; அதனாலே கற்றதும் கேட்டதும் தூர்ந்து முக்திக்கான நேசமும் நல்வாசமும் போய்ப் புலன் நாயிற் கொடுமைபற்றி நிற்பர், அந்தோ!' என்றபடி, இம் மையல், 'இமையளவு போதை ஒரு கற்பகாலம் பண்ணி இவ்வுலகம் எவ்வுலகமோ என்று எண்ணம் வருவித்து, மாதர் சிற்றின் பத்தை மகாமேருவாக்கிச் சுமை எடுமின் என்று, அம் மைய லுள்ளவனைச் சுமையாளு மாக்கித், தானே சும்மாடுமாய் நாளும் தூர்ப்புத்தி பண்ணி, உள்ள நற்புத்தி யாவையும் போக்கிலே போகவிட்டு, இந்திர ஜாலம் போன்ற ஒரு கூத்தை யாடச் செய்யும்' ஆதலினாலும், 'மட்டூர் குழல் மங் கையர் மையல்வலைப்பட்டு ஊசல்படும் பரிசு' என்றார் என்க.

நமனை விலக்க

கார்மாமிசைக் காலன் வரிற் கலபத்
தேர்மாமிசை வந் தெதிரப் படுவாய்
தார்மார்ப வலாரி தலாரி யெனும்
சூர்மா மடியத் தொடு வேலவனே. 10

### அந்வயம்

*தார்மார்ப! வல(ற்கு) அரி(யினது) தல(த்திற்கு) அரி எனும் சூர் (ஆகிய) மா மடியத் தொடு(ம்) வேல் அவனே! காலன் கார் மாமிசை வரின், கல(ா)பத்து ஏர் மாமிசை வந்து எதிர்(அ)ப்படுவாய்.*

### பொழிப்புரை

தலைப்பு:—[*யமன் ஒருவனது மனக்கண்ணிலும் படாத படி விலக்குதற்கான மறை இது.*] '*மரணமுண்டென்பது சதா நிஷ்டர் நினைவதில்லை' என்றபடி, காலன் கண்ணிற் படாதவண்ணம் மாற்றிவிட.*

செய்யுள் :—*வெற்றி மாலையை யணியும் மார்பை யுடையவனே! வலன் என்னும் அசுரனுக்குச் சத்துரு வாகிய இந்திரனது உலகமாகிய சுவர்க்கத்துக்குச் சத்துரு என்று சொல்லப்படும் சூரபத்மனாகிய மாமரம் அழியுமாறு ஏவிவிட்ட வேலாயுதத்தையுடைய முருகக் கடவுளே! யமன் கறுத்த வாஹனமாகிய எருமைக்கடாவின்மீது எனக்கு முன்னர்த் தோன்றினால் (அத்தோற்றத்தை மறைத்து எனக்குத் தைரியத்தை அளிக்குமாறு) கலாபத்தின் அழகைக் கொண்ட (மயிலாகிய) வாஹனத்தின்மீது என் கண்ணெதிரில் தோன்றி நிற்பாயாக.*

### விசேடக் குறிப்புகள்

*இம்மறையில் இந்நூலாசிரியர் பாமர ஜனங்களுடைய நம்பிக்கையை ஒப்புக்கொண்டு அந்நம்பிக்கையால் தோன்றும் அச்சத்தை விலக்கும் மார்க்கத்தையும் எடுத்துக் கூறுகிறார். நமது ஜன சமூகத்தில் ஒரு காலத்து மோட்சநிலை என்று ஒன்று உண்டு என்பது அறியப்படாமல் ஸ்வர்க்கம் நரகம் என்னும் இருபதங்களின் நம்பிக்கையே மிகப்*

பெருத்திருந்தது. இச்சுவர்க்க நரகங்களை ஒருவன் செய்த வினையின் புண்ணிய பாப பலனாக அவனுக்கு அளிப்பதற்கு ஒரு கடவுள் உண்டென்ற நம்பிக்கையும் வலுத்திருந்தது. அக்கடவுளைக் கோர ரூபமாக வருணித்து அவற்கு எருமைக்கடாவை வாகனமாகச் சேர்த்து வைத்தனர். இப்படி வைத்ததற்குக் காரணம் என்னவென்று ஆராய்ந்த சிலர், ஒரிஸ்ஸாவில் ஓடும் வைதரணீ நதிக்குத் தெற்கில் இருந்த பிரதேசங்களுக்குச் சென்றபோது அங்கு ஜனங்களுக்கு ஏற்பட்ட காட்டெருமைகளின் உபத்திரவமே இத்தகைய எண்ணத்தை அவர்களுக்குத் தோற்றுவித்த தென்று கூறுவர். இக்காட்டெருமைகளை ஜனங்கள் பெரும்பாடுபட்டு அழித்திருக்க வேண்டுமென்றும், அப்படி யழித்த சக்தியையே மஹிஷாஸுர மர்த்தனி யென்று புகழ்ந்து கூறினரென்றும் கூறுவர். இதனால், இவ் யமனது நம்பிக்கை ஏற்பட்ட காலம் நமது முன்னோரின் ஜனசமூகம் விந்திய மலையின் தென்கீழ்ப் பாகங்களுக்கும் தெற்குப் பாகங்களுக்கும் வந்த காலம் என்பர். இக்காலத்துக் கயாதான் முக்கிய (Camp) தண்டுத்தலமாக விருந்ததெனெ அறிக. இக்காலத்தைப்பற்றியே கருட புராணம் கூறுவதும் என்ப. நிற்க, இந்நம்பிக்கையில் மனிதனுக்கு அச்சமே பெரிதும் ஏற்படுவது. பட்டிக்கடாவில் வரும் அந்தகன், நமது உயிரை உடலினின்றும் பறித்துச் செல்வதோடு நில்லாமல், அவ்வுயிர்க்கு ஒரு யாதனா சரீரத்தையும் தந்து, அச்சரீரத்தில் அந்த ஆவியை இருத்தி, அது செய்த வினைகளுக்கெல்லாம் ஒரு பதிவுப்பட்டி வைத்திருப்பதைக் காட்டி, அப்பதிவுப்பட்டிக் கணக்கனுக்குச் சித்திர குப்தனென ஒரு வைசியப் பெயரிட்டு அமைத்திருக்க, இவன் ஒருவனுடைய பேரேட்டுக் கணக்கை வாசிக்கவும், அக்கணக்கை வாசிக்கக் கேட்ட அவ்வாவி நடுக்கமுறவும்,

அதன் நற்செய்கைகளைச் சொல்லக் கேட்கும்போது சந்தோஷமும் தீச்செய்கைகளைச் சொல்லக் கேட்கும்போது மனவருத்தமும் தோன்றவும், பின்னர் நடுத்தீர்ப்பவனாகிய அறக்கடவுள் என்னும் கண்ணறையன், அவ் யாதனை சரீரத்தினமைந்த ஆவிக்குப் புண்ணியஞ் செய்ததற்காகச் சுவர்க்கமென்னும் சுகரூபமான போக பலன்களையும், பாபம் செய்ததற்காகத் துக்க ரூபமான நரக பலன்களையும் அளித்து, அவற்றிற்கு ஒரு கால அவதியையும் ஏற்படுத்திப் பின்னர் மனித சரீரத்துள் பிறக்குமாறு செய்கிறான் என்ற நம்பிக்கையானது நம் நாட்டு நீண்ட காலம் மாறாமலே யிருந்தது. அந்நம்பிக்கை முறுக்கம் பலப்பட்டிருந்தபோதுதான் (ஆத்மாவை புத்ரநாமாஸி)தன் ஆத்மாவே தன் புத்திரனாகப்பிறக்கிறான் என்றபலமான மற்றொரு நம்பிக்கை ஏற்பட, அப்புத்திரன் தனது பிதாசெய்த நல்வினை தீவினைகளிலுள்ள தீவினைகளுக்குக் (பிராயச்சித்தம்) கழுவா யாக இந்நாட்டின்கண்ணுள்ள சில தீர்த்தங்களில் பிண்ட மளிப்பதென்ற விதியும் உறுதிப்பட்டது. இந்நிலையிலேயே மாந்தர் பல நாள் திரிந்துவந்தனர். அக்காலத்துத் தென்னாட்டுக்கு வருவதே யமன் கையிற் சிக்கிக்கொண்ட மாதிரியாகக் கருதினர். பின்னர் இத்தென்னாட்டின் நீங்கிக் கயாவுக்குத் திரும்புவது யமவாதை ஒழிந்ததற்கு அடையாளமாக எண்ணி அங்கு ஒருமுறை பிதிர்க்களுக்கு அளிக்கும் பிண்டம் ஒருவனது ஆயுட்காலம் முழுதும் சிராத்தம் செய்ததற்குச் சமானமாகுமென்றும் கணித்தனர். இதனால் ஒரு காலத்துத் தென்னாட்டை நன்னாடாக்கச் செய்த முயற்சியில் உயிரைக் கொடுத்த முன்னோர் ஆவிக்குச் செய்த சாந்தியாக ஏற்பட்ட வழக்கம் இதுவென்பது வெளியாகும். இந்நம்பிக்கைகளெல்லாம் முறுக்கு ஒழிந்த காரணமென்ன? அது எப்பொழுது ஒழிந்ததென்பதை நாம் கவனித்தால் இச்

செய்யுளின் பொருள் நமக்கு நன்கு விளங்கும். கந்தபுரா ணத்திலும் இராமாயணத்திலும் முறையே சொல்லப்படும் மகேந்திரம், இலங்கை என்னும் நாடுகளுக்கு ஆரியாது போக்குவரவு அபாயமின்றி ஏற்பட்ட காலத்தில் தான் இவ் யம நம்பிக்கை முற்றும் மாறிற்றென்று கூறுவோம். கந்தபுராணத்திற் கூறப்பட்ட விஷயங்களில் முக்கியமானது மகேந்திரத்தை முருகக்கடவுள் கடலுள் அழுத்திய தென்பது. இம் மகேந்திரம் என்னும் இடம் அழிந்தபிறகுதான் இலங்கைக்குப் பெருமை ஏற்படலாயிற்று. அவ்விலங்கை யின் பெருமை சிறுமைகளையே இராமாயணம் எடுத்துக் கூறுவது. ஆகவே நாம் இவ்வழியாகப் பார்க்கில் நமது ஜனசமூகம் தெற்குப் பக்கங்களில் தாராளமாக வரவும் போகவும் செய்த ஒரு தீரன் முருகனென்பது வெளியா கும். இச் சுவர்க்க நரக நம்பிக்கை யிருந்தபோது ஜனங்கள் மகேந்திரமென்னும் அசுரப் பிரதேசங்களைப் போய்ப் பார்ப்பதற்கு இந்திரனது அமராபுரி மார்க்கமாகச் (தற் காலம் பர்மா மலேயா மார்க்கமென வெண்ணுவரிதனை) செல்வது சுவர்க்க இன்பத்தை விளைப்பதாக விருந்தது. இலங்கை மார்க்கமாகச் செல்வது நரகதுன்பத்தை விளைப் பதாக விருந்தது. மகேந்திரத்தைப் பார்ப்பானேனெனில், தற்காலம் ஐரோப்பாவைப்போல் அது லோகாயத விசே ஷங்களில் சிறப்புற்றிருந்ததே காரணமென்க. இவ்வின்ப துன்பமான மார்க்கங்களை யெல்லாம் விலக்கித்தான் பின் னர் அகஸ்திய மார்க்கமாகிய மேலைமலைத்தொடர் நெறி ஏற்பட்டதென்பர். இவ்வகஸ்தியரே முருகன் உபாசனை யிற் சிறந்தவர். இனி இவ்வின்ப துன்பமாகிய சுவர்க்க நரகங்களும் அநந்த பேதப்பட்டு மனதுக்குச் சஞ்சலத்தை விளைப்பனவாக நின்றபடியால், இவ்வகைச் சஞ்சலங்களெல் லாம் நீங்கும் காலமும் தெய்வ விச்சையால் விந்தந்தாழ்ந்து

இமயம் உயர்ந்துபோன தன்மையால் ஏற்பட்டதனால், (இது ஒரு பூகம்பத்தின் பயனாக வந்ததென்பது பூசாஸ்திர நிபுணர்களது கூற்று) முருகக் கடவுளிடத் துண்டான நம்பிக்கை பலப்படலாயிற்று. இப்பக்தி வெறும் மூடபக்தியாக நின்றுவிடவில்லை. ஜனங்களுடைய உள்ளத்தில் இன்ப துன்பங்கள் மதிக்கப்படாமல் போக அவையிரண்டும் சமமானவையாகவோ, கருதப்படாதனவாகவோ பாவிக்கும் மனநிலை மனிதருக்கு வர, 'நீலச்சிகண்டியில்.......கர்மிகளே' (க. அ. 26) என்றபடி யமனது பாவனை ஏற்படும்போதெல்லாம் கலபத்தேர் மாமிசை முருகன் எதிர் நிற்பதாகவும், கஷ்டமான காலத்தினது ஆற்றலை வென்றதாகவும், அதுவும் வெறும் தோற்றமாத்திரையா யிராமல் அம்முருகனது உபதேச மொழிகளைக் கேட்டதனால் மனதின்கணுண்டான மாறுதல்களோடுகூடிக் காலத்தை வென்றிருக்கும் மனநிலையை அல்லது விடுதலையை (மோட்சத்தை)ப் பெறுவதாகிய வழி தெரிந்ததாகவும், இவ்வழியாகக் கால ரூபமாயுள்ள யமனுடைய வாதையை வெல்லத் தெரியாதார் வெறும் கர்மடர்களாய் மரிப்பார்களென்றும் ஜனங்களை எண்ணச்செய்தது. இந்நிலையை முற்றும் மனதிற் கொண்டுதான் இம்மறை ஆசிரியர், "கார்மாமிசைக்காலன்வரில் கலபத்து ஏர் மாமிசை வந்து எதிரப்படுவாய்" என்று கூறினார். இந்நினைப்பில் சுகதுக்க பாவனைகளெல்லாம் கெட, அச்சுகதுக்கங்களுக்கு ஆதாரமான வினைச்சக்கரத்தினின்றும் விலகி எவற்றையும் அருளாற்றலால் வென்றோம் என்ற பாவனை ஏற்படுவதும், அப்பாவனையினால் சுவர்க்க நரகங்களைப் பொன் இரும்பு விலங்குகளைப்போலப் பாவிக்கும் மனவாற்றலுண்டாவதும், அம் மனவாற்றலானது காலாதீதமான ஓர் இடத்தை நமக்குச் சிருஷ்டித்துத் தருவதும், அப்படிச் சிருஷ்டிக்கப்பட்ட பூமிகையில் (யோகநிலையில்) நின்று நாம்

முருகஸாட்சாத்காரத்தை யநுபவிக்கும்போது, சலம் காணும் வேந்தர்க்கும் யமன் சண்டைக்கும் அஞ்சாது, நரகக் குழியினின்றும் விலகி, துஷ்டநோயும் நம்மினின்று நீங்க, நாம் எதற்கும் கலங்காதவராய் இருக்கும் விடுதலைத் தன்மையைப் பெறுவதும், அநுபவஸித்தமா மென்க. 'எதிரப்படுவாய்' என்பதில் சந்த இன்பநோக்கி இடையே (அ) தோன்றியதென்க.

## தளிகை சேர்க்க

கூகா வெனவென் கிளைகூடி யழப்
போகா வகைமெய்ப் பொருள் பேசியவா !
நாகாசல ! வேலவ ! நாலு கவி
த்யாகா சுரலோக சிகாமணியே. 11

## அந்வயம்

நாகாசல ! வேலவ! நாலு கவி த்யாகா! ஸுரலோக சிகாமணியே ! என்கிளை கூ கா வெனக் கூடி யழப் போகாவகை மெய்ப்பொருள் பேசியவா(று) என்னே !

## பொழிப்புரை

**தலைப்பு :—**[அன்னமய கோசத்தை ஆநந்தமய கோசமாக மாற்றி அதில் நின்று பிரேதநிஷ்டை கூடி ஜோதிர் மயிகுண்டலினி ஆறுக இச்சரீரத்தின் சிர உச்சியில் ஸஹஸ்ராரத்தில் விளங்கும் சந்திரகளா மண்டலத்திலுள்ள அமிர்தமாகிய உணவைத் தேக்கித் திளைத்துண்டு அமிர்த வடிவமாக நின்று ஞானத்தைப் புசிப்பதற்காகச் சொல்லிய மறை இது.] உணவை ஸாரபூத மான நாகச் சேர்க்க.

**செய்யுள் :—**சேஷாசலமென்னும் மலைக்கண் விளங்குவோனே ! வேலாயுதத்தோடு கூடியவனே ! (ஆசு, மதுரம்,

சித்திரம், விஸ்தாரம்) என்னும் நான்குவித கவிகளையும் பாடவல்ல சக்தியை மாந்தர்க்கு அளிப்பவனே! தேவ லோகத்துக்கு ஒரு சிரோரத்நம் போன்ற முருகக் கடவுளே! என் பந்து மித்திரர்கள் கூ கா வென்று கூச்சலிட்டுக் கொண்டு என் மேல் விழுந்து அழவும், அந்த நிலையில் எனது சரீரத்தைவிட்டு உயிர் போகவும் நேராதபடி, எனக்கு உண்மை ஞானத்தை உபதேசித்த கருணையை நான் என்னென்று கூறுவேன்!

## விசேடக் குறிப்புகள்

நாகாசலமென்பது கூகாவென்பதன் எதுகை நோக்கி வந்ததானதுபற்றி அம்மலை திருப்பதியா திருச்செங்கோடா அல்லது மற்றொரு மலையேயா வென்ற விசாரணை நமக்கு முக்கியமான தல்ல. சாரத்தை யொழித்துச் சக்கையைப் பற்றி நிற்பதுபோலப், பண்டித சிகாமணிகள் உரை கூறுவது இந்நாட்டில் ஓர் அலங்காரமாக மாறிவிட்டது. ஒருவர் 'நாலு கவி த்யாகா' வென்பதற்கு ஞான சம்பந்த மூர்த்தியே என்று பொருள் கூறலும் தகுமென்பர். என்ன விந்தை யிது! இவ் விஷயவுணர்ச்சிக ளெல்லாம் இச்செய்யுளா லுணரத்தக்க விஷயங்களை உணர உதவுமா? முருகன் பேசிய மெய்ப்பொருள் என்ன? அது தனிகை சேர்க்க உதவுவது எப்படி?

இவ் வுலகத்திலுள்ள மதங்களில் ஹிந்து மத மொன்றே உண்ணும் தத்துவத்தை உள்ளபடி போதிப்பது. 'எமக்கு இந்த உணவை அளித்த அன்புக்கும் போஷகத்துவத்துக்கும், தேவனே, உமக்கு நாங்கள் நன்றி செலுத்துகிறோம்' என்ற உபசாரமொழி கூறவா நாம் கடவுட்டன்மையைக் காண்பது? உலகத்து நிமித்த காரணனாகவும் உபாதான காரணனாகவும் உள்ள பரமேசுவரன்

உலகப்பொருள்மயமா யிருப்பதை யுணர்ந்து அப் பரமேசு வரனது அம்சமே சிற்றளவில்தான் என்று கண்டறிந்த ஒரு வன் யாருக்கு உபசாரங் கூறுவது? யாரிடத்து உணவு பெறுவது? இவ்விரண்டும் இல்லாத காரணத்தினுல் உண் ணும்போது பிற மதத்தினர் சொல்லும் நன்றி கூறுதல் களுக்கெல்லாம் பொருளில்லை என்பது போதரும். பின் நம்மனோராகிய ஹிந்துக்கள் கண்டதுதான் என்ன? அவர் கள் உண்ணும்போது செய்வதென்ன? நமது சரீரத்தில் பஞ்சப் பிராணன்களென்னும், பஞ்ச வாயுக்கள் பிராணன், அபானன், உதானன், சமானன், வியானன் என்னும் கார ணப் பெயர்களுடன் உலாவித் தொழிற்செய்வதைக் கண் டறிந்தனர். இவ்வாயுக்கள் நாம் உண்ணும் உணவை ஸார பூதமாக்கி ஸ்தூல சூக்கும காரண சரீரங்களாகப் பிரித்து அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமயகோசம், விஞ்ஞானமய கோசம், ஆநந்தமய கோசங்களாக மாற்று கின்றன. இக்கோசங்களில் உலாவப் புருஷனுக்குச் சக்தி யுண்டு. அச்சக்தியைச் சம்பாதிப்பதற்கே அஷ்டாங்க யோக நெறியை நாம் கைக்கொள்ளுகிறோம். இவ் யோகத் தில் முக்கியமானது, அக்கினி மண்டலத்தைச் சேர்ந்த மூலாதார சுவாதிஷ்டானங்களின்மேல் மணி பூரகத்தானத் தில் தலைவைத்துத் தூங்கும் குண்டலினி சக்தியை ஸுஷும் னா நாடி மூலமாக நேராக எழுப்பி, அநாகத விசுத்திகளா கிய சூரிய மண்டலத்தைக் கடந்து ஆக்ஞையாறுகச் சந்திர மண்டலத்துச் சென்ற பிறகு, மனோமண்டலமும் தாண்டிப் பிரமரந்திரப் பெருநெறி சாய்ந்திருப்பதை நிமிர்த்திப் பூரணசந்திர ஸ்வரூபமாய்ச் சோடசகலையும் எப்பொழுதும் நிலைத்து விளங்கா நிற்கும் தலையுச்சியிலுள்ள சந்திரகலா மண்டலத்து அதைப்புகவிட்டு, ஆக்ஞைவரையுமிருந்த உலக நோக்கை மாற்றி, ஒழிவிலொடுக்கத்தை அம் மகாப்பிராண

ளுகிய புருஷனுக்கு அளித்து, அச் சந்திரகளாமண்டலத்தில் மத்தித்தலா லெழும் அமிர்தத்தை உடம்புமுழுவதும் ஊறுமாறு செலுத்தி நினைத்து, இச்சரீரத்தை ஆநந்தமயமாக்கித் தூங்காமற் றூங்கச் செய்வதேயாம். இதனையே, "கஞ்சா அபினி முதற் கள்ளுண்டு வாழாமே, எண்சாண் உடம்பின் கள்ளை இறக்கி உண்ப தெக்காலம்?" என்றார் தாயுமானார். இவ்வகையாக யோக நெறியில் அமிர்தமாகிய உணவைச் சேர்க்கக் கற்பித்த முருகக்கடவுளாகிய தமது உபாஸனா குருவை ஆசிரியர் வியந்து கூறுவதில் எம்மனோர்க்கு ஆச்சரியமொன்றும் தோன்றாதாயினும், இந்நெறியில் மூலாதாரத்துள்ள அக்கினியைச் சிரமளவு எழுப்பி விட்டு உடல் பிணம்போல் கிடக்கச் செய்வதனால் நேரும் ஆபத்தை உலகம் அறியவேண்டியது அவசியம் ஆனது பற்றி அதையும் கூறுவல். இவ் விச்சையை யநுஷ்டித்த பெரியார்க்கு ஆபத்து நேர்ந்ததாகவே, ஆதிசங்கரர், அருணகிரியார், தாயுமானார் என்னும் மூவர் சரிதங்களிலிருந்தும் உணருகிறோம். இதனாலேயே குண்டலினியை எழுப்பும் நூற்களில் சில எச்சரிக்கைகள் கொடுக்கப்பட்டுள. ஜோதிர்மயி மார்க்கமாக இக் குண்டலினிசக்தியை எழுப்புவோர் சிலருக்கு அதனை மீட்கும் திறம் அரிதாகப் போவதால், தக்க நண்பர்களைத் தமது உடற்காப்புக்காகத் தயார்செய்ய வேண்டியது அவசியம். சிலருக்குத் தங்களை யறியாமலே குண்டலினி உயரக் கிளம்பிச் சிரவுச்சியில் தங்கிவிடும். அப்பொழுது அவ்வுடலிறந்ததாக மித்திரபந்துக்கள் எண்ணிக் கொளுத்திவிடுவதும் உண்டு. இத்தகைய சரீரங்களுக்குத் தாது நாடியின் ஓட்ட மில்லாவிட்டாலும் தலையுச்சி எப்பொழுதும் வெச்சென்றிருக்கும். இதயத் துடிப்பு குறைவாகக் காணப்படுதலும் உண்டு. அப்படிக் காணப்படாவிடினும் அவ்வுடலம் பூரண களையோடு விளங்கித் தோன்றும். இறந்த

பிரேதத்துக்குள்ள குணம் குறியொன்றும் காணப்படா. அத்தகைய நிலையில் உள்ளங்கையிலும், உள்ளங்காலிலும் நெய்கொண்டு தேய்ப்பின், மீண்டும் உயிர் வந்து உடலம் எழுந்துலாவு நிலை பெறுமென்ப. அப்படித் தேய்த்து எழுந்த ஒருவன் சிற்சில சமயங்களில் கோர திருஷ்டி வாய்ந்தவனாக விருப்பதுபற்றி அவ்வுடல் உயிர்த் தெழுங் கால் அத்திருஷ்டிக்கு விலகி நிற்கவேண்டும் என்ப. நமது அருணகிரிநாதருக்குச் சுற்றத்தார் சூழவிருக்கச் சரீரதாதுக் கள்கெட்டு வீழ்ந்து, 'ஈமுலோவென வாயை ஆவென' அத னைக் கிடத்திச் சாகும் சாவு மகாவெறுப்பானதென்பது அவ ரது பல திருப்புகழ் வண்ணங்களாலும் தெரியவரும். இத் தகைய சாவை முருகனடியான் பெற்றானெனில், 'எசிடார் களோ பாச நாசனே' என்று முறையிட்டுக் கூறியுள்ள விஷ யம் திருப்புகழ் படித்த ஒவ்வொருவரும் அறிந்ததே. அத னாலேயே உலகக் கட்டுப்பாடுகளை மதியாதவராய்த் தமது சரீரத்தைத் திருவண்ணாமலைக் கோபுர உச்சியில் யாரும் காணமுடியாத இடத்தில் வைத்து இச் சோதிர்மயி குண்ட லினியை எழுப்பும் வழக்க முடையவராக இருந்ததாகத் தெரிகிறது. சம்பந்தாண்டான் சாக்தேயனாகவிருந்தும் இச் சமயமத தத்துவங்களிற் பழகாது, கேவலம் ஜைனர்களும் பௌத்தர்களும் அநுஷ்டித்துவந்த குலாசாரத்தைஅதாவது மணிபூரகத்துக்குக் கீழேயே குண்டலினி சக்தியை வைத் தாட்டிச் செய்யும் (விபசார) மார்க்கத்தைப் பழகிக் கெடு கின்றானே யென்பதுதான் அருணகிரிநாதருக்கு அவன் மீதுள்ள வருத்தம். இவற்றை எல்லாம் அறிய இயலாது, இத்தகைய மேலான அமிர்தப்பிரவாகசித்தியை யடைந்த ஓர் ஆன்மாவுக்கு எந்த உயிர்களிடத்தும் பகை தோற்று தென்பதையும் மறந்து, கதைகளைக் கட்டி யுரைப்பதில் பய னொன்றுமில்லை என வறிக. மேலும் இப்பெரியாரைத் தாக்

விடனாகக் கூறிய தமிழுலகம் எவ்வளவு பேதைமைத்தா யிருந்ததென்பதும் உணரக்கிடக்கின்றது. உள்ளன்பின் ஏற்படும் பரஸ்பரகாதல் விடனுக்கு இலக்கண மல்லாமை யறிக.

களவு வெல்ல

செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விரு சொல்லற வென்றலுமே
அம்மா ! பொருளொன்று மறிந்திலனே! 12

அந்வயம்

செம்(மையாகிய) மால் மகளைத் திருடும் திருடன் (உம்) பெம்மான் (உம்) பிறவான் (உம்) இறவான் (உம்) (ஆகிய) முருகன் 'சொல் அறச் சும்மா இரு' என்றலும் (ஏ) பொருள் ஒன்றும் அறிந்திலன் (ஏ.) அம்மா ! (ஏ இரண்டும் அசைகள். அம்மா ஆச்சரியக் குறிப்பின் வந்த இடைச் சொல்.)

பொழிப்புரை

தலைப்பு :—[திருட்டுத் தனங்களெல்லாம் வெளியாகவும் அவற்றை நாம் வெல்லவும் நமக்குப் போதிக்கும் மறை இது.] திருட்டைக் கண்டு வெற்றி பெற.

செய்யுள் :—நன்மை பொருந்திய மகாவிஷ்ணுவின் பெண்ணான வள்ளி நாச்சியாரைக் ('களவு' என்னும் அகப் பொரு ளிலக்கணப்படித்) தாய் தந்தைய ரறியாது உடன் போக்காகக் கொண்டுசென்ற தலைவனும், எம்பெருமானும், பிறப்பு இறப்புக்கள் அற்றவனுமான முருகக்கடவுள், '(எவ்வித விஷயங்கள் உன்னைச்சுற்றிலும் நடைபெறினும் அவற்றைக் கவனியாதவனாய்) மௌனத்துச் சொல் அற இருப்

பாயாக.' என்று சொன்னபோது அதன் பொருளைக்கொஞ் சமும் அறியவில்லை! (பின்னர் எனக்கெல்லாம் தெளிவாக விளங்கின.) இது என்ன ஆச்சரியம் !

## விசேடக் குறிப்புகள்

செம்மான்மகளை என்பதற்குச் செம்மையான மானின் புத்திரியை என்று கூறுவதிற் சிறப்பொன்று மில்லாமற் போவதோடு, இயற்கை விரோதமு மேற்படுகின்றதெ‌ன எண்ணுவோர் உளராதலின், அவ்வுரை பொருந்தாதெ‌ன அறிக. திருமாலே துர்வாசரது சாபத்தால் சிவமுனியாகப் பிறந்த உண்மையை உபதேசகாண்டத்துச் சிவமுனி முதலி யோர் வரலாற்றின்கண் உணர்க. வள்ளி அதனால் தெய்வப் பெண் என்பது வெளியாகும். தெய்வப் பெண் என்பாள் யாவள்? மனிதரது சமூகக் கட்டுப்பாடுகளுக்குள் நில்லாத மாந்தர்க்குத் தோன்றும் குழந்தைகளெல்லாரும் தெய்வக் குழந்தைகள் என்பது உலகத்து அறிஞர்களது மதம் என் றறியவும்.

"**தெய்வக் குழவித் தலமிது**; செப்பு மாதர்ச நபி
உய்யக் கொளுந்தலம், நூற்றலம், சீவ னுறுதுயரம்
மெய்யிற் படாவகைக் காக்கும் தலம்உவை ; மெய்த்தவர்சேர்ந்
தையக் குழுதொலைத் தன்பிற் குலாவு மரண்அதுவே."

—**சத்தி நிபாதக்கோவை.**

அவ்வகைய தெய்வக் குழந்தைகளில் ஏசுவும் ஒருவர் என்பது உலகம் அறிந்தது ; அதுபோலவே வள்ளியும் சிவமுனிவரது தெய்வக் குழந்தையாகப் பிறந்து, வேட்டுவ அரசனது மனையில் வளர்ந்துவந்தவ ளாவள். இத்தகைய நிலையிலுள்ள பெண்களுக்கே கந்தர்வம் ஒத்ததெ‌ன்பது சகுந்தலையின் கதையிலிருந்து நாம் அறிய நிற்பது. இதனால் வள்ளி நாச்சியாரிடத்து முருகன் அகப்பொருட் டுறையிற்

சிறந்த களவு (Courtship) ஒழுக்கத்தை அநுசரித்தது முறையே யாகும். இவ்வுண்மையை ஒருவன் அறிவானாயின் உலக ஆசாரங்களின் நுட்பங்களை யறியும் கருவி அவனிடத்துக் கிடைத்ததுபோலாம். பின்னர் அவன் பல ஒழுக்கங்களையும் அவ் வவற்றின் மூலமறிந்து விளைவறிந்து கையாள வல்லவனாவான். ஆனதுபற்றியே "செம் மால் மகளைத் திருடும் திருடன்...............பிறவா னிறவான்" என்றார். திருடனென்றதை விஷயங்களைத் தெளிவுபெற உணர்ந்த கள்வனென்ற பொருளில் உபயோகித்தார். அத்தகைய விஷயங்களை முற்ற உணர்ந்த ஒருவன் பிறருக்கு அவற்றை எடுத்துச் சொல்வதால் உண்டாகும் வாத விவாதங்களையும் சாதாரண மாந்தரது அறிவுக்குறைவையும் கருதியும், அறிவு வளர்ந்த அக்கணமே அவ்வறிவைப்பெற்றோருடைய வாயும் மௌனப்பட அவனும் அடங்கிச் சும்மாவிருப்பதை எண்ணியும், அச்செய்கை உயர்ந்த நெறியிற் சென்றவரா லநுஷ்டிக்கப்படினும் அதனைச் சாதாரண அறிவோடு கூடியவர்கள் தங்கள் அறிவு அப்பெரிய நிலைக்கு வரும்வரை உணரக் கூடாதிருப்பதால் அத்தகைய குறைந்த அறிவாளிகள் அப்பேரறிவாளனைத் திருடனெனப் பிறழ்ந்து கூறுவது முறையானது பற்றியும், 'திருடும் திருடன்' எனக்கூறினார் என்றறிக. ஆராய்ந்து அறிஞரால் செய்யப்படும் செய்கைகள் அழியாமல் நிற்பதோடு அவ் வினைஞருக்கும் அழியாப் புகழை உண்டாக்குவதால், அன்னார்க்குப் பிறப்பென்னும் பேதைமையும் இறப்பென்னும் மறதியும் இல்லாது ஒழிவதனைச் சூசிப்பிக்கப் "பிறவா னிறவான்" என்றார். மேலும் எச்செய்கைக்கும் அச்செய்கையின் மூலமும் விளைவும் முதற்கண் தோன்றா. ஒரு செய்கையை ஆட்டுவது அச்செய்கைக்கு அநுகுணமாக ஒருவனிடத்து அமைந்துகிடக்கும் கருவி கரணங்களாம். அக்கருவி கரணங்கள் காந்தத்

தைக்கண்ட கருந்தாதினைப்போலத் தமக்கொத்த வினை நேர்ந்துழித் தொழிற்பட்டு நிற்கும். அதனால் அச்செய்கை நடந்தேறிவிடும். பின்னரே, அறிவு அச்செய்கையின் மூலத்தினையும் விளைவினையும் பரிசீலனை செய்யத் தொடங் கும். அப்படிச் செய்யும்போதுதான் அலர் எழுவது. அவ்வலர் அறிவாளிகளால் நன்கு ஆராயப்படும். செப்பம் வாய்ந்து சிறந்த பெரியவர் ஒப்பநின்ற உலகத்து, போசனை வாய்ந்தவர் அப் பரிசீலனையின் பயனாக உரைக்கும் துணி பொருளையே சாதாரண உலகத்தினர் மதக் கொள்கை யெனக் கூறுவர். ஆனதுபற்றி அத்தகைய உத்தமமான யோசனைச் சிறப்புவாய்ந்த ஒருவனாக நீ விளங்கவேண்டு மானால் மௌனத்தோடிருப்பதே முறை யென்பதுதான் குருநாதன் தனக்கு மொழிந்தது என்பார், 'சும்மா விரு சொல்லற என்றலுமே' என்றார். உலகத்துக்காணும் ஓ உண்மை இது. ஒன்றிலும் கருத்துவையாது சும்மாவிருப் பவனிடத்து, ஸதா தொழிற் செய்யும் இராஜஸ உலகப் நெருங்கிவந்து அவனுக்கு வேண்டாத விஷயங்களையெல் லாம் அவன் காதிற் புகுத்தும். அப்பொழுது அவன் மனத்துக்கண் முன் னிருந்த ஐயப்பாடுகள் பல ஒழியும் அவன் பின்னர்த் தெளிந்து மேல் நிலைக்குச் செல்லுவான் இவ்வகையாகச் சும்மா விருக்கப் பழகும் ஒருவனுக்கு உலக மானது தன்னை யறியாது உணர்வை யூட்டுகிறது. இவ் வுண்மை முதற்கண் அம் மௌனிக்கும் தெரியாது. பின்ன ரேற்படும் சுவாநுபவங்களால் அவன் அதனை யறிகிற னென்பதையும் அவ்வறிவுண்டான பின்பு அவனே உணர் ந்து ஆச்சரியப் படுகிறனென்பதையும் உணர்த்துவார் 'அம்மா பொருளொன்றும் அறிந்திலனே' என்றாரென வறிக. எனது வாழ்நாளில் ஒருமுறை ஒரு விஷயத்தின் கண் ஐயப்பாடுகள் நிகழ்ந்த காலத்து அவ்வையப்பாடு

ஒன்றோ மற்றொன்றோவென ஐயுற்று வினவிய உள்ளத் தொடும் யான் முருகக் கடவுளை நினைத்துத் தியான சாதனை யின்கண் இருந்தபோது அம் முருகனாலேயே சுட்டியருளப் பெற்ற செய்யுள் இதுவாதல் அறிக.

## இருள்வழி கடக்க

முருகன் தனிவேல்முனி நம்குருவென்
றருள்கொண் டறியா ரறியும் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே. 13

### அந்வயம்

முருகன் (என்றும்) தனிவேல்முனி (என்றும்) நம்குரு என்று(ம்) அருள்கொண்டு அறியார், உருஅன்று, அரு அன்று, உளது அன்று, இலதுஅன்று, இருள் அன்று, ஒளி அன்று என நின்றதனை, அறியும் தரமோ?

### பொழிப்புரை

தலைப்பு :—[மேல்நடக்கப் புகுவது இன்னதென்று அறியமுடியாமல் மனமும் அறிவும் கலங்கு யோசித்துத் துணிந்தபடி யெல்லாம் செல்லும் குருட்டு வாழ்க்கையாகிய இருட்டு நெறியைக் கடந்துசெல்லும் உபாயத்தை அறிவிக்கும் மறை இது. 'இருள்வழி நடக்க' என்னும் பாடத்தினும், 'இருள்வழி கடக்க' என்னும் பாடமே சிறந்தது.] அஞ்ஞானமாகிய நெறியைத் தாண்டிச்செல்ல.

செய்யுள் :—முருகன் என்றும், ஒப்பற்ற வேலாயுதத்தையுடைய முனிவன் என்றும், அவனே நமது (அஞ்ஞானாந்தகாரத்தைப் போக்கும்) குருவென்றும், அக்குருவினது அருளே யுணர்த்த அவ்வுணர்வுகொண்டு மனக்கண்ணால் அறியவல்லவரல்லாதவர்கள், ரூபமுள்ளதல்ல, அரூப

மானதுமல்ல, உள்ளதென்று கண்ணுக்குக் காட்டக்கூடியதுமல்ல, இல்லையென்று துணிந்து சொல்லக்கூடியதுமல்ல, அஞ்ஞான ரூபமாகிய இருட்டுமல்ல, ஞானரூபமான ஒளியுமல்ல எனப் போதத்துக்கு எட்டாமல் நின்ற வஸ்துவினை அறிதல் சாத்திய மாகுமா? (ஆகாது என்றபடி.)

## விசேஷக் குறிப்புகள்

எதிர்காலத்து நேரப்புகுவது இன்னதென்று முற்றும் மாந்தரால் அறியக்கூடாமைபற்றி இருள்வழி என்றார் தலைப்பில். முருகனது அருளுணர்த்தத் தெளிந்து அம்முருகனைத் தமது குருவெனக் கொண்டு அம்முருக சாதனையின்கண் ஒழுகுவார்க்கு முன்பின் அநுஸரணைகளைப் பரிசீலித்துச் சிறிதளவாக அவ்விருட்டு நெறியை ஒளிப்படுத்திக் கொண்டு செல்லும் அருள்ஞானம் ஏற்படுகின்றமையைக் கண்டவராதலின் அவ் விருள்நெறியைக் கடக்கலாகும் என்று துணிந்த தமது ஞானக்காட்சியால் இச் செய்யுளைக் கூறுகிறார்.

வாதம், தர்க்கம், விசாரம் என்பன அறிவுப்பகுதிக் குட்பட்டன. அவை மெய்யுணர்வு என்னும் பிரத்தியட்ச ஞானத்தைத் தலை எல்லையாகவும், ஒன்றுமறிய முடியாமை என்னும் பெருமூடத்தைக் கடைஎல்லையாகவும் உடையன. இவ்விரு எல்லைக்குள்ளும் நின்று, கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்னும் ஆறாக அறியப்படுபவை யெல்லாம் உலக அறிவு மயமாக நிற்குமே அன்றி உண்மை ஞானமாக ஏற்படா. இதனையே அநுமானப் பிரமாணத்தால் அநுமதித்து அறிந்த விஷயங்கள் என்பர். கடை எல்லையாகிய பெருமூடத்தின்கண் நிற்பவர் கண்டதையே நம்பி அதற்கேற்ற கோலங்களைப் பூண்டு லோகாயதர்களாய்ச் சாருவாக நிலையில் நிற்பர். இந்நிலை தாண்டிச், சுருதி, யுக்தி, அநு

பவம் என்னும் பிரமாணங்களில், அநுபவம் ஒன்றை விடுத்துத் தர்க்காநுவாதங்கள் செய்யும் தார்க்கிகர், பிரத்தியட்ச ஞான மில்லாதவராய், தங்களது அநுமானப் பிரமாணத்தினுல் துணிந்தததனையே உண்மைப் பொருளென எண்ணி, ஏகதேசமாக வஸ்து நிச்சயம் பெற்று வாதித்துத் திரிவர். ஆனுல் நாம் துணிந்து அறிய எண்ணின வஸ்துவானது சொல்லுக்கும் மனதுக்கும் அப்பால் போந்ததானதுபற்றி அது இவ் வாய்வாதப் பேயரால் அறியமுடியாததொன்ருகும். நாம் படிக்கும் சாஸ்திரங்கள் முதலியன நமக்கு அவ்வுண்மைவஸ்துவினை முற்றும் உணர்த்த வல்லன வாகா. ஏன் ? பூரணத்தில் ஒவ்வொரு மனிதனும் ஓர் ஏகதேசப் பகுதியே யாவன். அவனது ஸம்ஸ்காரத்துக்கும் வினைக்கும் தக்கபடிதான் அவனது தேகமும் கருவி கரணங்களும் அமைந்துள்ளன. அத்தேகத்துக்குப் போக்கிய மில்லாத விஷயங்களை அவனது கரணங்களால் அறிதல் இயலாது. ஏகதேசமாக மற்றவர்களது ஸம்ஸர்க்கத்தினுல் அவற்றின் உண்மைகளை அறிந்தபோதிலும் அவை அவனுக்குப் பரோட்சமாக (ஏட்டுக்கல்விபோல) இருக்குமே யன்றிப் பிரத்தியட்ச அநுபவமாக விரா. அதனுல், ஒருவன் தனக்கு நேரும் விஷயங்களை நிதர்சனமாகக் கண்டு அநுபவிக்க, அவனுக்குக் குரு அருள்வேண்டும். அக்குருவும் தம்மிற் புறம்பாக வில்லை யென்பதை யறிந்தவர்கள் தம்மிடத்துள்ள வாலிபத்தை விருத்தி செய்வதே முக்கிய கடமையாகக் கொள்ளவேண்டுமென்பதை வற்புறுத்தவந்தவர், 'முருகன், தனிவேல் முனி, நம்குரு' என்றும், அம்முருகனது அருளை கண்ணுகக் காணவேண்டும் என்பதை உணர்த்த, 'அருள் கொண்டறியார் அறியும்தரமோ, என்றும் கூறினுர். இம் முருகன் ஒவ்வொருவனது ஆதார நிலைகளிலும் உள்ளவனென்பதும், அவ் வொவ்வொருவனது முதுகுத் தண்டேம்

சென்று பாசஉணர்ச்சிகளை யெல்லாம் கெடுத்துக் குண்டலி னியை ஸஹஸ்ராரத்தில் மூட்டவிட்டு, 'வாமப்பாலைப்பருக, மறுவாலிபம் வருகக், காமப்பாலுண்ணக்கண்டேன் மனோன் மணியே.' என்றபடி நமது இளமையை என்றும் நிலைத்ததாகப் பண்ணும் அவனது வேலென்பதும், முற்செய்யுட்களின் குறிப்புகளில் பலவாற்றானும் சூசிப்பிக்கப்பட்டன. 'அவன் அருளாலே அவன் றாள் வணங்கி' என்ற வாக்கும், 'அவனருளே கண்ணாகக் காண்பதல்லால் இப்படியன் இவ்வுருவன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே' என்ற பெரியாருரையும், 'அருள்கொண்டு' என்பதற்குப் பிறர்கூறும் அநுபவ மொழிகளாகும். 'நம் குரு' என்று பன்மைப்படுத்திய தன் கருத்துத் தனக்கு மட்டுமேயன்றித் தரணியிலுள்ளார் அனைவர்க்கும் அக்குமரனே குரு வாவா னென்பதை எடுத்துக் காட்டுவதற்காகுமெனவறிக. வேலென்ற காரணத்தானே அவ் வேல்போலப் பணி செய்யத்தக்க மற்ற சாதனங்களையுங் கொள்ளுதல் தகுதியென்க. ஒரு முடிவுக்குப் பயன்படுவது எக்கருவியாயினும் அக்கருவியை நாமபேதத்தால் வேறுபடுத்திப் பிரிக்க அறிவுடையார் ஒப்புக்கொள்ளார். உண்மையை யறிவிக்கும் நிலையாகிய இக்குருவினது உபதேசமானது, மௌனத்தில் ஒருவன் தன்னை முற்றவும் ஊன்றின பின்னரே ஏற்படுவதானதுபற்றித் தனிவேல் முனி என்னச் சுட்டியுரைத்தார். நித்திய வஸ்துவானது தொந்த நிலைகளையொழிந்து நின்ற நிலையில் இரண்டென்பது அற்றுக் காணப்படுவது என்பதை யுணர்த்தவந்தவர் 'உருவன்று அருவன்று உளதன்று இலதன்று இருளன்று ஒளியன்று' என்ற தொந்த (இரட்டை) நிலைகளை உதாரணப்படுத்திப் பிரித்துக் காட்டினார். இதுபோலவே மற்ற இரட்டை நிலைகளையும் விலக்கிப் பார்க்கவேண்டுமென்பது உபாஸகன் உண

ரத்தக்கதாயிற்று. இம் மனோநிலையில் ஒருவன் நிரந்தரம் நின்று ஒழுகுவானாயின், அவனை யறியாது அவனிடத்து இருள் (அறியாமையால் வரும் அவகேடுகள்) புகுவதில்லை யென்பதையும், அவனது நெறி முற்றும், ஞானம் பெற்றது முதல், அல்லது குருவருள் பெற்றது முதல், ஒளி நெறியாகவே யுள்ளதென்பதையும் பல பெரியாரும் கண்டு கூறியுள்ளார்களென வறிக. மர்க்கடம்போல உபாஸகன் தான் கண்ட நெறியில் நிற்க முடியாமல் கெட்டலையும் போதும், மார்ச்சாலத்தைப்போல் குருவருளானது அவனை ஆட்டி நெறிநிற்குமாறு செய்வதும் அநுபூதிமான்கள் அறிந்தது. அதனால் கர்மத்தினிடத்துச் செயலற்று நிற்பதுபோலவே அருளிடத்தும் உபாஸகன் செயலற்று நிற்பது கண்கூடு.

> உடலும் பொறியும் வெறியுற்று நிற்க, உயர்மனந்தான்
> அடலிற் றனதகங் காரத்து மெய்யடக் காதொழுக
> மடமீக் கறிவுதன் போத மிழக்க, மகிமையொடும்
> கடவுள் அருள் அவற் பற்றலிற், செல்வன்றேர் கண்ணுற்றதே.
>
> —சத்திநிபாதக்கோவை

இதனல் மனிதனுக்குத் தனக்கெனச் செயலொன்றில்லாமை எல்லாவிடத்தும் அறியப்பெற்றது காண்க.

பாத தரிசனம் செய்ய

> கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
> றுய்வாய் மனனே ஒழிவாய் ஒழிவாய்
> மெய்வாய் விழிநாசி யொடும் செவியாம்
> ஐவாய் வழிசெல்லு மவாவினையே. 14

அந்வயம்

கைவாய் கதிர்வேல் முருகனது கழல்பெற்று உய்வாய் (ஆகும்) மனனே! மெய் வாய் விழி நாசியொடும் செவி

ஆ(கு)ம் ஐ(ந்து) வா(யின்) வழி செல்லும் அவாவினை(ஏ) ஒழிவாய் ஒழிவாய்.

## பொழிப்புரை

**தலைப்பு** :—[இருவினை ஒப்பும் மல பரிபாகமும் ஏற்படும்போது இறைவனது பாதமாகிய சக்தி பக்குவமுற்ற உபாஸகனது சிரத்தில் பதியும் ஓர் அற்புதத்தை அநுபூதி வாயிலாகப் பார்க்க ஓதும் மறை இது.] இறைவனது இரண்டு பாதங்களும் ஒருவனது சிரசில் பதிந்து நிற்கும் போது அவற்றை அவன் ஜாக்கிர நிலையில் நின்று தரிசிக்க.

**செய்யுள்** :—கையினிடத்து ஒளிபொருந்திய வேலைத் தாங்கிய முருகனது கால்கள் (சிரமீது நிற்கப்) பெற்று நற்கதியடையும் தீவிர பக்குவம் வாய்ந்த உள்ளமே! (உனக்கொரு உபதேசம் சொல்லுகிறேன் கேள்.) மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் பஞ்சேந்திரியங்களின் வழியாகப் புகும் ஆசைகளை (விரைவில்) விட்டொழிப்பாயாக.

## விசேஷக் குறிப்புகள்

மனிதப்பண்பு மூன்று வகைப்பட்டது. ஒரு வகையினர்க்குத் தம்மைப்போன்ற பிறர் தம் அருகுநின்று சொன்னாலல்லாமல் விஷயங்களின் உண்மை விளங்காது. இத்தகையோர் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களும் கதிப்புடன் நிற்கும் சகளர் எனப்படுவர். இவர்களே தூலகுருக்களை நாடிச் சென்று அவரையே முற்றும் கதி என நம்பி அவரை வழிபட்டு ஒழுகுபவர்கள். இவ்வகையாக இவர்கள் வழிபட்டு ஒழுகுவதால் மாயை என்னும் பிராந்தி ஒன்றுமட்டும் இவர்களைவிட்டு ஒழியுமேயன்றி ஆணவமும் கன்மமும் ஒழிந்து நில்லா. அதற்குக் காரணம் அவர்கள் வழிபடும் தூல குருக்களிடத்தும் இவ்

விரண்டு குணங்களும் ஒழியாமையே. இனி இவ்வகை மாயை மயக்கு ஒழிந்தவர் இரண்டு மலமுடைய பிரளயா கலர் என்னப்படுவர். இவருக்குத் தூல குருக்கள் தங்களைப் போன்றவர்களே என்ற உணர்ச்சி வரும். அதனுல், இவர்கள், கன்மத்தை ஒழித்துச் சூக்கும தேகிகளாக மாறி நிற்கும் பக்குவ தேகிகளாகிய உபாஸனு மூர்த்திகளை ஞானம் பெறுமாறு உபாஸிக்கத் தொடங்குவர். இவ்வுபாஸனு மூர்த்தி பேதங்களால்தான் பக்த ஜனங்களிடத்து ஏற்படும் அபிப்பிராய பேதங்கள் தோன்றுகின்றன. அதனுல் ஒருவனுக்குத் தக்க உபாஸனுமூர்த்தி கிடைப்பது அவனது அதிர்ஷ்ட வசம் என்னலாகும். நம் முன்ஞேர் ஆதித்யம், அம்பிகாம், விஷ்ணும், கணநாதம், மகேசுவரம் என்றபடி 5 உபாஸனுமூர்த்தங்களைச் சிறப்பாகக் கொண்டுள்ளார்கள். ஆதித்யனது அம்சமாகவே அக்கினியையும் உபாஸிப்பர். அம்பிகையினது அம்சமாகவே, முச்சத்திகளும், பஞ்ச சத்திகளும், ஸப்தமாதர்களும் உபாஸிக்கப்படுவர். இவர்களை ஸமயமுறைப்படி அல்லது வைதிக முறைப்படி ஆராதிப்பதுதான் சரியான நெறி. வாமநெறி அல்லது பஞ்ச மகாரங்களோடு ஆராதிப்பதாகிய கௌலமுறைப்படி உபாஸிப்பது தவறென்று சுபாகம பஞ்ச தந்திரங்கள் முழங்குகின்றன. விஷ்ணு வடிவான ஞான குருவை உபாஸிப்பர் வைஷ்ணவ சமயிகள். இவர்கள் நேர்முகமாக விஷ்ணு உபாஸனையைக் கைக்கொள்ளாராய்த் தச அவதாரங்களை ஆராதிப்பதே மேலாகக் கொண்டு அவற்றிலும் இராமாவதாரத்தையும், கிருஷ்ணுவதாரத்தையும் அர்ச்சனு ரூபமாக வணங்குவது வழக்கமாக விருக்கிறது. கணநாதனும், மகேசுவரனும், துயருற்றவனுலும் பொருளை விரும்புவோனுலும் பூஜிக்கப் பெறுவர். உண்மையை அறிய விரும்புவோன், இவ்விருவரது தூல்லிய ரூபங்களான முருகன்,

தக்ஷிணாமூர்த்தி யென்னும் இரண்டு உபாஸனாமூர்த்திகளை யாராதித்துவணங்குவன். இம் மூர்த்திகளிரண்டுமே தேர்ந்த உருவமில்லாதவனாகிய குருமூர்த்தியின் தன்மையைக் காட்டும் சக்தி வாய்ந்தவை. மேலே சொன்ன ஐந்து உபாஸனா மூர்த்திகளையும் அவற்றின் பிரதிபேதங்களையும் உபாஸிக்கும் பிரளயாகலனுக்கு ஜன்மாங்குர வேதுவான கன்மம் ஒழிந்துபோகிறது. இக்கர்மம் ஒழிவதற்கு முன் னறிகுறியாக அவ் வுபாஸனாமூர்த்தியின் பாததாடனம் உபாஸகனது சிரமீது ஏற்படுகிறதென்பது எல்லாப் பெரியாரும் தங்கள் ஸ்வாநுபூதியிற் கண்டது. இவற்றுள் முருகோபாஸனையில் நிற்பவர்களுக்கு வேல் துவாரா குண்டலினி சுத்தியும், நடமாடக்கோயிலாக உபாஸகன் நிற்க வல்ல திறனும் ஏற்படுகின்றன. இதனால் மனிதன் உடல்தூய்மையும் மனத்தூய்மையும் பெற்று ஞானவானாகிறான். ஆகையினால்தான் கந்தர் அநுபூதி எல்லா உபாஸனாநூலினும் சிறந்த மறைநூலென்பது. இவ்விதமாக ஒரே மலமாகிய ஆணவம் மாத்திரம் நிற்க, மற்ற இருமலங்களும் ஒழிந்த மூன்றாவது நிலையில் உபாஸகனுக்கு விஞ்ஞானத்துவம் ஸித்திக்கிறது. அவனை விஞ்ஞானாகலன் என்னும் மூன்றாவது பகுதியனெனக் கூறுகிறோம். இச்சகள, பிரளயாகல, விஞ்ஞானாகலத் தன்மைகள் ஒருவனுக்கே கிரமமாக உண்டாவனவென்று அறிக.

சித்தாந்த நூல்களில் மூன்று பகுதியினவாக வகுக்கப்பட்டு மூன்றுபோலக் காட்டியிருப்பது பரோக்ஷவாதமேயன்றிப் பிரத்தியக்ஷ அநுபூதி யாகாது. சாஸ்திரம் வரையறுத்துக்காட்டும் சில வுண்மைகளை, மாந்தர் ஜனசமூகத்திற் பொருத்தி, ஜனங்களை வேறு வேறு சமூகங்களாகப் பிரித்துக்காட்டி அவையே உண்மையெனச் சாதிக்கும் பிடிவாதம் போன்றதிது. எனினும் சொற்ப அநுபூதி ஞானம் வாய்ந்தவனும், இவ் வரையறைகளைக் கடந்து தான் செல்

றிருக்கும் உண்மையைத் தனது அநுபூதிவாயிலாக உணர்வான். அப்படி யுணரும்போது உலக கற்பனைகள் முறுக்கற்று நிற்கும் நிலை அவனுக்குத் தெரியவரும். இவ்விதம் ஞானியான பின்னர் அவனது கர்மம் வேறு வகைப்படும். இதுவரை அவன் அநுஷ்டித்து வந்தது, ஞானம் பெறுவதற்காகச்செய்த அப்பியாச கருமம். இனி அவன் அநுஷ்டிப்பது உலக உய்வுக்காகச் செய்யும் ஆரூட கர்மம். இக்கர்மத்தின் நன்மை தீமைகள், இவன் தனது சத்திநிபாதம் பெற்ற அல்லது அருளடைந்த உடற்கூற்றின் விஜ்ரும்பனத்தால் செய்யப்பெற்றவை யாதலின் அவனுடைய செயல்களென அவற்றைக் கூறலாகாது.

"ஊனடைந்த உடம்பின் பிறவியே
தானடைந்த உறுதியைச் சாருமால்,
தேனடைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மாநடம்செய் வரதர் பொற்றாள்தொழ."

என்றபடி 'வான்பார்க்கும் பைங்கூழின்' வாளா இறைவனது அருளை உபாஸகன் பார்த்து நிற்க, இவனது உடற்கருவிகள் தமக்கென அமைந்த அதிர்ச்சி யுணர்வின்படி தமது காரியங்களைச் செய்து, இவனுக்குப் பிறவியின் பயனைத் தரும். இவ் விஞ்ஞானகலனுக்கு இனி எதிர்வைத்துப் போற்றத் தன்னுடம்பிற் பிறிதான வேறு உபாஸனமூர்த்தம் இல்லாதுபோகவே, அவன் தனக்குள்ளே இரண்டறக்கலந்த அவ்வுபாஸனமூர்த்தியின் பரிணமமான ஆத்மசக்தியையே சதா உற்றுநோக்கினவனாய், சீதோஷ்ண நிலையை யறிய விரும்புகிறவன் சீதோஷ்ணமானியாகிய கருவியைச் சதா பார்த்து நிற்பதுபோல நிற்பான். அப்போது உலகம் இவனெதிர்ப்பட்டு ஸந்நிதி முத்தொழி லியற்றுதல்போலச் சுகதுக்க ரூபமாக ஆடிக்காட்டும். அவ் ஆட்டங்களில் கலக்கமுறாதவனாய்த் தன்னையும் தனக் காதாரத் தலைவனையுமே

ஏகீபாவப்படுத்தி ஸஹஜ நிஷ்டையில் நிற்பான். அப்பொழுது,

"எனக்கெனச் செயல் வேறிலை ; யாவுமிங் கொருவின்
றனக் கெனத் தகுமுடல் பொரு ளாவியும் தந்தேன் ;
மனத் தகத்துள அழுக்கெலா மாற்றி யெம்பிரானீ
நினைத்த தெப்படி யப்படி அருளுதல் நீதம்."

—தாயுமானுர்.

என்றபடி உள்ள விசாரணையே முக்கிய தொழிலாகக் கொண்டு மற்றைய புறத்தொழில்களில் மனஞ் செல்லாது நிற்பன். இந்த நிலை வருவதற்கு அதிதீவரபக்குவம் வர வேண்டுமென்று பிரார்த்திப்பதே மனம் படைத்ததன் முக்கிய கடனுனதுபற்றி, 'உய்வாயாகும் மனனே' என்று அம் மனதை விளித்துப் பொறிவழி செல்லும் ஆசையை 'விரைவாக விடுவாயாக' என்று அதற்கு உபதேசம் செய்தார். மனமே ஒழிவாய் கழல்பெற்று உய்வாயெனச் சாதாரண உரை கூறுவதிற் சிறப்பின்மை உய்த்தறிந்து கொள்க. ஏற்கனவே அருளின் பலத்திஞல் மனமானது முருகன் கழல்ஞானத்தை யெய்தியுள்ளதை யருட்கண்ணுல் கண்டு அநுபவித்தவர்கள்தாம் தங்கள் மனதுக்குத் தீவிரதரமான பக்குவம் ஏற்படுமாறு உபதேசம் செய்ய முடியுமென அறிக. இப் பாத தாடன முறையை ஒரு சாரார் ஒப்புக்கொள்ளாது, அது பித்தத்திஞல் ஏற்பட்ட மதிமயக்கத் தோற்றமென்பர். அவர்களுக்கு இவ்வநுபவம் ஏற்படாதவரை அவர்கள் இவ்வுண்மையை நம்பாவிடினும் தூஷியாமலிருப்பதே பேரறிவுடைமையாகும். சிலர்க்குக் கருவிலேயே இவ் விரண்டறக் கலப்பென்னும் முறை அமைந்துவிட, அம் முதியஞானிகள் பிறந்த நாள் தொடங்கியே ஸ்வாநுபூதி நெறியாகிய ஆரூடகர்மங்களைச் செய்ய

வல்லவராவர். வேறு சிலருக்கு இம்முறையில் செல்லுவதற்கான பக்குவமே இல்லாதிருப்பினும் இருக்கும். ஒரு சிலரே தங்களது இவ் வெடுத்த பிறவியில் இவ்வனுபவம் பெற வல்லவ ராவர். முன்சொன்ன கருவிற்பெரியாருக்கு இவ்வநுபவ மடைபவர்களைக் கண்டு ஐயமுறவாவது அவநம்பிக்கை கொள்ளவாவது மனந்தோன்றாது. பின்சொன்ன அபக்குவிகளுக்கு இவ்விஷயத்தில் நம்பிக்கையே யுண்டாகாது. ஆதலின் அறிஞர் எல்லாரும் இப்பகுப்புகள் மூன்றினையும் நன்கறிந்து அவற்றிற்குத் தக ஒழுகி இம் முப்பகுப்பையும் இவ் வொருபிறவியிலேயே அடைய முயலவேண்டுமென்பது எனது பிரார்த்தனை யாகும்.

அஷ்டாவதானம் செய்ய

முருகன் குமரன் குகனென்று மொழிந்
துருகும் செயல்தந் துணர்வென்று அருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவும்
குருபுங்கவ ! எண்குண பஞ்சரனே ! 15

அந்வயம்

பொருபுங்கவரும் புவியும் பரவும் குருபுங்கவ ! எண்குண பஞ்சரனே ! முருகன் குமரன் குகன் என்று மொழிந்து உருகும் செயல் தந்து உணர்வு என்று அருள்வாய் ? (நீ சொல்வாயாக)

பொழிப்புரை

தலைப்பு :—[ஒரே காலத்துப் பல காரியங்களை மனத்தில் தாரணை செய்துகொண்டு அப் பல காரியங்களையும் குறையறச் செய்து முடிக்கும் ஆற்றலை யடையும் நெறியை உணர்த்தும் மறை இது.] எட்டுவிதக் காரியங்களை மனதில் தாரணை செய்துகொண்டு அவற்றைச் செய்து முடிக்க.

செய்யுள் :—அசுரரோடு போர் செய்கின்ற தேவர்களும், உலகினரும் வணங்குகின்ற குரு சிரேஷ்டனே ! (இயல்பாக அமைந்த) எட்டுக் குணங்களாகிய கூட்டுக்குள் விளங்குபவனே ! முருகனென்றும், குமரனென்றும், குகனென்றும் (உனது சிறப்புடைத் திருநாமங்களைச்) சொல்லி (மனம்) உருகுகின்ற செயலை (எனக்கு) அளித்து உண்மையுணர்வை நீ எப்பொழுது தருவாய் ? (சொல்வாயாக.)

## விசேஷக் குறிப்புகள்

எண்குண பஞ்சரனே என்ற சொற்றொடர் அஷ்டாவதானம் செய்ய என்ற தலைப்பிற்கு ஆதாரமாயிற்று. பஞ்சக்கர ஆனை எனக் காப்புச் செய்யுளின் சொற்றொடர் விபூதி தியானம் என்ற தலைப்பிற்கு இடமளித்தது போன்றது இது. சதாவதானம், துவாதிரும்சத் (32) அவதானம் சோடசாவதானம், அஷ்டாவதானம் எனப் பல அவதானங்களுளவாக ஈண்டு எட்டு அவதானத்தையே குறிப்பித்ததில் பெரும்பயன் காணக்கிடைத்திலதாயினும், கீழ்ப்படியில் பயிலத்தொடங்குவோர் மற்றைப் படிகளையும் எய்துதல் கூடுமென்பதை உணர்த்தவே அஷ்டாவதானத்தை மட்டும் எடுத்துக் காட்டினரென அறியக் கிடக்கின்றது. எண் குணங்களாவன, தன் வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், பேர் அருளுடைமை, முடிவு இல் ஆற்றலுடைமை, வரம்பில் இன்ப முடைமை என்னும் எட்டுமாமெனப் பரிமேலழகர் கூறுவர். இத்தகைய எட்டுக் குணங்களையும் உபாஸகன் தன்னிடத்து அமைவனவாக மதித்து அநுபூதி பெறின் அவனுக்குத் தலைப்பிற் சொன்ன எட்டேயல்ல நூறு அவதானங்களும் செய்யமுடியும். இப்பாவனையோடு, முருகன், குமரனென்னும் பாவனைகளும், இதய குகையில்

வசிக்கும் அறிவுப் பொருள் என்னும் பாவனையும், தேகதிடம் மனோதிடம் இரண்டையும் அளித்து மெய்ஞ்ஞானத்தையும் விருத்திபண்ணு மென்பதைத் தோற்றுவிக்கவே "முருகன் குமரன்..........உணர்வென்றருள்வாய் ?" என்று வினவினா ரென்க. இவ்வினா முகத்தானே உபாஸகன் அடைந்து அநுபவிக்கவேண்டிய தன்மைகளை அவலம்பிக்குமாறு உபாஸகனுக்குச் சூசனை காட்டினார்.

புங்கவரும் புவியும் என்று கூறினதால் இனத்தால் நாக உலகத்தினரையும் கொள்க எனக்கூறியவாது உரையும் கருதற்பாலது. மூவுலகினரும் பரவுகின்ற என்பது பொருள். அந்தகாரத்தைப் போக்கும் குரு சிரேஷ்டன் முருகனை துபற்றி மறதி யென்பதில்லாமல் எடுத்த காரியங்களை யெல்லாம் செவ்வனே செய்து முடிக்கும் ஆற்றல் அக்குருவைத் துணையாகப்பற்றிய சீடர்களுக்கு அமைவது சொல்லாமலே விளங்கியது. "இருதயமும் சில நாளாய் ஊகையுள், உருகி மகிழ்ந்திட ஏதோ வாதனை, இடர்கள் தவிர்ந்திடலாமே ஞானமு, மிதுதானே." முதலிய பதஞ்சலி ஞானத் திருப்புகழ் அடிகள் ஈண்டு கருதத் தக்கன. ஒரு எண்ணமானது மனவாறுகப் புத்திக்கண் சென்று மண்ணுக்குள் வித்து முளைப்பதுபோல மூளைக்குள் அங்குரிக்குமென்றும், அதன் அங்குரிப்பு மூளைக் கனிவின் பக்குவத்துக்கு ஏற்றதேயன்றி அங்குரியாமலே போவது எக்காலத்து மில்லை யென்றும் மனஸ்தத்துவ நூலார் கூறுவர். மேற் சொன்ன உருக்கமானது அம் மூளைக்கனிவைத் துரிதப்படுத்தி ஒருவனது உள்ள வாற்றலை விருத்திப்படுத்து மாதலின் 'உருகுஞ் செயல் தந்து' என வற்புறுத்திக் கூறினா ரென்க. இதனையே தீவிரதர மென்பர் ஏனையோர். இவ்வுருக்க நிலையைக் கைக்கொண்டு தியானிப்பதனால் உபாஸகனது கருவி கரணங்கள் விரைவிற் செம்மைப்பட, அவன் மேற்கொண்ட காரியங்

களை விரைவிற் செய்துமுடிக்க வல்லவனுவதுடன் திறமை யோடு செய்யவல்லவனு மாகிருன். இதனுல் யோக மார்க்கத் தினும் உபாஸனை நெறி இலகுவிற் பலனளிக்கவல்லதென்ப தும் தெரியவரும். ஏன்? இவ்வுபாஸனு மூர்த்தமாகிய குருவானவர் அவ் வுபாஸகன் கருதியவற்றை ஒழுங்குபடுத்தித் திரட்டி வெண்ணெய் போல அவனுக்கு அளிக்கும் உதவி அவனுக்கு எப்போதும் கிடைத்தலால் என்க. அம் மூர்த்தமும் ஸ்தூல குருக்கண்மாரிடத்துள்ள குணத்ரய வாதை யொழிந்த நிலையில் நிற்றலே அதற்குக் காரணம் என அறிக.

## பேராசை விலக்க

பேராசை யெனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையே னுழலத் தகுமோ?
வீரா! முதுசூர் பட வேலெறியும்
சூரா! சுரலோக துரந் தரனே! 16

## அந்வயம்

வீரா! முது சூர்பட வேல் எறியும் சூரா! ஸுரலோக துரந்தரனே! பேர் ஆசை எனும் பிணியிற் பிணிபட்டு ஓரா வினையேன் உழலத் தகுமோ? (தகாது என்றபடி.)

## பொழிப்புரை

தலைப்பு:—[பிறவிக்கு வித்தாய், அசுத்த மாயையின் சம்பந்தமாயுள்ளதான அவி யாசையை விலக்குதற்கான நெறியைப் போதிக்கும் மறை இது.] அளவுகடந்த ஆசை உபாஸகனை யணுகாதபடி மாற்ற.

செய்யுள்:—வீரனே! பழமையாகிய நடுக்கம் கெட உனது வேலினை அந் நடுக்க முற்றவன்மீது எறிந்து அவ னுக்கு அழியா நிலை வருமாறு செய்யும் சௌரியம் வாய்ந்த

வனே! தேவலோகத்தினரது பாரங்களைத் தாங்கவல்ல வனே! யான் அளவுகடந்த ஆசையெனும் நோயிற்குட்பட் டுச், செய்வது இன்னதென்று அறியாதவனாய், உலகில் வினை யல்லா வினைகளைச் செய்துகொண்டு உழலுதல் (உன் திருவடி ஞானமும் வேல் தீட்சையும் பெற்ற பிறகு) நியா யம் ஆகுமா? (ஆகாதென்றபடி.)

## விசேடக் குறிப்புகள்

பேராசை என்ற முதல் சொற்றொடரே தலைப்புக்கு ஆதார மாயது. தலைப்புகளை மாற்ற விரும்பிய உரையாள ரும் இத்தலைப்பை மாற்றுதல் வல்லவ ரல்லராயினர். இம் மறையின்கண் உள்ள "முதுசூர் பட வேல் எறியும் சூரா" என்பதற்குக் கூறிய புத்துரை இவ்வுரையாசிரியர் மதம். புராணக்கதைகள் சில சமயங்களில் உண்மையை வெளிப் படுத்த ஒப்புயர்வற்ற கருவிகளாக விளங்குவது உலகப் பிர சித்தம். ஒன்றிரண்டு உதாரணம் காட்டுவல். "சிரகிரி விளங்கவரு தட்சிணாமூர்த்தியே சின்மயானந்த குருவே!" என்னும் விளிக்குத் 'திருச்சிறாப்பள்ளி மலைக்கண் விளங்கா நிற்கும் அருட் டுறையின்கண் சிறந்து நிற்கும் தக்ஷிணா மூர்த்தி விக்கிரகமே, ஞானமயாநந்தத்தைத் தரும் குருவே' என்று தூலமாக உரை கூறுவதினும், 'தனது அறியாமை யைப் போக்கிக்கொள்ள விரும்பும் ஒவ்வொரு மனிதனது தலையாகிய கிரியிலும் விளங்கி நிற்குமாறு வருகின்ற ஞான மிகுந்த குருமூர்த்தமே, அறிவுமயமான இன்பத்தைக் காட்டி அஞ்ஞானத்தைப் போக்குபவனே' என உரை கூறுவது சாலச் சிறப்புடைத்தாகும். இதுபோலவே 'மந்த்ர குருவே யோக தந்த்ர குருவே மூலன் மரபில் வரு மோன குருவே' என்பதற்கும் ஒருவித தத்துவவுரை யுண்மை அறிக. இச்'சூர்' என்னும் சொல்லுக்கு நடுக்கம் என்பதும்,

வேல் எறிவதனால் உடல் சத்தி நிபாதம் பெறுவதும் இந் நூலின் 4-வது மறையின் விசேஷக் குறிப்பினுட் கூறப்பெற் றுள்ளன காண்க. இனி, பேராசை பிணியானது எப்படி என் பதையும், அப் பிணியின் நின்று உழலாமல் தப்பும் மார்க்கத் தை இம்மறையில் எப்படிக் குறித்துள்ளா ரென்பதையும் உணர்வோம். ஓர் உரையாளர் வடமொழி மதம்பற்றி, அவித் தை, அதனால் எழும் அகங்காரம், அவ்வகங்காரத்தால் தோன்றும் அவா, அவ்வாவினால் எதிர்ப்படும் பொருள் களின் மாட்டுச் செல்லும் ஆசை, அவ்வாசை நிறைவேறாத் தால்வரும் வெகுளி, என ஐந்து குற்றங்களெனக் கொண்டு "அவாவுதல் ஆசைக்கண் அடங்கலின் அதனையே விதந்து பேராசை என்னும் பிணி யென்றார்" என்று விளக்கிப் போந்தார். இதனினும் சிறந்த மற்றொருவரது மதத்தை யீண்டு விளக்குவேன். 'ஒரு பொருள் தனது உணர்வுக் கும் புறக்கருவிகளுக்கும் ஒத்த உணர்ச்சியைப் பிரதிபலித் துக் காட்டுமாயின், அதனிடத்து உயிர்க்கு அன்பு எழும். அவ் வன்புமாத்திரையில் அது ஜீவகாருணியம் என்ற நிலை யில் குற்றம் தருவ தாகாது. அவ் அன்பு வரம்பு கடந்து செல்லத் தொடங்கும்போது அது ஆசையென்னும் பெயர் பெறும். இவ் வாசையை அடிக்கடி கண்டித்து அடக்கு வதே மனிதன் அறிவு படைத்ததன் பயனாகும். சிற்சில காலங்களில் இவ் வாசையானது தடுக்கவொண்ணா நிலையை யடைந்து மால் அல்லது பேராசை (Longing) என்ற நிலைக்குவந்து ஒரு நோயாக மாறும்' என்பது. இந்நோயை நீக்குவதற்குப் பல வழிகள் உள. ஒன்று, உண்டியை மாற்றி ஸாத்விக உணவைக் கைக்கொள்ளல்; மற்றொன்று, அவ்வகைக் கைக்கொண்டு ஒழுகுவாரொடு பழகல்; மூன்று வது ஆசையென்பதே யில்லாதவனாகிய அநகன்து தாளைத் தன் ஆசைநோய் ஒழியும் உபாயமாகக் கொள்ளல் என்ப

வையாம். இவற்றுள் கடைசியிற் சொன்ன முறையே உபாஸகனுக்குச் சிறந்தது. இப்படிச் செய்வதனுல் மனத்தின்கண் கறை ஏற்படாமற் போக, பரவெளியில் மனவெளி பிறங்குகையில், ஒரு பொருளினிடத்தும் அம் மனம் பின்னமுற மருவாது நிற்கும். "வேண்டத்தக்க தறிவோய் நீ, வேண்ட முழுதும் தருவோய் நீ.......வேண்டி நீயாது அருள் செய்தாய் யானும் அதுவே வேண்டின் அல்லால், வேண்டும் பரிசு ஒன்று உண்டென்னில் அதுவும் உன்றன் விருப் பன்றே." என்ற நிலை வரும். இதனுல் பேராசையானது விலகத் தலைப்படும். இவ் வாசை காரணமான அச்சங்கள், வேண்டுதல் வேண்டாமையிலானது அடிசேர்ந்தவற்கு ஒழியும் என்பதற்கு ஓர் உபாயம் காட்டுவல் :

" அரவிந்தம் தைக்க அழிபடும் உள்ளம் அரன்விழியைப்
பரவுஅந்தப் பண்பினை யோதியின் ஓர்ந்தும் பழியில்பல
காவுந்து சாயக மென்மலர் உள்ளிக் கலங்குறும், மால்
காவு இந்து பெற்ற தாம் அறியாமல் என் கண்மணியே."

—கண்மணிமாலை.

காமத்தினிடத்து நினைப்பூட்டும் அரவிந்தமல ரம்பு மனத்தின்கண் தைக்கப்பெற்ற ஒருவன் மாரனை எரித்த நெற்றிவிழியை நினைத்த மாத்திரையானே அந்நினைப்பு மாறவல்ல தென்பதை யுணர்ந்தானுயினும், ஆசையானது அவனது மனத்தின்கட் பற்றி யிழுக்கப் பின்னும் கவல்வானுக, அவ்வாசையை முற்று மொழிக்க, அவ்வரனது (சந்திரனைத் தலையிற் சூடும்) பண்பின் நினைப்பு வெற்றிபெற உதவுவதை இம்மேற்கோளில் காட்டியுள்ளார், மாதர்மோகத்திற் கெட்டழிந்து க்ஷயரோகியாய் மேல் தப்பும் மார்க்கம் இல்லாதிருந்த அச் சந்திரனுக்கும் இறைவனது பேரருள் உஜ்ஜீவிக்கும் நெறியைக் காட்டிற்று என்பதைச் சுட்டி. அது போலவே பதிபோதத்தில் பசுபோதத்தை இழந்து மேம்

படுவதான நிலையை, மாணிக்க வாசகர், 'தந்த துன்றன் னைக், கொண்ட தென்றன்னைச், சங்கரா யார்கொலே சதுரர்?' என்ற வாக்கியத்தால் உபாயமாகக் காட்டினூர். இப மாதிரியாகவே இம் மறையிலும் "முது சூர்படவே லெற் யும் சூரா" என்ற விளியினுள் பேராசைப் பிணியிற் பிணி படாது நிற்கும் தந்திரத்தைக் காட்டி யருளினூர். மற்றுப் 'சுரலோக துரந்தரன்' என்பதனூல் குறிப்பிடப் பெறுவதுப் ஒன்றுண்டு. தன்னடக்க முள்ளவனுக்கு வரும் இடர்ப் பாரங்களைத் தாங்கி யொழிக்க நீ முன்னிற்பவனூதுபற்ற அவ்வடக்கத்தை மதாணியாகக் கொண்டு ஒழுகும் எனது ஆசைத்துக்கங்களையும் யான் நிவர்த்திக்க வல்ல நற்றுணை யாக உன்னைப் பெற்றிருக்கையில், அப் பேராசையாகிய நோய் என்னைக் கட்டுப்படுத்த யான் அதன் கட்டில் அகப பட்டுழலுதல் தகாதென்பதும் அதனூல் குறிக்கப்பெற்றது தன்னிடத்து அடக்கமும் இறைவனிடத்து அச்ச நீக்குட வேலாகிய மருந்தும் உள்ளவரையில் பேராசையெனுட நோய் தன்னைப்பற்ற முடியாதென்று உபாஸகன் துணிந்து அறிந்துகொண்டபடி.

### தன் நடத்தை மேன்மையாக

யா மோதிய கல்வியும் எம்அறிவும்
தாமே பெற வேலவர் தந்ததனூல்
பூமேல் மயல்போயற மெய்ப் புணர்வீர்
நாமேல் நடவீர் நடவீ ரினியே. 1?

### அந்வயம்

யாம் ஓதிய கல்வியும் எம் அறிவும் (நாம்) தாமே பெ(ற) வேலவர் தந்ததனூல், பூமேல் மயல் போய் அற மெ(ய்) (மை)ப் புணர்வீர்(களாக.) நாமேல், இனி, நடவீர் நடவீ(ர்)

(ஏ அசை). [உபாஸகர்களே! என்னும் விளி அவாய் நிலை யாற் கொள்ளுக.]

பொழிப்புரை

தலைப்பு :—[ஒருவன் நடந்து காட்டும் ஒழுக்கத்தையே பிறர் கண்டு அது சிறந்ததென்று ஒப்புக்கொள்ளச் செய்ய வல்ல மறை இது.] தனது நடை சிறந்து விளங்க.

செய்யுள் :—நாம் கற்ற கல்வியும் நமது புத்தியும் (நாம்) தாமே (இயல்பாக) அடையும் வண்ணம் வேலாயுதத்தை யுடைய முருகக்கடவுள் கொடுத்தருளியவை யானபடியினால் (அவ்வகை முருகன் அருள் பெற்ற உபாஸகர்களே! அல்லது பக்தர்களே!) உலகத்தின்மீ துள்ள மயக்க உணர்ச்சிகள் முற்றும் நீங்கி ஒழியுமாறு உண்மையைக் கைக்கொள்வீர்களாக. (அவ்வுண்மை வாய்ந்த) நாவின் வலிகொண்டே இனி உலக நெறியில் எப்பொழுதும் நடப்பீர்களாக; நடப்பீர்களாக.

விசேடக் குறிப்புகள்

ஓர் உரையாசிரியர், எம்மறிவும் என்பதை மெய்யறிவும் என்றும், நாமேல் நடவீர் என்பதை நாமே நடவீர் எனவும், மூலத்தையே மாற்றிப் போந்தார். அதற்கேற்ப நாமே என்னும் சொல்லுக்கு அகத்திணைத் துறை வழக்க மொன்றைத் திருக்கோவையார் 164-வது செய்யுள் மேற்கோளோடு காட்டி இடர்ப்பட்டார். ஈண்டு அவ் வகத்துறை வழக்குப் பொருத்தமின்மை யுணர்க. இச்செய்யுள் புறத்திணை யொழுக்கத்தை விளக்கும் செய்யுள் என அறிக. மற்றும் ஓர் உரையாசிரியர் தாமே என்பது அசையெனத் தள்ளிவிட்டனர். இருவரும் 'பூமேல் மயல் போயற மெய்ப் புணர்வீ' ரென்பதை விளியாகவே கொண்டனர். நச்சினார்க் கினியர் யாம் என்பது படர்க்கை யுளப்பாட்டுத் தன்மைப் பெயர் என்றும்,நாம் என்பது முன்னிலையுளப்பாட்டுத் தன்

மைப் பெயர் என்றும்,தொல்காப்பியம் பெயரியல் 126-வது சூத்திர உரைக்கீழ்க் கூறுவரேனும், ஈண்டு யாம் என்பது நாம் என்னும் பொருளிலேயே இம் மறையாசிரியரால் உபயோகிக்கப் பெற்றுள்ளது. யானும் என்போல் உபாஸனையைச் சாதனமாகக் கொண்டு பலன் பெற்றவர்களாகிய நீங்களும் என்பது பொருள். தாமே என்னும் சொல்லுக்கு முன் நாம் தொக்கி நின்றது. நாம் தாமே எனக்கொள்க. முருகோபாஸனை செய்பவர்களுக்கு இதரமாந்தர் உணர்த்துவதற் கொன்றும் இல்லையென்றும், அவ் வுபாஸகர்கள் உண்மை யுணர்வைப் பெறுவது, 'மேலொருமலத்து விஞ்ஞானகலர்க்கு இங்கு, ஓவறு முண்மை யுளத்தில் நின்று உரைப்போம்' என்னும் சிற்றம்பல நாடிகளின் உரைப்படி, முருகன் அவ்வவ் வுபாஸகரது உள்ள விகாஸத்தினுலேயே அவ்வவர்க்கு உண்மை யுணர்வு தோன்றுமாறு செய்கிறுனென்றும் விளக்கவே, 'தாமே பெற வேலவர் தந்ததனுல்' என்றுர். உண்மையான உரை யொழுக்கங்கள் அநேக மயக்கங்களை விலக்குவதோடு தவற்று நெறியில் விழாதபடியும் செய்ய வல்லன வாதலின், மனம் வாக்குக் காயங்களால், மெய் நினைப்பு, மெய்ம் மொழி, மெய்ந்நடை மூன்றையும் பற்றிக் கொள்வீர்களாக என வற்புறுத்த வந்தவர், 'மெய்ப் புணர்வீர்' எனத் தன்னெருதத பக்தர்களுக்கும் ஆணையிட்டுக் கூறினுர். இனி அவ் வுண்மை சார்ந்த நாவையே துணைக்கொண்டு நடப்பதனுல் அல்லல்கள் பல வறும் என்பதை வெளிப்படுத்தவே, 'நாமேல் நடவீர் நடவீர் இனியே' என இருமுறை அடுக்குப் பெய்து வற்புறுத்தினுர்.

"கைக்கொண்ட ஞானம் துணையாக நீபல் காவுறுசார்
மெய்க் கொண்ட நாவிற் கடந்து நமதிடை மேவுறினும்"
—சத்தி நிபாதக் கோவை

என்ற கோவை வாக்கும் இவ்வுண்மையையே வற்புறுத்துவ

தறிக. ஈண்டு ஒரு சிறு கதை நினைவுக்கு வருகிறது. பொய்யும் களவும் குடியும் காமமும் தனது நடையாக்கொண்டு வாழ்ந்த கள்வனொருவன் மூப்பதாண்டுக்கு மேல் ஒரு காட்டில் வாழ்ந்த ஒரு குருவை யடுத்து ஞானமும் கல்வியும் பெற விரும்பினனாக, அக்குரு அவனது பூர்வ சரிதத்தை வினவ, அவன் உண்மையை ஒளிக்காது தான் வரித்த ஞானாசாரியனிடத்துக் கூற, அவர் அவனை அந்நான்கனுள் ஒன்றை விட்டுவிடும்படி கேட்கப், பொய்யை விட்டு விடுவ்தாகப் பிரதிக்ஞை செய்து ஒழுகுவானாயினன். ஒருநாள் ஒரு நகரத்துத் திருடச் சென்றபோது, மாறுவேடம் பூண்ட அவ்வூர் அரசனிடத்து உண்மை கூறி, அவ்வரசனது உதவி கொண்டே அரண்மனைக்கட் டிருடி வெளிவர, அவ் விருவரும் திருடிய பொருளைப் பங்கிட்டுச் சென்றனர். பின்னர் அரசன் தனது மந்திரியை விளித்துப் பொக்கிஷத்தைச் சோதித்து வருமாறு ஆக்ஞாபிக்க, மந்திரி மூன்று மோதிரங்கள் களவு போனதாகக்கூற, திருடனது உண்மை நிலையை யறிந்த அரசன் அக்கள்வனை அப்பொழுதே அழைப்பித்து விசாரிக்க, அக்கள்வனது (Righteous Indignation) நியாயமான கோபத்துக்கு மந்திரி பாத்திரனாய் அவனால் அறைபட்டுத் தன் வாயிலிருந்த மூன்றாவது மோதிரத்தைக் கக்கினதாகவும், அக்கள்வனே பின்னர் மந்திரி ஸ்தானத்தை வகிக்க நேர்ந்ததாகவும் கூறுவர். இதனால் மெய்யைப்புணர்வதன் சிலாக்கியம் வெளிப்படும். ஸத்தியத்துக்குள்ள இப் பெரும் மகிமையை யுணர்ந்தே, ஒருவன் தனது நடத்தையில் மேன்மையடைய விரும்புவானாயின் அவ்வுண்மையைப் பற்றிக்கொள்ள வேண்டுமென்றும், அதனைத் தன் நாவிற் புணர்த்தி யொழுக வேண்டுமென்றும், இம்மறை வாயிலாக உலகத்துக்கு உபதேசஞ் செய்தார் என்க. கல்வியும் வேலவர் தந்தாரென்பது எப்படியெனிற்

காட்டுவேல்! ஒருவனுக்கு அப்போதைக்கப்போது கண்ணிற் படும் நூல்கள் அவனது விதிவழியாக அவனுக்குத் தெய்வமே தொண்டு தருவதென்னும் உண்மை சுவாநுபவிகள் பலரும் காண்பது. அதனால் இறைவன் அருளாலேயே கல்வியும், அறிவும், இறைவன் தாள் வணக்கமும் ஏற்படுவன வென அறிக. 'காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே.' என்னும் பெரியார் வாக்கும் இதனை வற்புறுத்தா நிற்கும். பூ=பூமி.

## கற்பழியாதிருக்க

உதியா மரியா வுணரா மறவா,
விதிமா லறியா விமலன் புதல்வா!
அதிகா! அநகா! அபயா! அமரா
வதி காவல! சூர பயங்கரனே! 18

### அந்வயம்

விதி மால் அறியா விமலன் புதல்வா! உதியா மரியா உணரா மறவா அதிகா! அநகா! அபயா! அமராவதி காவல! சூரபயங்கரனே! (அருள்க எனமுடிக்க.)

### பொழிப்புரை

தலைப்பு :—['ஒருவனைப்பற்றி ஓரகத்திரு' என்றபடி 'எனக்கு உன்பக்தி தவிர மற்றொன்றும் வேண்டுவதில்லை' என்பதை வற்புறுத்தி இறைவனருளைப் பெறக்கூறிய மறை இது.] உபாஸகனது மனநிலை தனது உபாஸனா மூர்த்திக்குச் செய்யவேண்டிய பக்தி நெறியினின்றும் வழுவாதிருக்க.

செய்யுள் :—பிரமனும் மாலும் அறிய முடியாத நின்மலனுக்குத் தோன்றலாக எழுந்த கந்தனே! பிறப்பு இறப்பு,

உணர்ச்சி மறதி என்னும் தொந்த நிலைகளுக்கு மேற்போனவனே! பாபம் (அகம்) அற்றவனே! பயமற்றவனே! (அல்லது அன்பரது அச்சத்தை நீக்குபவனே!) தேவருலகைக் காப்பாற்றுபவனே! பகைவனான சூரபத்மனுக்கு அச்சத்தைத் தருபவனே! ('என் சிந்தை உன்னையே பற்றி நிற்க அருள்வாயாக எனக் கூட்டி முடிக்க.)

## விசேடக் குறிப்புகள்

பக்தர்களுக்கு ஏகநாயக விரதம் இன்றியமையாதது.

"கற்புறு சிந்தை மாதர் கணவரை யன்றி வேறோர்
இற்புறத் தவரை நாடார்; யாங்களும் இன்ப வாழ்வும்
தற்பொறியாக நல்கும் தலைவ, நின்னலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோம் கண்டாய் பூரணாநந்த வாழ்வே."

"உங்கையிற் பிள்ளை உமக்கே அடைக்கலம்............" "புற்றில் வாளரவுமஞ்சேன்............" முதலிய பெரியார் வாக்குகளினாற் பெறநின்றது, ஒருவன் தனது உபாஸனா தெய்வத்தினிடத்து மிகவும் அழுத்தமான பக்தியை வைத்திருக்கவேண்டு மென்பதாம். அதனையே இம் மறையில் துதியளவாக நிறுத்திப், பயன் கருதாது கடமையாகப் பூண்டு ஒழுகும் தலையன்பு செல்லும் வழியைக் கூறி உணர்த்தினார் என்க. உரைகாரர்கள் முத லடிக்கண் உள்ள ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்களை விமலனுக்கு ஏற்றியுரைத்தார்களேனும் அவற்றை 'அதிகா' என்பதனோடு கூட்டி யுரைப்பதே சிறப்பினதென் றாய்ந்துணர்வார்க்கு விளங்கும். 'விதிமாலறியா விமலன் புதல்வா' என்பது இடைப்பிறவரலாக வந்தது. புதல்வனென்றது கந்தனது (Manifestation) அவசரத்துக்கு உபசார மொழியேயன்றி உண்மைப் பொருள் மொழி யாகாது. ஏன்? ஒருவனுடைய ஒப்புயர்வற்ற தன்மைக்கு ஊனம் ஏற்படுங்கால்

அத்தன்மையை நிலைநாட்டுவதற்கு மற்றொரு நிலை தோற்றியே ஆகவேண்டும். அதுபோலவே சிவபரத்துவத்துக்கு ஊனந் தோன்றவும் விஷ்ணுவுக்குப் பரத்துவம் கற்பிப்போர் தொகை பெருகவும் ஏற்பட, அவ்விஷ்ணு பரத்துவ வாதிகள் இடுக்கண்பட்டு நிற்கும்போது அவர்களுக்கு அறிவு கொளுத்துவான் எழுந்த மூர்த்தம் ஸுப்ரஹ்மண்ய மூர்த்தமானதுபற்றிச் சிவத்தின் தோன்றலென உபசார வழக்காகக் கூறியதேயன்றி முருகனுக்கும் சிவத்துக்கும் பேதமின்மை உணர்க.

"நாளொடு கோளெனை நண்ணக் கலங்கிய நானிலத்தோர்
வேளென மூத்த பெருமாள் சிவம்சக்தி வேறுபல
ஆளென முன்மொழிந் தோதுமெ லாமொன்றி னம்சமெனக்
காள மறைந்தென நீகூ றியபினர்க் கண்மணியே."

—கண்மணிமாலை.

என்பதனாலும் இதன் உண்மையை அறிக. இனி விதிமாலறியா வென்பது மதத் துவேஷத்தா லெழுந்த வாக்கா என்பதைக் கவனிப்போம். பிரமன் சுவாதிட்டானத்தை அதிஷ்டித்து நிற்குமோர் தேவதை; விஷ்ணு, மணிபூரகத்துக்கு அதிஷ்டான தேவதை. சுவாதிட்டானத்திலிருந்து கீழிழிந்து மூலாதாரத்துக்குவந்து பின்னர் மணிபூரகத்தையடைந்து ஆநாகதமாதிய ஆதாரங்களாறுக ஆக்ஞைக்குச் சென்று பிரமரந்திரத்தூடு ஸஹஸ்ராரத்தையணுகி இறைவனடியைப் பற்றவேண்டுமே யன்றிச் சுவாதிஷ்டானத்திலிருந்து நேரே மேலே பாய்ந்து, அநாகத விசுத்திகளைத் தாண்டி ஆக்ஞைக்குச் செல்லுதல் முடியாது. அதுபோலவே மணிபூரகத்திலிருந்து கீழ்நோக்கிச் சென்று ஆக்ஞையையும் ஸஹஸ்ராரத்தையும் அடைதலும் முடியாது. இவ் யோக உண்மையைக் காட்டவே 'விதிமாலறியா விமலன்' என்றார்.

சைவ நெறியாளர், மாலயன் அறியவொண்ணு மலரடி, என்னும்போதெல்லாம் இக் கருத்தையே மனத் துட்கொண்டு பேசுவர். இதனுல், பிரம விஷ்ணுக்களை அன்னுர் நிந்தித்துப் பேசுவதாக எண்ணுவது தவருகும். இக்கருத்தை,

"உந்திக் கமலத் துதித்த பிரமனும்
அந்தமாப் பூரகத் தாலிலைப் பாயற்
புருடோத்தமனும் பூவைநாயகனும்
தம்மின் முரணித் தலைகீழ்ச் சாரின்
விண்வீழ் கொள்ளி யெனவில் வீசி
யண்ணிய பொழுதே யாறழிந் தொழுகு
மயிர்ப்பாலத்தையு மகேசுரத்தீயையும்
அயிர்ப்பற வணைந்து நாதா நீதக்
கலையிகந் தோங்குங் கவினுர் சதாசிவத்
தலை சூழ்காடு மணியார் பாதமுங்
காணவியலுதல் கழியாதன்றே."

—திருநான்மணிமாலை.

என்னும் மேற்கோளிற் காணலாம். இக்கீழ் வட்டத்துத் தலைகீழாக உருள்வதை விடுத்து, மேல் வட்டத்துக்குச் செல்லுமாற்றை யுணர்ந்து, யோகசாதனையால் இறைத்தன்மைபெற வேண்டுமென்றே, 'விதிமாலறியாவிமலன்' என்றது. இனி 'உதியாமரியா உணராமறவா' என்னும் அடைகளை அதிகனுக்கு ஏற்றலாமோ வெனின், இந்நூலாசிரியரே 'பெம்மான் முருகன் பிறவா னிறவான்' எனக் கூறியிருப்பது காண்க. 'உணராமறவா' என்ற அடைகளால் கொள்ளக்கிடப்பதென்ன? அவ் வதிகனது நிலை இராப்பக லற்ற விட மென்பதை யுணர்த்தவே 'உணராமறவா' என்ருர். அராப்புனை வேணியன் சேய்............இராப்பகலற்ற இடத்தே யிருக்கை எளிதல்லவே. (கந். அல-74). இவ் விராப்பக

லற்ற இடத்தை, நினைப்பு மறப்பற்ற விடமென்றும் சகல கேவலா அவஸ்தைகள் கடந்த இடம் என்றும் கூறுவர். அவ்விடம் யாது? எந்த மனோநிலையில் ஒருவன் நிற்கும் போது தேச காலங்களை மறந்து 'இவ்வளவு காலம் போக்கினோம், இந்த விடத்தில் இருந்தோம்' என்பதை யுணராமலும் அதே சமயத்துத் தான் எண்ணிநின்ற விஷயத்தை மறவாமலும் நிற்கின்றானோ, அந்த மனோநிலைக்கே இராப்பகலற்ற விடமென்று பெரியோர் கூறுவர். அந்நிலை, மரத்தை மறைத்த யானைத்தோற்றத்தைப் போலவும் மரத்தில் மறைந்த யானையைப்போலவும் உள்ளது. இத்தன்மைகளுக்கு நமது முருகன் மேற்போந்தவன் என்று கூறுவதில் வந்த இழுக்கு என்னை? அநகா, பாபமற்றவனே! தான் பாபமற்றவனென்றபொழுதே இதரப் பாபம் வாய்ந்த உபாஸகர்கள் தன்னை வந்தடையினும் அவர்களது பாபத்தையும் அற ஒழிக்கும் ஸ்பர்சவேதி போல்பவனென்பது பெறப்பெற்றது. இந்நெறியே 'அபயா' என்பதற்கும் பொருள் கொள்ளுக. அமராவதி காவல, சூரபயங்கர என்னும் சொற்றொடர்கள், தெய்வ ஸம்பத்தி வாய்ந்து தன்னை யடுத்தோராது குணச்செல்வங்களை விருத்தி பண்ணுபவனென்பதையும், அசுர ஸம்பத்தி வாய்ந்து தன்னைத் துவேஷித்தோருக்கு அச்சத்தையே அளிப்பவனென்பதையும் உணர்த்தி நின்றன. எல்லாவகையாலும் உபாஸகன் தெளிந்து தனது வழிபடு தெய்வத்தையே தனக்கு முதலாகக் கருதி அத் தெய்வத்தைத் தவிர மற்ற தெய்வங்களை அவனது கனவிலும் கருதாதிருக்கத்தக்க வழியை இம்மறை உபாஸகனுக்கு உணர்த்தி நிற்பது காண்க. இப்பொருளில் இதர தெய்வ உபாஸகர்களுக்கும் இம்மறை நெறி காட்டியாக நிற்பதும் அறியப்படும். அதனாலேயே 'கற்பழியாதிருக்க' என்னும் தலைப்புத் கொடுத்தாரென்க.

## இல்வாழ்க்கை நீக்க

வடிவும் தனமும் மனமும் குணமும்
குடியும் குலமும் குடி போகியவா!
அடி யந்தமிலா அயில்வே லரசே
மிடியென் றொருபாவி வெளிப்படினே. 19

### அந்வயம்

அடி அந்தம் இலா அயில் வேல் அரசே! மிடி என்று ஒரு பாவி வெளிப்படின் (ஏ), வடிவும் தனமும் மனமும் குணமும் குடியும் குலமும் குடிபோகிய ஆ(று என்!). [(ஏ) அசை.]

### பொழிப்புரை

தலைப்பு :—["மாண்ட குணத்தொடு மக்கட்பேறு இல்லெனினும், பூண்டான் கழித்தற்கு அருமையால், பூண்ட மிடி என்னும் காரணத்தால், மேல் முறைக்கண்ணே கடி, என்றார் கற்றறிந்தா"ராதலின், உலக அல்லல்கட்கு அடிக்காரணம் இல்வாழ்க்கை என்பதை யுணர்ந்து அதனைப் போக்கும் சாதனத்தைக் கூறிய மறை இது.] அஸாரமாகிய ஸம்ஸார வாழ்க்கையை ஒழிக்க.

செய்யுள் :—ஆதி (மத்தி) அந்த ரஹிதனுயுள்ள (முழு முதற் கடவுளே குருவெனத் தோற்றி உபாஸகனை எனது அறியாமையை விலக்கி எனக்கு ஞானத்தைப்* புகட்ட வெழுந்த மூர்த்தமாக விளங்கும்) கூர்மையான வேலை (ஞான சத்தி ஸ்வரூபத்தை என்றபடி)த் தாங்கிய இறைவனாகிய முருகக் கடவுளே! தரித்திரம் என்று (உலகத்தாரால் கொடியவனாக மதிக்கப்படும்) ஒரு பாவி, உபாஸகனான என் கண் தோன்றுமாயின், (எனது) உருவவழகும், செல்வமும், பெருமை உள்ளமும், உயர்குணமும், (கறையற்ற) குடிப்

பிறப்பும், ஜாதியுயர்வும் உள்ள விடம் தெரியாமற் போன விதம் என்னே! (இஃதொரு ஆச்சர்யமா யிருந்தது என்ற படி.)

## விசேடக் குறிப்புகள்

'பெண்கொண்ட பேர் பட்ட பாட்டையும் கேட்டையும் பேசுவோமே நெஞ்சமே' என்று மஸ்தான் கூறிய பிரகாரம், 'பின்னும் ஆடென்றும், மாடென்றும், வீடென்றும், தேடென்றும் ஆண்டவனை மறப்பாக்குவா'ளாகிய மனைவியோடொத்த வாழ்க்கை அல்லல் விளைப்பதென்பதைக் கருதி, அத்தகைய வாழ்க்கையை நீக்கவென்றே இம்மறையைக் கூறினர். ஆனால், யாக்ஞவல்கியரது மனைவியாகிய மைத்திரேயியைப்போல் பிரஹ்ம ஞானத்தையே தனமாக மதிக்கும் பிரஹ்ம வாதினிகளோடு பொருந்தி வாழும் வாழ்க்கையையும், லோபாமுத்திரையைப் போல ஆமுஷ்மிகத்தையே நாடி நிற்கும் அகஸ்தியரை,

ஓதியும் பொறியடக்கத் துற்றும்வா ழென்னைக் காமம்
காதுத லுற்ற துன்றன் இணக்கொடு வசந்தந் தோற்ற
நீதியின் லோபா முத்ரை காளையை நித்தஞ் சேர்வாள்;
வாதமில் பலத்துத் தீரன் றனைப்பல மிலாள் புசிப்பாள்.

ரிக்வேதம் மண் 1. சூக் 179. செய் 4.

என்றபடி ஆட்டி, ஐஹிக சுகத்தையும் அநுபவிக்கச் செய்யும் மாதர்களுடன்கூடி வாழும் வாழ்க்கையையும் பற்றி, இம்மறை, அதிகம் கருத்துக்கொண்டதல்ல. எனினும் 'மாண்ட குணத்தொடு....' என்னும் நாலடியார் செய்யுளின் கருத்தையொட்டியே இல்வாழ்க்கை யென்னும் துன்பை யொழிக்கும் நெறியைக் கூறினர். இந்நெறியில்,

"மானார் விழியைக் கடந்தேறி வந்தனன் வாழ்குருவும்
கோனாக வென்னைக் குடியேற்றிக் கொண்டனன் குற்றமில்" க.

போனலும் பேறு இருந்தாலு நற்பேறு இது பொய்யன்றுகாண்
ஆனலு மிந்த உடம்போ டிருப்பது அருவருப்பே"

என்ற பட்டினத்தடிகள் வாக்கும் ஒழிவிலொடுக்கத்துக்குச் சிறந்த உதவியாகும். "அற்றது பற்றெனின்; உற்றது வீடு." என்ற ஆழ்வார் வாக்கையே விரிக்குமுறையில்,

"அற்றது பற்றெனின் உற்றது வீடிதை யாரறியார்
உற்றமூ வாசை யொழிந்த விடத்தும் துகளொழிமோ ?
பற்று முடல்நசை விட்ட தெனிற்பக ரேர்ந்துவரும்,
கற்றவ ரேத்திறை, காலனும் செய்வதென் கண்மணியே"

—கண்மணிமாலை.

என்றபடி, காலரூபமாக வந்து நமது உயிர்ப்பண்பைக் கொள்ளைக்கொள்ளும் பலவித துன்பங்களுக்கும் இல்வாழ்க்கை ஒரு விதத்தில் பெருங் காரணமாய் நிற்பதுபற்றிச் 'சோம்பு வித்திச் சுகம் பயன்காண' விரும்பும் அபிமதத்தினர்க்குத் தெளிவுபெற, மிடியின் பெருமையை விளக்க வந்தவர், 'வடிவும் தனமும்....குடி போகியவா!'' என்றார். "வெளிப்படின் என எதிர்காலத்துக் கூறி குடிபோகியவா என இறந்த வினை கொண்டு முடித்துக் கூறலாமோ ? இது கால முரண்போலக் காணப்படுவதில்லையா ?" என்ற கேள்வி ஈண்டு எழுதல் கூடும். இவ்விரண்டு காலங்களும் ஈண்டு ஏககால ஸம்பவமாக நிகழ் காலத்தையே குறித்ததை ஓர்க. ஒருவன் மனக்கண்ணில் மிடித் தோற்றம் பட்ட அப்பொழுதே, வடிவு முதலிய அவனை விட்டு விலகியதாக அவன் கண்ணிற் படுவது அநுபவம். இதனல் கால வழுக்க ளொன்றும் இம்மறையில் இல்லை என்க.

மேல்நாட்டுப் புலவராகிய டாக்டர் ஜான்ஸன் என்பார் ஒருவர்,

"மடியகத்தினின் மற்றொன்று மில்லவன்
**மிடியன் ஆதுலம் ஏகிய மேலவன்**

செடிகொள் கல்லதர் செல்லு மிளேப்பினே
வெடிகொள் தன்னிசை கொண்டு விலக்குவான் ''

" அன்னவற் கண் டழுக்கறுப்பாய் கொலோ
பொன் னவற்குப் பொருந்த வளித்தியால்
பின் அவன்றன் பெருமனச் சாந்திபோய்
இன்ன லுற்ற விகார மெதிருமே ''

" மருமராஞ்சம் வளர்க்கு நடுக்கினே
உருமு கேட்ட விடியினே யொப்பவுட்
பொரும லுற்றிடப் பூட்டுமைச நிழல்
இருமை யுற்றுஅவ னின்ப மிழப்பனே ''

—சங்கற்ப வேறுமை .

என்று கூறிப்போந்தார். இதனுல் மிடியின் பெருமை நன் ந
விசதமாகும். இம்மிடியைப் படைத்தலால் உலகமதிப்ட ப
போய்விடுகிறதே யென்று அழுங்குபவர்கள், உலக மதி ப
யைக் காட்டிலும் பெரியதொரு மதிப்புக் கடவுள் மதி ப
பென்பதையும், அம்மதிப்பில் நிற்பவர்களுக்கு என்றும ழி
யாத கதியாகிய மோட்சநிலை கிட்டுவதென்பதையும் மற ந
வர்களாவர். 'திட்டி வாசல் வழியாக ஒட்டகம் நுழை ந
லும் கூடும், பணக்காரன் மோட்சமடைதல் ஒருக்காலு ம்
கூடாது' என்றும், 'பெருக்கையிலே லோபம் பிரியாட ய்
நிற்குதடா' என்றும், 'அணுவளவு தவிடுமிகள் பிதிரவ் –
மனமிறுகி' என்றும், பெரியார் பலரும் கூறிச், செல்வ த்
தக்கு வெறுக்கை யெனப் பெயரிட்டுச்சென்றதையும் அ றி
ஞர் கருதுவாராக. இம்மிடியையே,

" தரித்திரம் மிக்க வனப்பினே யொடுக்கிச்
சரீரத்தை யுலர்தர வாட்டும்
தரித்திர மளவாச் சோம்பலே யெழுப்பும்
சாற்றரு முலோபத்தை மிகுக்கும்

தரித்திரம் தலைவன் தலைவியர்க் கிடையே
தடுப்பரும் கலாம் பல விளைக்கும்
தரித்திர மவமானம் பொய்பேராசை
தருமிதிற் கொடிய தொன்றிலையால்''

—குசேலோபாக்கியானம்.

என்பதாகச் சொல்லிப் போந்தனரே யெனின், ஆண்டும் குசேலருடைய மனப்பண்பை நோக்க இத் தரித்திரமானது அவர் உள்ளத்தை ஒரு சிறிதும் அசைக்க முடியாமலிருந் தமை நன்கு வெளியாகும். இறைவனிடத்துப் பதிந்த உள்ளத்தவனை வெளித்தோற்றங்களாகிய 'வடிவும் தனமும்... ...குடியும் குலமும்' ஆகிய உணர்ச்சிகள் ஒரு சிறிதும் கலக்கமுறச் செய்வதில்லை. ஆழ்ந்த நீரிற் றோன்றும் மேலலைகள் அந் நீரின் அடிப்பக்கத்தை ஒரு சிறிதும் கலக்க முடியா தொழிவது போன்ற திது. இதனால் இம் மிடி வந்ததே யெனத் துக்கங்கொள்ளாமல் இம் மிடியையே உலகத்துச் சுற்றம் நண்பு முதலிய இனத்தினரை அளக்கும் கட்டளைக்கல்லாக மதிக்கவேண்டு மென்பதையும், அப்படி மதித்து ஒழுகுங்கால் நமது உலகவாழ்க்கையானது நெருப்பிலிட்ட பொன்னைப்போல ஸ்புடஞ் செய்யப் பெற்று விளங்குமென்பதையும், அப்படி விளங்கும் காலையிலும் இல்வாழ்க்கை ஒருவனைப் பற்றிநிற்குமாயின் அது தெய்வ வாழ்க்கையே யன்றிச் சாதாரணமாகச் சளத்திற் பிணிப்பட்டு அசட்டு க்ரியைக்குள் தவிக்கும் குடும்ப வாழ்க்கை யல்ல வென்பதையும் நன்றாக விளக்கவே, பாமர உலகத்தாரால் பாவியென மதிக்கப்படும் மிடியானது வெளிப்படுங் காலத்துத் தோன்றும் ஆச்சர்யங்களை, இம் மறை மூலமாக உபாஸகனுக்கு எடுத்துக் காட்டலானார். எவ் விஷயத்திலும் குதர் சென்று கொள்ளாத கூர்மை ஆற்றலையே

படைக்க மக்களாவார் ஒவ்வொருவரும் கருதவேண் மானதுபற்றி, இம் மறையில் மிடிக்குக் கூறப்பட்டுள் பெருமைகளை யெல்லாம் சிறுமை போலக் கருதுமா போதிக்கும் உரைகள் போலி உரை யாமாறு காண்க இம் மறையினால், ஒருவன் தெய்வப்பண்பை யடைவதற் மிடித்தன்மையை மேற்கொள்ளும் நிலை மிக அவசியமாக தென்பதும், அம்மிடித்தன்மை பலராலும் பாபத்தின் ப ளுகக் கருதப்படினும் அதனை அவலிம்பத்தலால், வடிவு தனம், மனம், குணம், குடி, குலம் முதலியவற்றால் ஏ படும் ஏற்றத்தாழ்வுகள் கொண்டு பரிசீலிக்கப்படும் சோதனை கள் எல்லாம் ஒழிய, ஒருவனது உண்மை நிலை வெளிய மென்பதும், அவ் வுண்மைநிலையில் உபாஸகன் நிற்கும் போது அவனைப் பற்றிநிற்கும் பந்தங்கள் முன்னைவினைத் தொடர்பாக நிற்குமே யன்றிப் பிறவிக் கேதுவான புது வினைத் தொடர்பாக நேரா வென்பதும், இவை போன்ற வேறு பல விஷயங்களும் இம் மறையால் தெளிவுறுத்தப் பெற்றுள்ளன காண்க. வெளிப்படுதலும் குடிபோதலும் மனதின்கண் ஏக கால ஸம்பவ மானதுபற்றி, 'குடிபோகிய வா'றென் என இறந்த காலத்தால் விரைவுபற்றி வந்த கால வழுவமைதியாகக் கூறினார். வெளிப்படின் என்பதும் வெளிப்படவெனச் செயவெ னெச்சப் பொருளில் வந்துள் ளது காண்க.

### அனுக்கிரகம் பெற

அரிதாகிய மெய்ப்பொருளுக் கடியேன்
உரிதா உபதேசம் உணர்த்தியவா !
விரி தாரண ! விக்ரமவேள் ! இமையோர்
புரி தாரக ! நாக புரந்தரனே ! 20

## அந்வயம்

*விரி தாரண! விக்ரம(ம்) வேள்! இமையோர் புரி தாரக! நாக புரந்தரனே! அரிதாகிய மெய்ப்பொருளுக்கு அடியேன் உரிது ஆ(க) உபதேசம் உணர்த்திய ஆ(று)* (என்னே!)

## பொழிப்புரை

தலைப்பு :—[*பின்னர் ஒருவன் பெறும் பேற்றை முன்னரே பெற்றதாகச் சொல்வது கவிமரபாதலாலும், அப்படிச் சொல்வதனால் ஒருவன் கருதிய பொருள் அவனுக்குக் கிடைப்பது கண்கூடாதலாலும், முருகக் கடவுளது குருபதேசத்தைப் பெறும் மறையாக இதனை யமைத்தார்.*] *குருவினது அருளுபதேசத்தை யடைய.*

செய்யுள் :—(*பிணி பசி மூப்பு துன்பம் சாவு பிறப்பு என்னும் ஓயாத சமுத்திரத்தைக் கடப்பதற்காக,*) *விரிந்து காட்டும் ஓடம்போல* (*மக்களை*)*த் தாங்கிக் கரை சேர்ப்பவனே! வெற்றி வாய்ந்த* (*செவ்*)*வேளே! தேவர்கள் விரும்புகின்ற* (*மூலப் பொருளே*) *ரட்சகனே! தேவ ராஜாவே! கிடைத்தற்கு அரிதாகிய உண்மை ஞான வஸ்து* (*அதனைப் பெறத் தகாத*) *எனக்குச் சொந்தமாம்படி நீ உபதேசித்துணர்த்திய பெருமையை என்னென்று சொல்லுவேன்!*

## விசேடக் குறிப்புகள்

*தாரணன், தாண்டிச் செல்லக் கருவியாயிருப்பவன். தாரகன், ஓம் என்னும் பிரணவத்தினைப்போல உடல் உயிர் இரண்டாகவும் தானே இருந்து இரட்சிப்பவன். நாகம், விண். புரந்தரன், புரங்களை உடைத்தெறிவோனென்ற பொருளில் இந்திரனுக்குச் சிறப்புப் பெயராய், தேவர்க்கரசன் என்னும் பொதுப்பொருளில் ஈண்டு முருகக் கட*

வுளுக்காயிற்று. ஏன்? சசிதேவியின் மங்கல்ய தந்து ர
சாபரணன் முருகனுனமை பற்றி. விக்ரமனே, வேலே
எனப் பிரிப்பதினும், விக்ரமவேளே என அழைப்பதே
சிறப்பு. ஏனைய கருவேள்போல் உடலழிந் தொழிந்து
கேட்டை யடையாது, தனது ஞான ஸாஹஸத்தால் பித
வையும் வென்றவன் என்பது இவ்வுரையில் தொனித்து
நிற்பதை நுனித்து நோக்குக. இவ் வுபதேசத்தை இ
நூலாசிரியர் தமது கந்தர் அலங்காரத்திற் பல பாட்டு
களாற் றெளிவு பெறக் கூறியுள்ளார். மேலே இவ்வுபதே
வுண்மையை இந் நூலுரையில் ஆண்டாண்டு காட்டியு
ளேனுயினும், ஈண்டுச் சற்று ஒரு சேர அவற்றைத் திரட
டிக் காட்டுவல். இவ் வுபதேசத்தை யறிந்து அநுபவிப்ப
தற்கு இலகுவான சாதனமாகத், 'தடுங்கோள் மனத்தை
விடுங்கோள் வெகுளியைத்; தானம் என்றும் இடுங்கோள்
இருந்தபடி யிருங்கோள்; எழுபாரு முய்யக் கொடுங்கோபச்
சூருடன் குன்றந் திறக்கத் துளைக்க வைவேல் விடும் கோன்
அருள் வந்து தானே உமக்கு வெளிப்படுமே.' என்று கூறின
தோடு நில்லாமல், யோக சாதனைகள் ஒன்றுமின்றி ஞானப்
பிடிபடாது என நம்புவோரது எண்ணத்தை மாற்றவும்,
ஹடயோக சாதனைகளில் பயனொன்று மதிகமில்லை யென்
பதை வெளிப்படுத்தவும், "துருத்தி யெனும்படி கும்பித்து
வாயுவைச் சுற்றி முறித்து அருத்தி உடம்பை ஒறுக்கில்
என் ஆம்? சிவ யோகமெனும் குருத்தை யறிந்து முகம்
ஆறுடைக் குருநாதன் சொன்ன கருத்தை மனத்தில் இருத்
தும் கண்டீர்! முத்தி கை கண்டதே." என்றும், "காட்டிற்
குறத்தி பிரான் பதத்தே கருத்தைப் புகட்டின் வீட்டிற்
புகுத மிக எளிதே! விழி நாசிவைத்து மூட்டிக் கபால
மூலாதார நேர் அண்ட மூச்சை யுள்ளே ஓட்டிப் பிடித்து
எங்கும் ஓடாமற் சாதிக்கும் யோகிகளே!" என்றும் கூறித்,

'தடுங்கோள்' என்ற வாக்கியத்தையே வற்புறுத்த, "அராப் புனை வேணியன் சேய் அருள் வேண்டும்; அவிழ்ந்த அன்பால் குராப்புனை தண்டை அம் தாள் தொழல் வேண்டும்; கொடிய ஐவர் பராக்கு அறல் வேண்டும்; மனமும் பதைப்பு அறல் வேண்டும்; என்றால், இராப் பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே!" எனவும் காட்டி, மனதுக்கு உபதேசமாக, "வேதாகம சித்ர வேலாயுதன் வெட்சி பூத்த தண்டைப் பாதாரவிந்தம் அரணாக, அல்லும் பகலும் இல்லாச் சூதானது அற்ற வெளிக்கே ஒளித்துச் சும்மா இருக்கப் போதாய், இனி, மனமே, தெரியாது ஒரு பூதர்க்குமே." என்று ஒரு நல்லுபதேசத்தைச் செய்து, தான் பெற்ற அவ் உபதேச மொழியைத் "தேனென்று பாகென்று உவமிக்கொணா மொழித் தெய்வ வள்ளிகோன் அன்று எனக்கு உபதேசித்தது ஒன்று உண்டு; கூறவற்றோ! வான் அன்று, கால் அன்று, தீ அன்று, நீர் அன்று மண்ணு மன்று, தான் அன்று, நான் அன்று, அசரீரி அன்று, சரீரி அன்றே." எனச் சிறப்பித்துக் கூறி, அவ் வுபதேசத்தால் தான் அடைந்த இடத்தைக் காட்டச், "சொல்லுகைக்கு இல்லையென்று எல்லாம் இழந்து சும்மா இருக்கும் எல்லையுள் செல்ல எனை விட்டவா!" எனத் தனது ஆச்சர்யத்தினை விளக்கி, இம் மௌன பூமிகையில் நின்று தான் காலனை வென்ற விஷயத்தை 'மரணப்ரமாத நமக்கில்லையாம்; என்றும் வாய்த்த துணை கிரணக்கலாபியும் வேலும் உண்டே' என்றும், 'தண்டாயுதமும் திரிசூலமும் விழத் தாக்கி உன்னைத் திண்டாட வெட்டி விழவிடுவேன்; செந்தில் வேலனுக்குத் தொண்டு ஆகிய என் அவிரோத ஞானச்சுடர் வடிவாள் கண்டாயடா! அந்தகா! வந்து பார் சற்று என் கைக்கு எட்டவே.' என்றும், 'பட்டிக்கடாவில் வரும் அந்தகா! உனைப் பார் அறிய வெட்டிப் புறங்கண்டு

அலாதுவிடேன் ; வெய்ய சூரனைப்போய் முட்டிப் பொரு
செவ்வேற் பெருமாள் திருமுன்பு நின்றேன் ; கட்டிப்புற
படடா! சத்திவாள் என்றன் கையதுவே.'' என்றும், 'சூல
பிடித்து எமபாசம் சுழற்றித் தொடர்ந்து வரும் காலல
றனக்கு ஒருகாலும் அஞ்சேன், கடல்மீது எழுந்த ஆல
குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன் வேலும் திரு
கையும் உண்டே எனக்கொரு மெய்த்துணையே.'' என்றும்
"வேலாயுதன், சங்கு சக்ராயுதன் விரிஞ்சன் அறியா
சூலாயுதன் தந்த கந்தசுவாமி, சுடர்க்குடுமிக் கால் ஆயுத
கொடியோன் (உடைய) அருள் ஆய கவசம் உண்டு; என்பால
ஆயுதம் வருமோ யமனோடு பகைக்கினுமே?'' என்றும் விருப
புட னுரைத்து, அத்தகைய குருவும் சாதாரண குருவல்ல
வென்றும், அக் குருவினது அநுக்கிரக சக்தியாகிய ஞான
வாளைப் பெற்றுள்ளதாகவும், காமம் வெகுளி மயக்கங்களில்
மூழ்கி, ருத்ராக்ரந்தி, விஷ்ணுக்ரந்தி, பிரஹ்மக்ரந்தி என்னு
மூன்று கிரந்திகளையும் ஒரு மனிதன் தான் உடற்கண் உள்ள
போதே தன் குருவினிடத்துப் பெற்ற ஞான சக்தியினை
அவிழ்த்து வைத்துக்கொள்ளத் தவறுவானாயின், அம் முடி
சுகளைக் குத்தி யறுத்தெறிவதற்காக (காலமே தனது ஸ்வ
ரூபமாகவுடைய) யமன் தனது கரத்தில் வைத்திருக்குப்
சூலத்தைக் கந்த ஸ்வாமியினிடத்துப் பெற்றுள்ள ஞான
சக்தியாகிய வாளினால் தான் துண்டித்து எறியப்போவதாக
வும், பொருள்படுமாறு, "தந்தைக்கு முன்னம் தனி ஞான
வாள் ஒன்று சாதித்து அருள் கந்தச்சுவாமி எனைத் தேற்
றிய பின்னர்க், காலன் வெம்பி வந்து இப்பொழுது என்னை
என் செயல் ஆம்? சத்திவாள் ஒன்றினால் சிந்தத் துணிப்
பன் தணிப்பு அரும் கோப த்ரிசூலத்தையே.'' என்றும்
கூறியுள்ளது காண்க. இவ்வாறெல்லாம் அநுக்கிரகம்
பெற்ற தன்மையினாலேயே முருக பக்தர்களுக்கு அவ் வநுக்

கிரகத்தைப் பெறும் மார்க்கத்தைப் பிறருக்குப் போதிக்கும் வல்லமை உண்டாவதென்க. உரிது ஆக, உரியவன் ஆக, பால் வழுவமைதி; மெய்ப்பொருள் அடியேனுக்கு உரித்தாக என மாற்றிப் பொருள் கொள்ளலும் ஒன்று. வேள், அண்மை விளி.

### திருவடி வணங்க

கருதா மறவா நெறிகாண எனக்
கிருதாள் வனஜம் தரவென் றிசைவாய்
வரதா ! முருகா ! மயில்வாகனனே !
விரதா ! ஸுர ! சூரவிபாடனனே ! 21

### அந்வயம்

வரதா ! முருகா ! மயில் வாகனனே ! விரதா ! ஸுர ! சூர விபாடனனே ! கருதா மறவா நெறி காண எனக்கு (உன்) இரு தாள் வனஜம் தர என்று இசைவாய் ? (சொல்வாயாக.)

### பொழிப்புரை

தலைப்பு : [நினைப்பு மறப்பு அற்று நிற்கும் மௌன நிஷ்டையிற் கருப்பொருளாக நின்று உபாஸகனை மனங் கலைய விடாதபடி காப்பது திருவடிஞானம் என்னும் இறைஞானம் ஆனதுபற்றியும், அவ் அடிஞானமாகிய அருளே பற்றுக்கோடாக நின்று மதுவுண்ட வண்டுபோல் உள்ளும் புறம்பும் ஞானமயமாய், உலகத்தையும் அதன் மயக்கங்களையும் ஒழித்து நிற்க, அத் திருவடியே சிறந்த கருவியாதல் பற்றியும், திருவடி வணங்க வென்றார்.] உபாஸனாமூர்த்தியின் அழகிய பாதங்களாகிய ஞானசக்தியை வணங்கிப் பெற.

செய்யுள் : வரங்களை அளிப்பவனே ! இளமை வாய்ந்தவனே ! விந்து தத்துவமாகிய மயிலை ஊர்தியாக உடைய

வனே ! (எப்பொழுதும் யோகநிலையி லிருப்பதாகிய) விர முள்ளவனே! தேவனே! சூரனைக் கொல்லுபவனே!(அல்லது எனக் கேற்படும் பயத்தை அழித்து ஒழிப்பவனே!) (உ கத்தைக்) கருதாததும் (உன்னை) மறவாததும் ஆன மோட் நெறியை நான் பிரத்தியட்ச அநுபூதியிற் பார்க்குமாறு எனக்கு உன்னுடைய உபய பாதாரவிந்தங்களை (எப்பொழு தும் என் மனதிலிருக்கும் வண்ணம்) எப்பொழுது கொ டுக்க ஒப்புக்கொள்வாய் ? (சொல்லுவாயாக என்றவாறு.)

## விசேடக் குறிப்புகள்

இம் மறை விக்கிரஹ ஆராதனம் செய்வோரென இழித் துக் கூறும் புறமத வம்பர்களுக்கு வாய்ப்பூட்டு ஆகும்.உண் மையில் பதம் ஏற்படும்போ தெல்லாம் பொருள் பாவனை யின்றி அது ஏற்படுவதில்லை.முயற்கொம்புபோன்ற இல்பொ ருளை உரைக்கும் சப்தங்களைக் கூறும்போதும் மனம் விபரீத மான ஒரு பாவனையைச் செய்தே தீருகிறது. இப் பாவ னையை யொழித்தல் வெகு துர்லபம். அதனாலேயே மனம் வாக்குகளுக்கு அதீதமானவன் கடவுளென அடிக் கடி வற்புறுத்துவது. அதனால் பாவனா உலகத்தினின்றும் ஒருவன் விலகி, பாவனா அதீதமான உலகத்தை யடைந்து, ஸஹஜ நிஷ்டையைப் பெறுவதற்கு இத் திருவடிஞான மொன்றே பற்றுக்கோடாக நிற்பது வெளியாகும். ஈண் டும் காற்கூறாக உள்ள குணத்தைப் பற்றிக், குணாதீதமான பூமிக்குச் செல்லவேண்டியிருப்பதால், குறைவான பாவனை யைத் தரும் ஞானத் திருவடியை மவுனத்துக்குக் கருப் பொருளாகப் பெறக் கூறினார். மனதுக்கு இயல்பாக அமைந் துள்ள (ஒன்றைப் பற்றிநிற்பதென்னும்) பண்புக்குக் கழு வாய் தேடித் தரவும், அம் மனம் ஆன்மாவைப் பிரிந்த விசா ரத்தாலே மாண்டு கிடப்பதற்கும், இத் திருவடித் தியா

னமே சிறந்த கருவியாக நிற்பதனுல்தான் திருவடி வணக்கத்தை ஈண்டு எடுத்துக்கூறியது. அந்தரத்தில் கரணமிட விரும்பும் ஒருவன் முதலில் கையை யூன்றிக் கரணமிடப் பழகுவது போன்றது இது. இப் பழக்கம் வலுப்பட வலுப் படக் கருப்பொருளின்றியே துரியாதீத நிலைக்குச் செல் லும் சாதனம் கைகூடும். இதுவன்றிய மற்றைய நெறிகளெல் லாம் வாசா கயிங்கரிய நெறிகளாகவும், பாதரஸமாய் மனது ஸஞ்சலப்படுவதற்கு ஏதுவாகவுமே நிற்கும். ஆனதுபற்றித் தான், அறிஞர்களாகிய அநுபூதிமான்கள் உபாஸனு நெறி யையே வற்புறுத்திக் கூறிப்போந்தனர். மற்ற நெறியின ரில் நூற்றுக்கு ஒருவர் இம் மௌன நிஷ்டையிற் சித்தி பெறுவாராயின், இவ் வுபாஸகர்களில் நூற்றுக்குத் தொண் ணூறு பேர்வரை இவ் வத்துவித நிஷ்டையைப் பெறுதல் கண்கூடு. இந் நெறி, தொடக்கத்திலிருந்தே தியான நிஷ் டையாகத் தொடங்கிக் கண்டத் தியானமாய்ப் பின்னர் அகண்டத் தியானத்தில் இறங்கி ஸஹஜநிஷ்டை நெறியில் முடிவு பெறுகிறது.

"வாள்வீசும் வேழம்ப ரத்தொழி லின்ஞெரு வாரத்திலோ
நாள்மாத மாண்டெனுங் காலத்தி லோமுறை நன்கறியத்
தாள்செயும் போது தவறுதல் தானும் ஸஹஜமதே
காளமுண் டோங்கிய கண்ணுத லேமனக் கண்மணியே"

—கண்மணிமாலே.

இதனுல் வேதாந்தம் சித்தாந்தம் என்னும் இருநெறி களும் (தத்துவமஸி) 'அது நீ ஆகிருய்' என்னும் மகா வாக்கி யத்தின் இலட்சியார்த்தத்திலேயே முடிவுபெறும் உண்மை விளங்கும். முதலில் ஒரு நெறியைப் பற்றிப் பின்னர் அதனை விடுவானேன் என்பார்க்கு, உலகமானது பற்றும் விடுதலையு மாக இயற்கையில் அமைந்து கிடப்பதே இதற்குக் காரண

மாகும் என உணர்த்தக், குணியாகிய உலகத்தைக்கண்டு பின்னர் அக் குணியினிடத்தினின்றும் அதன் சைதன்ய மாகிய குணத்தை மனங் கருவியாகக் கொண்டு பிரித்து அதன் பின்னர், பிரித்துக்கண்ட அந் நிலையிலேயே அம் மன மாகிய கருவியையும் நழுவவிட்டு, மனோதீதமாய் இடை நிலைக்கண் நின்று, நிற்பதும் தெரியாதிருக்கும் அவ் ஆநந்தத் தில் சுபாவமாக மூழ்கிச், சகம் பொய்யெனத் தம்பட்ட மடிக்கப் பெரிதும் உதவுவது முதலில் நாம் மனத்தே டிருந்தபோது கண்ட திருவடியே யாகுமெனவறிக (reductio ad absurdum) இல்லாததைச் சாதிக்க முயல் வதில் ஏற்படும் ஆபாசங்களை யுணர்வதால் உண்மை வெளிப் படுதல் நிச்சயமாவதுபோல, இல்லாததாகிய முன்னிலையை ஏற்படுத்திக்கொண்டு, அதனால் தோன்றிய சுட்டொழிதல் என்னும் உண்மையைக்கண்டு, அம் முன்னிலைச்சுட் டொழி தலால் 'உள்ளபடி' என்ற நிலை கைவரவே, 'மற்றொன்றைத் தொடர்தல்' என்னும் விபரீதத்தை ஒழித்துப், பாலர் உன் மத்தர் பிசாசரது தன்மையை யடைந்து, மேல், 'வரும்போ மென்பன வின்றி என்றும் ஒரு படித்தாய் நிற்கும் நிலை நம் மால் மதிப்பரிதாம்' என மோனம் வைத்துத், திரிபுடிநீங்கி, அருளாருக, 'அதுவாதல்' நிலையை எய்துதலைப்பற்றி எத் தனை தரம் பன்னிப் பன்னி உரைத்தாலும் தானே யறியும் பக்குவம் வந்தா லன்றி அது அறியப்படுவதொன்று அல் லாததனால் இதனோடு இவ்வுரையை நிறுத்தலாயிற்று என்க. ஸூர என்றும் சூர விபாடனனே என்றும் கூறுவதே சுத்த பாடமாகும். விபாடனன், பேர்த்தெறிபவன், கொன்றழிப் பவன் என்க. விரதா என்பது உபாஸகனுக்கு வேண்டிய யோக நிலையைச் சூசிப்பித்து நிற்பது. மயில் விந்துதத்து வம் என்பதைக் கந்தபுராணங் கூறும். இந்நூலின் மறைகளி லெல்லாம் முருகக்கடவுளின்மீது ஏற்றிக்காணப்படும் விசே

ஷணங்களிற் பல, உபாஸகன் மேற்கொண்டு கையாளவேண்டிய விசேஷணங்களாக நிற்பதை உய்த்துணர்க. வனஜம் நீரில் பிறப்பது. தாளாகிய வனஜம், பாத அரவிந்தங்கள் என்க.

## தவம்பெற

காளைக் குமரேச னெனக் கருதித்
தாளைப் பணியத் தவ மெய்தியவா !
பாளைக் குழல்வள்ளி பதம் பணியும்
வேளைச் சுரபூபதி மேருவையே. 22

## அந்வயம்

பாளைக் குழல் வள்ளி பதம் பணியும் வேளைச், சுர பூபதி மேருவை (ஏ) காளைக் குமரேசன் எனக் கருதித் தாளைப் பணியத் தவம் எய்தியவா(று என் !) [(ஏ) அசை.]

## பொழிப்புரை

தலைப்பு :—[ஈண்டு மணவாழ்க்கையில் நிற்போனின் பெருமையைத் தவமாகவும், அதுவன்றி 'முத்தனைய மூரலும் பவளவாய் இன்சொலும் முகத்திலகு பசு மஞ்சளும் மூர்ச்சிக்க விரக ஸன்னத மேற்ற இரு கும்ப முலையில் மணிமாலை நால வைத்து எமை மயக்கி இருகண் வலையை வீசியே மாயா விலாச மோக வாரிதியில் ஆழ்த்திடும் பாழான சிற்றிடை மடந்தையர்கள் சிற்றின்ப'த்தில் ஆழும் போகியினது பெருமையை அவமாகவும் கருதுமாறு போதித்து, உண்மைத் தவம் இல்லற நிலையால் மாறுபடுவதன்று என்பதைக் காட்ட வந்த மறை இது.] தவ வாழ்க்கையை அடைய.

செய்யுள் :— பாளைபோல் நீண்டு காணும் கூந்தலையுடைய வள்ளி நாச்சியாரது பாதங்களில் (அவரது அன்

பைப் பெற) வணங்கிப் போற்றும் செவ்வேளும், தேவுலகத்தினர்க்கு இறைவனை இந்திரனுடைய நிலைத்த வாழ்வுக்கு ஆதாரமாய் மகாமேருவை யொத்துத் துணையாய் நிற்பவருமான முருகக் கடவுளைக், காளைத் தன்மை வாய்ந்த குமாரப் பருவத்து ஈசனென நினைந்து, (பத்தினி வ்ருதமாகிய தவமே சிறந்ததெனை நினைப்பூட்டும் அவரது) பாதங்களில் வணங்கி நெறிப்படுதற்கான தவத்தை நான் அடைந்தவாறு என்ன ஆச்சரியம்!

## விசேடக் குறிப்புகள்

சுர பூபதியை மேருவை என இரண்டு கருத்துக் கொண்டதாகப் பிரித்துக் காட்டும் உரையினும்,சுரபூபதிக்கு மேருவை என நான்கன் தொகையாகக்கொண்ட உரையே சிறப்புடைத்து. இம் மறையில் இருவர் மதம் கண்டிக்கப் படலாயிற்று. ஒன்று துறவறத்தாலேயே மோட்சமெனச் சாதிப்பாரது மதம். காளைக் குமரேசனெனத் தன் வழிபடுகடவுளைக் கருதுவோன், தானும் அக் காளைக் கௌமார நிலையை அவலம்பித்துப் பெறுவது, அவ் வழிபாட்டின் சித்திநிலை. அதனால் மணநிலை அல்லது மனைவாழ்க்கையில் நிற்கும் நிலை சிறந்ததெனை அவனுக்கு நன்கு படவேண்டும். அப்படியன்றிக் காமாதுரனாய் லோகாயதத்தை அவ்வுபாஸகன் தழுவாமல், தன்னைக் காத்துக் கொள்ளுமாறு வேண்டிய முன் ஜாக்கிரதையை அவனுக்குப் புகட்டுமாறே 'சுரபூபதி மேருவை' என்று அடை கொடுத்தது. என்? போக மாதரிடத்துத் தனது காளைப் பருவத்தைச் செலவிட்டுக் கெட்டழிபவனுக்கு ஏற்படும் அழிவுகள் பலவென்பதும், அவ் வழிவுகள் நேர்ந்துழி, காமவழிப் பட்ட அவன் செயலற்றுப் போய்ப் பத்தினி விரதத்து ஒழுகும் காளைகளாகிய தெய்வங்களைத் துணைக்கொளப் புகுதல் இயல்பென்ப

தும், இப் பத்தினி விரதர்களாலேயே இவ்வுலகமும் அதன் சமூகமும் தட்டழியாமல் நிறுத்தப்பட வல்லன என்பதும், 'சுரபூபதி மேருவை' என்னும் சொற்றொடரால் நிலை நாட்டப் பெற்றன. இவ்வகையாகத் துறவறமென்னும் பொருந்தா அறத்தையும், பல்விழைச் சென்னும் கூடா ஒழுக்கத்தையும் கண்டித்து, அவற்றின் தாழ்வுகளை எடுத்துக் காட்டி, மண வாழ்க்கையின் உத்தம நிலையைப் போதித்து, அவ் வாழ்க்கையில் நின்றே முருகோபாஸனை செய்வதால் வரும் தவப்பயனையும் இம் மறையினால் விளக்கினார். துறவறம் பொருந்தா அறம் என்பது என்னை? மாந்தர்க்கு இயல்பாகவுள்ள இந்திரியப் போக்கைக் கடவுளால் அம் மாந்தர்க்கென அமைத்து வைக்கப்பெற்ற மாதரது பண்டியில் சேர்க்க நினையாது, நெறியல்லா நெறிகளில் அதனைக் கழிக்க முயல்வதால் என்க. பல்விழைச்சு கூடா ஒழுக்கமென்பது, "காணிற் குடிப்பழியாம்; கையுறிற் கால்குறையும்; ஆணின்மை செய்யுங்கால் அச்சமாம்; நீள்நிரயத் துன்பம் பயக்குமால், துச்சாரீ, நீ கண்ட இன்பம் எனக்கு எனைத்தால் கூறு." என்பதனால் வெளியாகும். இவ் விரண்டு நெறியல்லா நெறிகளை விடுத்து 'வரிந்து கொண்டு இன்பந் துய்த்தல் தவம்' எனக் காட்டிய குருநாதனது பாதங்களை வணங்கும் பேறிவாண்மை தனக்குக் கிடைத்ததற்காக உபாஸகன் மகிழ்ந்தபடி இது. அருணகிரிநாதர் இல்லற வாழ்க்கையோ டிருந்ததாக நமக்குச் சரித்திரம் தெரியாத வரையில், இத்தகைய மறைகளை அவர் லோகோபகாரமாக உதவினார் என்றாவது, அல்லது பிறர் கண்டு இந்நூலிற் சேர்த்தாரென்றாவது கொள்ள வேண்டுமே யன்றி வேறு வழியில்லை.

சவிகை சொல்ல

அடியைக் குறியா தறியாமையினால்
முடியக் கெடவோ? முறையோ! முறையோ
வடி விக்ரமவேல் மகிபா! குறமின்
கொடியைப் புணரும் குணபூதரனே ! 2

அந்வயம்

வடி விக்ரம வேல் மகிபா! குறமின் கொடியைப் புண ரும் குண பூதரனே! அறியாமையினால் (உன்) அடியை குறியாது முடியக் கெடவோ? (இது) முறையோ! முறை யோ! (குருவாக வந்து என் அறியாமையைக் கெடுத்து எனக்கு அருள் புரிவாயாக என்றபடி.)

பொழிப்புரை

தலைப்பு :—[' என்னப்பன் எம்பிரான் ' என்னும் பாவனை வலுத்த காரணத்தால், தனது முறைப்பாட்டைத் தந்தைபாற் கூறித் தீர்த்துக்கொள்ளும் ஸத்புத்திரனைப் போல தாஸனாகிய உபாஸகன், தன் குருமூர்த்தமாயுள்ள முருகனிடத்துத் தன் குறைகளை யெடுத்துக்கூறி, அவற்றை மாற்றிக்கொள்ள உணர்த்திய மறை இது.] அன்பு மேலீட் டினால் தனது குறையை எடுத்துக்கூறிக் குறையை நிவர்த் தித்துக் கொள்ள.

செய்யுள் :—கூர்மையான வெற்றி வாய்ந்த வேலாயுதத் தோடு கூடிய அரசனே! குறவர் குலத்து வளர்ந்த மின் போலும் இடையை யுடைய கொடிபோல்வா ளாகிய வள்ளி நாச்சியாரை யணையும் குண மலையே ! எனது அறியாமை காரணமாக, உனது திருவடி ஞானத்தை இலட்சியமாகக்

கொண்டு பெறுவதைவிட்டு முற்றுங் கெட்டுப்போகவோ நான்? (அப்படி நான் உண்மை நெறியினின்று விலகிப் பிறவிப் பயனைப் பெறாது கெட்டலையுமாறு செய்வது உனக்கு) முறையாகுமோ! முறையாகுமோ! (சொல்லுவாயாக.)

## விசேடக் குறிப்புகள்

இம் மறையின் தலைப்பு உபாஸகனுக்கும் அவனது உபாஸனா மூர்த்திக்கும் இருக்கவேண்டிய உண்மை நிலையை விளக்குகிறது. எவனொருவன், பிதா ஸத்புத்திரன் என்ற முறையிலாவது, எஜமானன் உண்மைச் சேவகன் என்ற முறையிலாவது, தன்னை ஈசுவரனிடத்து வைத்துக் கொள்ளவில்லையோ, அவனுக்கு அவ் வீசுவரனை யணுகியவனிடத்துத் தன் குறைகளை மனங் குளிர எடுத்துரைக்கத் தைரியம் ஏற்படாது. அத் தைரியமின்மைக்குக் காரணம் அவ் வுபாஸகனுக்கு உள்ளங் கலந்த ஒற்றுமை யேற்படாமையே. அதனால் அவனது அன்பும் இறைவனது அருளும் காவு பொதிந்தே விளங்கும். ஏன்? பாசங்களில் ஒன்றேனும் விலகாத ஜீவன், இயற்கையிலேயே பாசங்களினின்றும் நீங்கிய இறைவனை அணுகுதல் முடியுமோவென்று அச்சப்பட்டு நிற்கிறது. இவ் வச்சம் அறியாமை காரணமாக எழுந்தது. 'குற்றம் நீ குணங்கள் நீ' என்றும், "ஆசா பிசாசம் முதலாம் வெவ்விய குணம் பல இருக்கும் என் அறிவூடு மெய்யன் நீ வீற்றிருக்க விதி இல்லை என்னிலோ, 'பூரணன்' எனும் பெயர் விரிக்கில் உரை வேறும் உளதோ?" என்றும், கண்டு அறிந்து கூறும் அறிவு ஒருவனுக்கு எழுமாயின், அவன், உலகத்துக் கட்டுப்பாடுகளாக அமைக்கப்பெற்றுள்ள தாரதம்மியங்களையெல்லாம் கடந்து, ஸர்வலோக ஈசுவரனெனினும், தான் சம்பந்தப்பட்டமட்டில், பிதா புத்திரன் அல்லது எஜமானன் சேவகன் என்று

மதிக்கும் மனப்பண்பை உடனே அடைவன். ஏன்? . வ
னுக்கு ஏற்பட்ட உண்மை அறிவு, தன்னையும் இறைவ னை
யும் ஒன்று சேரவிடாதபடி இடையே தடுத்து நின்ற . வ
ரணங்களையெல்லாம் ஒருசேர அழித்து, அவை இல்லா ற்
செய்துவிட்டது. அவ் வறிவைப் பெற்றபின், தனது எஜ ா
னனைச் சூழ்ந்து அவனுக்குக் கட்டியங் கூறி நின்ற துனே ச்
சேவகர்களெல்லாம் போலிகளென்பதை ஒருவன் உ ர்
வதுமாத்திர மன்றி, அப் போலிச் சேவகர்களும் எஜம ா
னுக் கூழியம் செய்வதுபோலவே தனக்கும் ஊழியம் செ ப்
யும் நிலைமையிலேயே நிற்பவர்களானதுபற்றி, அவர்களை க்
கண்டு மலைத்ததாகிய மயக்கவுணர்வு தன் அறியாமைய ல்
ஏற்பட்டதென்பதும் அவனுக்கு நன்கு புலனாகும். ந்
நெறியில் நின்று உலகத்து ஒழுகப் பழகினவனுக்கு எ ம
னும் உயர்ந்தவனாகக் காணப்படா னாதலின், இம் மாயாவ
கத்தைத் தனது ஞானவாளாகிய ஒரே சொல்லால் அவ ர
வென்றவனாவான். ஆனதுபற்றியே உள்ளத்தோடு உள்ள
ஒத்த அன்பு கைவரவேண்டுமாயின் அறியாமை காரணம
எழும் ஆவரணங்களைச் சீத்தொழிக்கும் உண்மையன்பு ஏ
படவேண்டுமென்பதைச் சுட்டி ' அறியாமையினால் முடிய
கெடவோ?' என்றார். அதனால், 'நான் செய்யும் அன்
போலியன்பாக விருப்பினும் அவ் வன்பு உண்மையன்பெ
உலகம் மதிக்குமாறு வேஷம் காட்டியுள்ளே னாதலின், அ
னையே உனது வேதிப்பண்பினால் உண்மையன்பாக்கி என
னைத் தூய்மைப்படுத்தி உனது திருவடி நேசனாகச் செய்து
கொள்வாயாக.' என்று உபாஸகன் தனது குருமூர்
தத்தைப் பிரார்த்தித்துப் பலன் பெற்றுக்கொண்டப
யாகும் இது. குணபூதரன், குணபஞ்சரன் போன்றதாம்
மேல் 15-வது மறையிற் காண்க.

மாதர் வலையி லகப்படா திருக்க

கூர்வேல் விழிமங்கையர் கொங்கையிலே
சேர்வேன் அருள் சேரவும் எண்ணுமதோ?
சூர்வேரொடு குன்று தொளைத்த நெடும்
போர் வேல புரந்தர பூபதியே ! 24

அந்வயம்

சூர் வேரொடு குன்று தொளைத்த நெடும் போர் வேல ! புரந்தர பூபதியே ! கூர் வேல் விழி மங்கையர் (தம்) கொங்கையிலே சேர்வே(னாகிய என்னிடத்து) அருள் சேரவும் எண்ணும் (அது) ஓ ? [ஓடு எண்ணுப் பொருளது.]

பொழிப்புரை

தலைப்பு :—[கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக் கள்ளை மொண்டுண் டயர்கினும் வேல் மறவேன் என்னும் மனோ நிலையைப் படைக்கப் போதிக்கும் மறை இது.] மங்கையரது மோக வலைகளுக்குள் அகப்படாது தப்பிப் பிழைக்க.

செய்யுள் :—சூரபத்மனை (அல்லது அச்சத்தை) வேரூல மாக அழித்தது மாத்திரமன்றிக் கிரௌஞ்ச மலையையும் (மேருக் குன்றையும் மூலாதாரம் வரை) துளையிட்ட நீண்ட போரினைச் செய்த வேலென்னும் ஆயுதத்தை யுடையவனே ! இந்திர உலகத்துக்கு இறைவனே ! கூர்மையான வேல்போன்ற விழி(களால் என் நெஞ்சைப் பிளக்கும்) மாதர்களது முயக்கினை யுடையவனாகிய என்னிடத்து உனது அருள் வந்து பொருந்துதற்கு உடம்படுமோ ? (இவ் வையப் பாட்டை நீக்குவாயாக.)

## விசேடக் குறிப்புகள்

ஆசிரியரது உள்ளக் கிடக்கையையே உணராத உ ரை கள் பல உலவுகின்றன. சூர் என்பதற்கும் குன்று எ ப தற்கும் கூறப்பட்டுள்ள சூரபதுமன் கிரௌஞ்ச மலை ன் னும் சாதாரண உரைகளோடு, அச்சத்தால் அல்லது ற யாமையால் வரும் நடுக்கமென்றும், மூலாதாரம் மு ல் ஸஹஸ்ரார மீருக வுள்ள மேருக்குன்று என்றும் கூறியு ள விசேட உரைகளைக் கவனிக்க. உனது வேலின் தன் ம பயத்தை ஒழித்துச் சுழுனையை நிமிர்த்தி அமிர்தத்தை ப் புசிக்கச் செய்வது. அவ் வேலை யடுத்து உன்னருளை ப் பெறுவதாகிய மார்க்கத்தை விடுத்து, உடலினை இருகூ க் கிப், பூரணத்தின் பயனை அநுபவிக்க வொட்டாது டி தடுத்து என் நெஞ்சைப் பிளக்கும் (கண்) வேலாகிய ஆயு த் தையுடைய மாதர்களது மயக்கமாகிய மார்க்கத்தை க் கைப்பற்றினவனுகிய என்னிடத்து உன் வேலைப் ப று தலால் கிடைக்கும் ஸித்தியாகிய அருள் வந்து சே ரு மோ எனக் கேட்க விரும்பினவர், "போர் வே ல், கூர்வேல் விழி.......சேர்வேன்' எனக் கூறினர். இ னி இம் மங்கையர் மயக்கில் நிற்பினும் அருள் சேரும் மு ற கெடாது நிற்பது எவ்வகை என்பதைச் சற்றுப் பார்ப்போ ம். உடற்கருவிகள் தொழிற்செய்யும்போது மனம் அக் க ரு விகளோடு ஒட்டியும் ஒட்டாது நிற்கும் பழக்கத்திற் கைவ ந்த ஒருவன், நீர்க்குடத்தே நின்ற தாதி மனத்தைப்போ த் தன் இலட்சியத்தில் தவருது நிற்க வல்லவனுவான். அதற் கு நெடுநாளைப் பழக்கம்வேண்டும். தன்னிடத்திலிருந்து உ ன் னும் உயிர்ப்பட்சி தானல்ல என்றும், அவ்வுயிர்ப் பட் சி உலக அநுபவத்தைத் துய்த்தொழிக்கும்போது தா ன் சாட்சி மாத்திரையாக நின்று பார்க்கும் ஆன்மாவாகிய பட் சி

யென்றும் தன்னுண்மையைப் பிரித்து அறியத்தக்க வல்லமை வந்த அப்போதே வியவகார வேளையெல்லாம் சமாதியாக நிற்கும் நிர்விகற்ப நிஷ்டையைப் பெறவல்லவனுவான். முதலில் ஒன்று இரண்டு இந்திரியாநுபவங்களை அநுபவிக்கும்போது அவற்றைப் பிரித்துச் சாட்சி மாத்திரையாக நின்று பார்க்கும் பழக்கத்திற் பழகிப், பின்னர், கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும் ஒருசேர அநுபவிக்கும் காமநுகர்ச்சியிலும் அதனைக் கொண்டு செலுத்தப் பழகுதல் வேண்டும். இச் சாதனையைச் சாதிப்பது அருள் பெற்றார்க்கு மிகவும் இலகுவாகும். என் ? அவ்வருள் பெற்றார் உலகக் கட்டுப்பாடுகளின் மெய்ம்மை பொய்ம்மைகளைத் தமது உயிர்க்கு இதம் அகிதம் என்னும் தராசிலேயே தூக்கிப் பார்த்து உணர்ந்து நிச்சய புத்தி பெற்றவர். அதனால் உலகத்திலுள்ள கட்டுப்பாடுகளாகிய விதி விலக்குகளையெல்லாம் வெட்டிவிட்ட விபரீத புத்தி படைத்தவரென்று கொள்ளுதல் தகாது. என் ? அவரும் அவ் வருளைப் பெறுமுன்னர் உலகத்திலுள்ள நன்மை தீமைப் பாவனைகளிலும் ஒழுக்கங்களிலும் ஒழுங்குபெற நின்று கைவந்தவ ராதலின் என்க. பின் இவரது ஒழுக்கத்துக்கும் அருள்பெறு மாந்தரது ஒழுக்கத்துக்கும் பேதம் என்னையெனின், அருள் பெறு மாந்தர் கற்பனைகளுக்கும் உண்மைக்கும் பேதம் அறிய இயலாது மயங்கிச், சரியைத் தவறென்றும், (அப்பிராதான்யத்தை) முக்கிய மற்றதை முக்கியமானதென்றும் கருதிப், பொருளை விடுத்து நிழலைத் தேடிச்செல்லும் ஊமரைப்போலாவர். அருணெறி மாந்தரோ, உலகவசை, உலக வாழ்த்து என்னும் இருநிலைகளையும் மதியாது, தாம் வந்தநெறி, தாம் போகும் முடிவிடம் என்பனவற்றை மட்டும் கவனித்து, அருளூட்டும் அம்மட்டே உண்டு, அவ் வூணினிடத்தும் தீவிரப்பற்று இல்லா

ராய் ஒழுகக் காண்போம். இவ் வுதாஸீன புத்தியே அருள ளர்க்கும் அதனை ஆளாதவர்க்கும் உள்ள முக்கிய பேத என்க. இவ்வகைப் புது வினைகளை முளைக்காத வண்ண இத்துப், பழவினைகளை யநுபவிக்கும் விஷயத்திலும் கரு இல்லாமை கொண்டு நிற்பவருக்கு, 'கண்டுண்ட சொல்லிய மெல்லியர் காமக்கலவிக்கள்ளை, மொண்டு உண்டு அயர் னும் வேல்மறவேன்' என்ற நிலை நிச்சயமாக வுறு மென்க 'நெடும்போர்வேல' என்றது பசுவறிவுகொண்டறிந்த உன் மையை வெளிப்படுத்தினபடி. சூரையும் குன்றையு துளைத்தல் இறைவனுக்கு இச்சா மாத்திரமாகவும் இன யிற் புரியவல்லதாகவு மிருப்பினும் பசுகரணங்களோ நின்று பார்த்த உயிர்கள் அச் சாகசச் செய்கையின் பெரி தன்மையை யுணர்ந்து இத்தகைய அரிய செயலையும் இன வனது அருள் எளிதாகச் செய்து முடித்ததே யென் இன்பங் கொள்ளுதலால் 'நெடும்போர்' என்று கூறி ரென்க.

> 'உடலே படுகதுயர்; ஓங்குயிரே யஃதோ
> டிடரெய்தி யென்று மிருக்க;—திடமனமே
> துன்பம் பலகாலுந் துய்க்க; உயர்சிவமே
> இன்பமிவற் றென்றுமெய்த வே."

வண்பா இவ்விடத்து நன்கு கருதத்தக்கது.

## மகாவினை ஒழிக்க

மெய்யே யெனவெவ் வினைவாழ்வை யுகந்
தையோ அடியே னலையத் தகுமோ?
கையோ அயிலோ கழலோ முழுதும்
செய்யோய் மயிலேறிய சேவகனே! 2

## அங்வயம்

கையோ அயிலோ கழலோ முழுதும் செய்யோய்! மயிலேறிய சேவகனே! வெவ்வினை வாழ்வை மெய்யே என உகந்து அடியேன் அலையத்தகுமோ? (ஐயோ இரக்கக் குறிப்பு. ஓ மூன்றும் எண்ணுப் பொருளன.)

## பொழிப்புரை

தலைப்பு :—[தீராப்பிணி தீர என்னும் கருத்துப்போன்றது இது. மகாவினை என்றது மூலகாரணமான வினையை; அதாவது ஆன்மா பரமான்மாவினின்றும் தன்னை வேறாகப் பாவித்துச் செய்யத் தொடங்கிய ஆதிவினையை என்றபடி. ஏழாவது மறையின் விசேஷக்குறிப்பைப் பார்க்க.] பிறப்பு இறப்புக்கு மூலகாரணமான பெரிய வினையை ஒழிக்க.

செய்யுள் :—கையும், வேலும், பாதங்களும் முழுதும் சிவந்து காணப்படுபவனே! மயிலை ஏறி நடத்தும் போர்ச் சேவகனே! கொடிய வினைகளோடு கூடிய உலக வாழ்க்கையை மெய்யென விரும்பி உனது பக்தனாகிய நான் இலட்சியத்தை விடுத்து நெறியல்லா நெறியில் அலைதல் நியாயமாகுமோ! (இது பரிதபிக்கத்தக்கது ஆகும் என்றபடி.)

## விசேடக் குறிப்புகள்

கை அடியாரது இடரைக் காத்து அவர்க்கு அபயமளிப்பதனாலும், வேல் பகைவரது உதிரத்தில் (அல்லது பக்தரது மேருதண்டத்துள்) மூழ்குவதாலும், பாதங்கள் தம்மை வணங்குவாரது முடிகளை உராய்சுவதாலும் எப்பொழுதும் சிவந்து தோன்றுவ வாயின. உலகினர் உண்மையை யறிந்து உண்மைவழிப் படும் அளவுக்கு,இம் முருகனாகிய குருமூர்த்தியின் தொழிலும் அதிகப்பட்டுவருவதைக் கருதி இப்படிக் கூறினார். இதனால் முருகனது அருளுக்கு

எல்லையின்மை புலப்பட்டது. மயிலேறிய சேவகத்தாற் குறிக்கப்படுவன இரண்டு: பகையை அடுத்து ஊர்வதாகிய திறமை ஒன்று; தன்னை மறவாமை இரண்டு. இப் பிற் குறிப்பு, 'ஸுப்ரஹ்மண்யஸ்வாமி மயில்வாஹனத்து இருக்கிறாற்போல' என்னும் உலக வசனத்தால் அறியக் கிடக்கிறது. இத் துதிபாவனையினால் உபாஸகன் எவ்விதப் பகைவர்களையும் எதிர்த்து மேற்கொள்ளவல்ல தன்மையைப் பெறுவதுடன் எல்லாக் காலத்தும் தன்னை மறவாத ஜாக்கிரதை நிலையையும் பெற்றவனாகிறான். இனி அவ் வுலகவசனம் முருகனது பற்றற்ற தன்மையைக் குறிக்குமென்று கூறுவாருமுளர். அற்றேல் உபாஸகன் பற்றற்ற தன்மையை யடைதலும் கொள்ளப்பெறும். "நாம் யார்? நாம் இங்குள்ள காரணமென்ன? அசைபோடவும் ஆட்பெருக்கைத் தரவுமா இவ் வுலகத் துதித்தோம்? நம்மைச் சூழ்ந்துள்ள நிலைகள் தாமே வந்தனவா? வினையால் வந்தனவா? அவ் வினையை வெல்லும் உபாயந்தான் என்னை?" இவை முதலாகிய கேள்விகளைத் தன்னுள்கேட்கத் தொடங்கிய உபாஸகனுக்கு அவனது உபாஸ்ய தெய்வத்தின் அருளால் உண்மை வெளியாகிறது. அவ் வுண்மை வெளியாகவே, தன்னை மறவானாய், உலக மோசங்களுக் குட்படானாய், தான் புகுந்த நெறியையும் தான் மீண்டும் வெளியேற வேண்டிய நெறியையும் உலகத்து வீழ்வதற்கு முன்னர்க் கருப்பவாசஞ் செய்த போதே தெளிவுபெறக் கண்ட மெய்ம்மையின்படி பின் பற்றி, மூவகைப்பட்ட இருவகை வினைகளையும் ஒழித்துக் கொண்டு ஒடுக்கம் பெறுகிறான். அவ் வொடுக்க நிலையினின்றும் விரிவு ஏற்படுவதாகத் தோன்றும்போ தெல்லாம் 'மெய்யே என வெவ்வினை வாழ்வை யுகந்து அடியேன் அலையத் தகுமோ?' என்ற வினா உபாஸகனுக்கு எழுந்து கொண்டே யிருக்கும். அப்பொழுது தெய்வவருள் அவ் வுபா

ஸகனது உணர்விடை நின்று, அந் நவீன விரிவின் தோற்ற காரணத்தையும், அதன் பயனையும், அவ் விரிவினால் தீங்கு ஏற்படாதென்பதையும், அவ் விரிவு எதில் சென்று முடியு மென்பதையும், அதனால் உபாஸகனுக்கு நிலைக்கேடு ஏற் படாதென்பதையும் தெளிவுபெற உணர்த்தும். இந்த (Inner voice) உள்ளக்குர லென்ற அசரீரியைப் பெற்ற அவ் வுபாஸகன், பேரிருளினிடையும், பகல் ஒளியில் செல்வது போலச் செல்வான்.

கெடுப்ப திலையெனச் சாற்றிய வாக்குங் கிளர்பொருளைக்
கொடுப்பது திண்ண மெனுங்கட் டுரையுங் கொழித்தவின்பம்
அடுப்ப விதிவழி யாற நுகர்கென அன்னைமொழி
கடுப்ப வுரைத்த மறவேன் மனத்துறை கண்மணியே.

—கண்மணிமாலை.

என்னும் சுவாநுபூதிச் செய்யுள் இவ்வுண்மையை நன்கு விளக்கும். இவ்வகை அடிக்கடி சங்கைசெய்து தெளிந்து முற்செல்லும் உபாஸகனுக்குத் திவ்ய திருஷ்டி ஏற்படுவதால், அவன் தன்னைப் பற்றிநிற்கப் பார்க்கும் மூல வினையையும் தன்னிடத்துப் பற்றாதபடி அறுத்துவிட வல் லவனாகிறான். ஒட்டுடன் பற்றுமின்றி உலகைத் துறந்த செல்வப் பட்டினத்தார் பத்ரகிரியார் முதலிய பெரியாரின் தன்மை இவ்வுபாஸகனுக்கு வந்தெய்துகிறது என அறிக.

யாருமற்ற பேர்க்கு ஆதார மாக

ஆதார மிலேன் அருளைப் பெறவே
நீதா னொருசற்று நினைந்திலையே!
வேதாகம ஞான விநோத மனோ
தீதா சுரலோக சிகா மணியே. 26

## அந்வயம்

வேத ஆகம ஞான விநோத! மன அதீதா! ஸுர லோக சிகாமணியே! ஆதாரம் (ஒன்றும்) இலேன் (ஆகிய நான் அருளைப் பெற (ஏ) நீதான் ஒரு சற்றும் நினைந்திலை (ஏ).

## பொழிப்புரை

தலைப்பு :—[இம்மறையைக் கண்டவர், தம்மோடு உலகத்தையும் உடம்படுத்துப் பொதுவாகத் தலைப்பிட்டாரென்க.] உலகத்துப் பற்றுக்கோடில்லாமல் எல்லாம் அற்று நிற்பவர்களுக்குப் பற்றுக்கோடாக நிற்பதாகிய அருளைப் பெற.

செய்யுள் :—(நான்கு) வேதங்களாலும் (இருபத்தெட்டோடு கூடிய இரண்டு) ஆகமங்களாலும் ஏற்படும் ஞானத்தை இயல்பாகவே பெற்றுப் பக்தர்க்கும் உணர்த்தும் லீலா விநோதனே! மனத்துக்கு எட்டாதவனே! தேவர் உலகத்துக்குச் சூடாமணி போன்றவனே! நிராலம்பமாய் நிற்கும் யான் உனது அருளைப் பெற்று உன்னிடத்து ஒட்டிக்கொள்ளும் தன்மை எனக்கு வரவேண்டுமென்பதை நீ கொஞ்சமும் நினையாதிருப்பது தகுதியோ? (அவ்வண்ணம் நினைத்து என்னைக் கடைத்தேற்றுவாயாக என்றபடி.)

## விசேடக் குறிப்புகள்

"வேதமுடனாகம புராண இதிகாச முதல் வேறுமுள கலைகள் எல்லாம் மிக்கான அத்துவித துவித மார்க்கத்தையே விரிவா எடுத்து உரைக்கும்; ஓதரிய துவிதமே அத்துவித ஞானத்தை உண்டுபணும் ஞானமாகும்; ஊகம், அநுபவம், வசனம் மூன்றுக்கும் ஒவ்வும் ஈது; இது உபய வாதிகள் சம்மதம்; ஆதலின் எனக்கு இனிச் சரியையாதிகள் போதும்; யாதொன்று பாவிக்க நான் அது ஆதலால்

உன்னை நான் என்று பாவிக்கின் அத்துவித மார்க்கம் உற லாம்; ஏது பாவித்திடினும் அதுவாகி வந்து அருள்செய் எந்தைநீ.'' ஆகையால் உன்னையே நானகப் பாவித்து நின்று பார்த்தேன். இப் பாவனையினால் உலகப் பக்கத்து எனக் குள்ள பற்று ஒழிந்தது ஒன்றுமட்டும் கண்டேன்; உனது அருளைப் பெறக் கண்டேனில்லை. அதன்மேல் செய்வது இன்னதென்று அறியாமல் ஒரு நினைவையும் நினையாமல் நின்றேன். அப்படி நின்ற நிலையே பற்றாகப் பற்றி இறை வனுகிய உனது அருள் என்னை ஒட்டலாயிற்று. அவ்வகை யொட்டிய நிலையிலேயே நிராலம்ப ஆலம்பமாய் நின்று என்னை மறந்திருந்தபோது அவ் வருள்வடிவானது மேலெ ழுந்து என்னை யீர்த்து எனக்கு ஓர் இன்பத்தை நல்கிற்று. அவ் வின்பம் உலகவர் காணும் விஷய இன்பங்களைப் போலன்றி என்னை இறைவன் நிலையிற் பொருத்திய இன்ப மாகக் காணவே எனக்கு இனிப் பிறவாமை நிலை ஏற்பட லாயிற்று. அதனால், மனை, மகவு, சுற்றமென்னும் அசுத்த வாதனைகள் என்னை யொழிந்தன. இந்த நிலையிலேயே எப் பொழுதும் நின்றுவிட எண்ணினே னாயினும், இவ்வளவு காட்சிகளை யெல்லாம் யான் பார்க்கத் துணையாயிருந்த மன மெனுங் கருவி, இப்பொழுது யான் செய்த காணத்தின் பயனாக உலகத்து நிராதாரனாக நின்றது ஒன்றையே காட்டி விட்டு என்னை விட்டு விலகிற்று. அதற்குமேல் என்னைப் பற்றிநின்ற உன் அருளும் அவ் வருணிலையில் நான் அநு பவித்த இன்பங்களும் கனவாகவும் உவம தரிசனமாகவும் தோன்றுகின்றனவே யன்றி, உண்மையானவை யாகத் தெளிந்து நிர்விகற்ப சமாதியில் நிற்க இவ்வுடலும் அதன் கருவிகளும் இடங்கொடுப்பதாகத் தெரியவில்லை. அதனால், யான் இப் பக்கத்துப் பற்று ஒழிந்ததை ஒழிந்ததாகவிட்டு உன்னிடத்து வரத் துணிந்தேனாதலின், உனது அருளா

கிய சுருட்டுப் பாலத்தை மற்றொரு முறை விரித்து உலகப் பக்கத்து உள்ள என்னை உன் பக்கத்துச் சேர்த்து, என்னைக் காப்பாற்றுவாயாக. உனக்குத் தெரியாத வித்தையும் ஞானமும் இல்லை யென்பதையும் உணர்வேன். அதனோடு நீ மனோவாக்குகளுக்கு ஆதீதனு மாவாய். திவ்விய சட்சுஸ் வாய்ந்தவர்களில் தலைமை வாய்ந்தவனாக நிற்பவனும் நீ. நீ நினைத்தால் ஆகாதது ஒன்றுமில்லையாதலின், இவ்வெண்ணம் உன் மனத்தகத்து இன்னும் புகாது நிற்பது என்னை? இதனை விரைவிற் கருதி என்னை அருளெனும் தலத்தில் ஏற்றி, என்னை உன் மயமாக்கி விடுவாயாக என்று பிரார்த்தித்தபடி. ஆகமம், சிவாகமம் இருபத்தெட்டும் வைஷ்ணவாகமம் இரண்டு மானதுபற்றி 'இருபத்தெட்டோடு கூடிய இரண்டு' என்றார் உரையில்.

### பாக்கியத்தை விதிவழி யநுபவிக்க

மின்னே நிகர் வாழ்வை விரும்பிய யான்
என்னே! விதியின்! பயனிங் கிதுவோ?
பொன்னே! மணியே! பொருளே! அருளே!
மன்னே! மயிலேறிய வானவனே! 27

### அந்வயம்

பொன்னே! மணியே! பொருளே! அருளே! மன்னே! மயில் ஏறிய வானவனே! மின்(னை) ஏ நிகர்(க்கும்) வாழ்வை விரும்பிய யான் (மதிகேடன் ஆனது) என்னே! இங்கு இது விதியின் பயனோ?

### பொழிப்புரை

தலைப்பு:—[உடல் பொருள் ஆவி மூன்றையும் இறைவனிடத்து அர்ப்பணம் செய்து ஒழுகும் பக்தனை மீண்டும்

உலகப்பொருள் பற்றிநிற்க விடமில்லை யாயினும், பேத கன்மத்தால் வந்த பிராரப்தத்தால் சிற்சில போகபாக்கியங்கள் இவ் வுடலுள்ளவரை அவனைப் பற்றிநிற்கு மானதுபற்றி, அவன் அத்தகைய பிராரப்தத்தை அநுபவியாமல் தீராது. அதனை அவன் அநுபவிக்குங்கால், மனமானது அவ் வநுபவ விஷயங்களில் பற்றில்லாதபடி அவன் அச் சுகதுக்கங்களை அநுபவிக்க வேண்டு மென்பதை வற்புறுத்திக் கூறும் மறை இது.] ஒருவன் உலகில் தனக்கென ஊழ் கூட்டியுள்ள அநுபவங்களைப் பிராரப்த போகமாகப் பற்றின்றி உண்டு ஒழிக்க.

செய்யுள்:—பொன் போன்றவ! அரதனத்தை ஒத்தவ! (உபாஸகனுடைய) உலகப் பொருள் யாவுமா யுள்ளவ! (அவ்வுபாஸகனுக்கு) அருளை ஊட்டுபவ! நிலைபெற்றவ! மயில் வாகனத்தின் மீது ஏறி (ஒரு பொருண்மையை யுணர்த்தி) விளங்கும் தேவ! (இவ் வுலக வாழ்வு மின்னலைப்போல விரைவில் அழியத்தக்கதென அறிந்தும் அம்) மின்னலை யொத்த வாழ்வினிடத்து மனதைப் பற்றச் செய்த என் செய்கையை என்னென்று கூறுவது? இவ்விடத்து (அப் பற்று வந்து என்னை ஒட்டிக்கொண்டதாகிய) இறு ஊழ்வினையின் பயனோ?

## விசேடக் குறிப்புகள்

ஞானமும் கல்வியும் நயந்து, ஞானவாழ்வை நடத்தும் பெரியோர்,

"உடல் பொருள் ஆவியென் றெல்லா முனக்கே யொழித்தழித்தே
விடலெனு நன்னிலை நீ யளித்தாய் இவண் வேண்டுவ தென் [ன்
கடபட மென்றுருட் டிப்பொருள் வாயாது கட்டழியுங்
கட மடைந் தோருக்கு முன்னரு ளீந்தருள் கண்மணியே"

—கண்மணிமாலை.

என்றபடி, ஞான நிலையை நயந்த அன்றே, ஆவியும் உடலும்

உடமை எல்லாமும் தம்மை ஆட்கொண்ட குருநாத னிடத்து ஒப்புவித்துவிட்டு, உலக விஷயங்கள் ஒன்றிலும் பற்றற்று, நிராலம்பமாய், ஸத்ஸங்கம், ஸத்சிரவணம், ஸத் மனனம், தனியிடத்திலிருந்து கற்றபடி நிற்றல், முதலியவற் றிற் பழகுதல் மரபு. அன்றுரை உலக வியவகாரங்கள் பிராரப்த வசத்தினுல் வந்து தாமே பற்றி நின்று தம் பயனை யளிக்கும். எதுபோல வெனின்,

> "பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று பான்மையொடும்
> நல்லா தெரிந்து நணுகுதல் போல இருவினைகள்
> எல்லா மடைந்து பயன்தரும் மக்களுக் கென்னு மிதைக்
> கல்லா மிடாவை யேன்படைத் தாய்மனக் கண்மணியே"
>
> —கண்மணிமாலை.

என்றபடி, கன்று பல பசுக்களிடையும் தன் தாயை நாடிச் செல்லுதல்போலப், பழவினையும் அவ்வகையே தனது புசிப் புக் கேற்ற மனிதனை நாடிச் செல்லும். அப்படி ஊழ்சென்று ஊட்டும்போது அவ்வூழை யநுபவிக்கும் மனநிலைதான் ஒரு வனுக்கு மோட்சத்தை அல்லது விடுதலையைச் சிருஷ்டித் துக் கொடுப்பது. இம்மறையில் உலகத்தாரைத் தட்டி எழுப்பி ஜாக்கிரதைப்படுத்துவதற்காக வாழ்வின் நிலையா மையை, 'மின்னேநிகர்' என்ற உபமானத்தால் விளக்கி, அறிந்தும் அவ்வறிவு மறையாமுன்னரே மனம் அவ் வாழ் வைப் பற்றிக்கொள்ளும் இயல்பையும், அகங்காரம் அத னிடத்து உடற்கரித்து நிற்கும் நிலையையும், உலகத்துக்குத் தெளிவுபெறக்காட்ட, 'விரும்பிய யான்' என்று தன்னையே உலகத்தோடு உடம்படுத்துக் கூறிப், பின்னர் இவ்விஷயத் தைப்பற்றிச் சிந்தித்துச் சித்தம் தெளிந்த பின்னர் புத்தி கண்ட தெளிவை "விதியின் பயன் இங்கு இதுவோ?" என்று எடுத்துரைத்தார். இதனுல் ஞானிகளிடத்து மனப் போராட்டம் செல்லும் வழி வெளியாயிற்று. இதனுல்

ஏற்படுவது என்ன ? உலக விஷயங்களினிடத்துப் பற்றே வைக்கலாகாதென்பதும், விஷய அவலம்பனத்துக்குப் பின்னர் அதனிடத்து அபிமானமில்லாததுபோல் காட்டி நடப்பதனுல் உலகம் அத் தகையனை மோசகாரனென வெண்ணுமென்பதற்காக அதனிடத்துத் தீவிரப் பற்றுள்ளவனைப் போல அபிநயித்து ஒழுகினும், அடிக்கடி அந்தராத்மாவினிடத்துச் செய்யும் சோதனையினுல் தனக்கு உண்மையான பற்றுத் தான் புசிக்கும் அவ் வநுபவத்தி லில்லை யென்பதையறிந்துதெளிந்து நிற்கவேண்டுமென்பதும், அப்படி நில்லாததாக ஐய மேற்படும்போதெல்லாம் தனது ஆத்ம குருவினிடத்துத் தனது அஞ்ஞானுந்தகாரத்தைப் போக்குமாறு பிரார்த்தித்து உண்மை நிலையைக் கைக்கொண்டால்தான், தனது உலக அநுபவம், மேலும் முளைப்பதற்கு ஏதுவான ஆகாமிய மாகாமல், உடலோடு ஒழித்துத் தொலைக்கும் பழவினையாய் நிற்குமென்பதும், ஆதிய பல விஷயங்கள் இம் மறையால் வெளிப்படுத்தப் பெற்றுள்ளன காண்க.

"பெற்றதாய் தந்தை பெருவாழ்வு மென்பர்மற்
றிற்றை யுலகோது மிம்மாற்ற—மெற்றேகாண்
கற்றைச் சடிலக் கணபதியே மாமுகவை
யுற்ருய் குருநீயெற் குள்"

—முகவை விநாயகர் இரட்டை மணி மாலை.

என்றபடி, குருவை உலகவர் தம்முடைய பொன்னுகவும் மணியாகவும் பொருளாகவும் கூறுவது மரபாதல்பற்றி 'பொன்னே மணியே பொருளே' எனக் கூறியவர், பின்னர் உண்மை உணர்ந்தாரும் தெளியும் வண்ணம் 'அருளே! மன்னே' எனக்கூறி, அவ்வருளில் மன்னும் மானவர் பற்றற்ற நிலையில் தாம் அநுபவிக்கும் இன்பத்தை உலகவர்க்கு எடுத்துக்காட்டுவான், 'மயிலேறியவானவனே' என்றும் கூறினுர். இதனுலும் உலகவர் போக்தவ்யங்களை அநுபவிக்க

வேண்டிய வழி யவர்களுக் கறிவிக்கப் பெற்றதொன்றுயிற்று. பலத்தைப் பற்றிநின்ற சூரனுகிய மயிலைத் தன் ஒளி அல்லது அறிவைப் பற்றிநின்ற தன்மையால் அடக்கி யாளும் வாழ்வு பெற்றவ னென்பதை யுணர்த்தவே 'வானவன்' என்ற பதம் உபயோகிக்கப்பெற்றதென்க. இதனுல் முருகன் தான் மயிலின்மீது ஏறிச்செல்லும் வாழ்வு தனக்கு என்றும் நிலைத்த தல்ல வென்பதை உலகமறியச் செய்தா னென்பதும் போதரும். 'யான் என்னே! என்பது என் செய்கையிருந்தபடி என் என்ற பொருளில் பிரயோகிக்கப் பட்டுள்ளது. யான் மதிகேடன் ஆனதுஎன்னே என அந்வயத்திற் கூறியபடியும் கொள்ளலாம்.

## தான் அவ ஞக

ஆறு வமுதே, அயில்வே லரசே,
ஞாறு கரனே, நவிலத் தகுமோ!
யாறுகிய என்னை விழுங்கி வெறும்
தாறுய் நிலைநின் றது தற்பரமே! 28

## அந்வயம்

ஆறு அமுதே! அயில் வேல் அரசே! ஞான ஆகரனே! யான் ஆகிய என்னை விழுங்கி வெறும் தான் ஆய் தத் பரம் நிலை நின்றது; (இதனை) நவிலத் தகுமோ? (ஏ, அசை.)

## பொழிப்புரை

தலைப்பு:—[பிண்டத்துக்கு ஆத்மாவாகவுள்ள தானே அண்டத்துக்கு ஆத்மாவாகிய அவன் என அறிந்து அத் தன்மையை யடைந்து அநுபூதி பெற்று நிற்க ஓதிய மறை இது.] ஆத்மாவும், ஈசுவரனும் ஒன்றென உணர்ந்து அநு பவிக்க.

செய்யுள் :—கெடாத அம்ருத ஸ்வரூபமே! கூரிய வேலைத் தாங்கிய இறைவனே! ஞானத்திற்கு உறைவிடமானவனே! யான் என அகங்கரித்து நிற்கும் இப் பிண்ட ஆத்மாவாகிய கூடஸ்தப்பிரஹ்மத்தைக் கவளீகாஞ் செய்து விட்டுக், கேவலம் அண்ட ஆத்மாவாகிய பரப்பிரஹ்ம மயமாக, முக்கிய வஸ்துவானது நிலைபெற்று நின்றது. இது மௌனத்தாலே அறிந்து அநுபவிக்கத்தக்க தாதல்பற்றி (இவ் விஷயத்தை) எடுத்துச் சொல்லுதல் கூடுமோ?

## விசேடக் குறிப்புகள்

ஈண்டு முருகனாகிய குருவின் ஸாந்நித்தியத்தினால், தான் அநுபவித் தறிந்த உண்மையைக் கூறி, அவ் வுண்மையை எடுத்துச்சொல்லுதல் இலகுவிற் சாத்தியமானது அல்லவெனக் காட்டினார். ஸர்வாண்டம் என்பது அகிலமும் ஒன்று சேர்ந்த நிலையிற்காணப்படும் அண்டமாம். இவ்வண்டத்தில் தனித் தனியாகப் பின்னப்பட்ட பல அண்டங்களையே பிண்டங்களெனக்கூறுவர். இக் கருத்துக்கியையவே, 'அண்டத்துக் கொத்ததெல்லாம் பிண்டத்துக்கும் ஒக்கும்.' எனச் சக்தி தந்திரங்கள் கூறுகின்றன. இப் பிண்டங்களில் ஒருவன் மனிதன் எனப் படுவன். இவன் அண்ட நாயகனாகிய இறைவன், ஈசுவரன், பிரஹ்மம் என்பதன் அம்சபூதன். மனிதனைப் போன்றே, மனமும் உயிருமுள்ள மற்றப் பிராணிகளும் நினைக்க வல்லன எனினும், மனித வுலகத்துப் பிண்டங்களாகிய நாம் அவற்றைக் கருதும் இயல்பினம் அல்ல. வியஷ்டி பேதத்தினால் வந்த இம் மனிதனுக்கும் ஸமஷ்டி ரூபத்தால் ஏற்பட்ட ஸர்வேசுவரனுக்கும், ஒற்றுமை யுண்டு. பேதமெல்லாம் அணுத்தன்மை, மகத்துவம் அல்லது விபுத்தன்மை என்னும் இரண்டின் பேதமே. இப் பேதத்தை உபாதி பேதமென்பர். அவ் வுபாதிக்குக் கருவி

யாயுள்ளன ஜட ரூபமாயுள்ள உடலும், உலகமு மாம். இவ் வுபாதியை யொழித்துப் பார்க்கப் பழகினால் இவ் வணுத்வ மகத்வ பேதம் உடனே விலகிப்போகிறது. இதனை ஒரு திருஷ்டாந்த முகமாகப் பார்ப்போம். செல்வவானையும் ஏழையையும் எடுத்துக் கொள்வோம். இது நிலைபேதம். ஒருவன் தான் பல மனிதர்களுக்கு உணவூட்டியாய் இருக்க வேண்டுமென்று எண்ணினான். உடனே பெரும் காரியங் களைச் செய்யத் தொடங்கிப் பெரும் பொருள் ஈட்டினான். அவனால், பத்து, நூறு, ஆயிரம் என்னும் கணக்கில் பல தனி மனிதர்களுக்கும் பிழைப்புக்கு இட மேற்படக் கண் டோம். மற்றொருவன் தானொருவன் மட்டிலும் ஜீவித் தற்கு ஏது கிடைத்தாற் போதுமென எண்ணினான். அவ னுக்கு விரிவான எண்ணங்கள் ஏற்படாத காரணத்தினால் அவனுடைய தொழில் சொற்பப் பயன் தருவதாக மாற, அவனாற் பயன்பெற முடியாத பிறரால் அவன் ஏழை யெனக் கருதப் பெற்றான். இந் நிலைபேதத்தில், இருவரும் அநுபவிக்கும் ஊண் உறக்கங்களில், பேதம் சற்றும் ஏற்பட வில்லை. செல்வவான் உண்பதும் அன்னமே; ஏழை உண்ப தும் அவ் வன்னமே. செல்வவான் இளைப்பாறுகையும் தூக் கமே; ஏழை இளைப்பாறுகையும் தூக்கமே. இதுபோலவே ஜீவனோடு கூடிய கூடஸ்தப்பிரஹ்மமும் அகில சராசரங் களின் இயக்கத்தோடு கூடிய ஈசுவரனாகிய பரப்பிரஹ்மமும் நிலை பேதத்தால் வேறாகக் காணப்படுவதே யொழிய வஸ்து தத்துவத்தில் ஒன்றுதான். இவ்வகை யொன்று தான் என்று தெளிந்தறிந்த ஆத்மாவானது ஸர்வேசுவர னுக்குள் ஒடுங்கி விடுகிறது. அப்பொழுது தத்பரமான முக்கிய வஸ்துவாகிய பரமாத்மா அவ் வாத்மாவை எடுத்து விழுங்கி விடுகிறது. இந்நிலையில் வேதாந்திகளாலும் சித் தாந்திகளாலும் பலப்பல திறமாகக் கூறப்பட்ட ஸாயுஜ்யம்

சித்திக்கிறது. இச் சித்தியில் நிலைத்து நிற்பது பரமாத்மா வொன்றேதான். ஆனதுபற்றி "நவிலத்தகுமோ?" என்ருர். நவிலுதற்கெனத் தனிப்பட்ட ஆத்மா ஒன்று இருந்த போதல்லவோ நவிற்சி யென்பது கூடும்? அஃதில்லாத போது மகா மௌனம் ஒன்றே யானதுபற்றியே அங்ஙனம் கூறினுர். இதனுல் இவ்விஷயத்தைச் சொல்ல அறியாது அவ்வகை கூறினுரென்னல் பொருந்தாது. ஏன்? அவ்வநுபூதியையும், அவ் வநுபூதி பெற்ற பின்னர் லோகோபகாரமாகப் பலருக்கும் அது சொல்லத் தகுமென்று அவ்வநுபவத்தைச் சொல்லுவதையுமே தமது வாழ்நாளின் பயனுகவும் கடமையாகவும் கொண்டவர் இம் மறையாசிரியரென்பது, "ஐயா அருணகிரி அப்பா உனைப்போல மெய்யாக ஓர் சொல் விளம்பினர் யார்?" என்று இவரைப்பற்றிப் பின்வந்த பெரியார்கள் கூறிப் போந்ததால் வெளியாகும். ஆதலால் "நவிலத் தகுமோ" என்பதற்கு மௌனத்திருந்து அநுபவிக்கத் தக்கதென்று சித்தாந்த பட்சமாகவும், அதுவும் சொல்லுதற்கில்லை யென்றெல்லா மிழந்த வெல்லையுட் சென்றதாக வேதாந்த பட்சமாகவும், பொருள் கொள்ள வேண்டியது உபாஸகனது கடனுகும். இவ்வளவு ஞானத்தையும் உபாஸகன் பெறுமாறு, தான் வைத்திருப்பவனுனதுபற்றியே "ஞானுகரனே!" என்ற விளி கொடுத்தழைத்தார். இந்நிலையில் அம்ருதத்துவமும் ஸித்திப்பதனுல் கெடாத அம்ருத ஸ்வரூபமே யென்பதை யுன்னி 'ஆனு அமுதே' என்ருர். வேலர என்பதற்குக் குண்டலினியை நிமிர்த்தி நடத்த வல்ல ஒளி வாய்ந்தவனென்பது முன்பு பல மறைகளிலும் காட்டப்பட்டுள்ளது. இவ்வழியாகத், தான் அவனுக நின்று, ஸஹஜ நிஷ்டைபெற்று, நித்திய வாழ்வை யடைந்தவர்களுக்கே இவ்வுலக வாழ்வும் அதன் உண்மையும் நன்கு விளங்குவனவாம். அத்தகைய வாழ்

வைப் பெற்றவர்களே, காலாதீதமான ஒரு நிலையைப் பற்றி நின்று, காலாந்தரத்தில் தமது தனிப்பட்ட தன்மையைச் சாசுவதமாக நிற்கவிட்டுச் செல்பவ ராவர். ஆதலால் இம் மறையினால் உணர்த்தப்படும் ஸ்வாநுபவத்தை ஒவ்வொரு வரும் கடமையாகப் பெற முயல்வாராக. அகங்கார மிக்க தென்பது தோன்ற "யானாகிய வென்னை" என்றும், அத் தகைய அதனையும் அற விழுங்கிக்கொண்டு தன்னைத் தவிர வேறொன்று மில்லாமல் நிற்கச் செய்யும் சக்தி பெற்றதென் பதைத் தோற்ற வெறும் 'தானாய்' என்றும், தன்னைப்பற்றி நிற்கும் உலகத்தைத் தான் பற்றி நிற்பதில்லை யென்பது விளங்கத் 'தற்பரம்' என்றும் கூறினார். அம் முக்கிய வஸ்து தத்பரமானது எனவே, அதன் பிரதிபிம்ப சைதன்யமான ஆன்மாவும் உடலாதி தத்துவங்களின் பரமாக நில்லாது தத் பரமாகவே நிற்க வேண்டு மென்பது சொல்லாமற் சொன்னபடி. அப்படி நின்று ஸஹஜநிஷ்டை கூடுங்கால் கண்ட அதிசயமே இம்மறையிற் கூறப்பெற்றது. அகங் காரம் அல்லது ஆங்காரமென்பது ஆணவத்தின் தொழிற் பாடு என்பதை யறியவும். "ஆங்கார மான குலவேட வெம்பேய் கொடிய ஆணவத்தினும் வலிதுகாண்..." என் னுந் தாயுமானார் வாக்கால் உணர்க.

கடவுள் முன் கோப மாற்ற

இல்லே யெனு மாயையி லிட்டனை நீ
பொல்லே னறியாமை பொறுத்திலையே,
மல்லே புரி பன்னிரு வாகுவிலென்
சொல்லே புனையும் சுடர்வேலவனே! 29

அந்வயம்

மல்(ஏ) புரி பன்னிரு வாகுவில் என் சொல் (ஏ) புனை யும் சுடர் வேலவனே! நீ இல் (ஏ) எனும் மாயையில்

(என்னை) இட்டனை ; பொல்லேன் அறியாமை பொறுத்திலை (ஏ) [(ஏ) நான்கனையும் அசையாகக் கொள்க.]

## பொழிப்புரை

தலைப்பு :—[மனமும் வாக்கும் இறந்து நின்றுரை ஒரு வடிவு படுத்திப் பாவித்து, அப் பாவனா ரூபத்தின் திரு முன்னர் உபாஸகன் நின்று அவருக்குத் தன்மீது ஏற்பட்டுள்ள கோபத்தை மாற்றிக்கொள்ளக் கூறிய மறை இது.] உருவப் படுத்தப்பெற்ற ஈசுவரனது முன்னிலையில் அவரது கோபம் இல்லாத தாகச் செய்ய.

செய்யுள்:—வன்மைக்குரிய அருஞ்செய்கைகளைச் செய்யும் பன்னிரண்டு புஜங்களிலும் எனது சொல்லா லான மாலைகளைத் தரிக்கும் காந்தி வாய்ந்த வேலாயுதக் கடவுளே! குடும்ப வாழ்க்கையாகிய மாயா-மயக்கத்தில் ஆழ என்னை நீ வைத்தனை ; (அவ்வகைச் செய்த பின்னர் யான் பலவித பொல்லாச் செயல்களையும் புரியவேண்டி வந்தது. இப் புரிவுக்கு என் அறியாமையே காரணம். அப்படியிருந்தும், அம் மாயை மயக்கில் நின்று) பொல்லாறுய் யான் செய்யும் அறியாமைச் செயல்களைப் பொறுக்கமாட்டேனென்கிறுய். (அல்லது பொறுத்து அச் செயல்களுக் கேற்படும் அப் பயனை யான் உண்ணுது தடுக்கமாட்டேனென்கிறுய்! இது நீதியாகுமா? என்றபடி).

## விசேடக் குறிப்புகள்

இச் செய்யுள் அருணகிரி வாக்கோவென்று ஐயுறுவர் சிலர். இது கந்தரநுபூதியை நூறுக்க முயன்றவரது இடைச் செருக லென்னலாம்படி யுள்ள தென்பர். இவ்வகை இடைச் செருகினவர் முருகோபாஸனையில் நின்ற கிருஹஸ்தரென் பதே அன்னுர் துணிபு. இல்லையெனில், அருணகிரிநாதர் தம்மை ஒரு கிருஹஸ்தனது நிலைமையில் உடன்படுத்திக்

கொண்டு பாடின செய்யுளாகக் கொள்ளல்வேண்டும். உரைகாரர்கள் 'இல்லேயெனுமாயையி லிட்டனே' யென்பதற்குக் கூறிய உரை பொருந்தாதெனவே கொள்ளவேண்டியுள்ளது. இல்லென்பது இல்லம், மனை, வீடெனப் பொருள்படுவது. வீடு எனப்படும் இது, மோட்சமாகிய விடுதலையைக் குறிக்கும் வீட்டுக்குப் பிரதிநிதியாக மாந்தரால் உலகில் உணரப்பட நிற்பது. இடும்பைக்கு இடும்பையாக இயல் உடம்பு இதனைப் பொய்யின் கொள்கலமெனக் கொள்ளவேண்டியிருக்க அதனை மெய் என்று கூறிவைத்ததுபோல், விட்டு நீங்கவேண்டிய கிருஹத்தை, வீடு என்னும் சுகப்பயன்றரும் இடனாக எண்ணி, நிலைபெற வசிக்கும் தலமாகக் கொண்டனர் உலகோர். மாயையின் பல பொருண்மைகளில் ஒன்று, ஒன்றை மற்றொன்றாக உணர்ந்து ஒழுகுவதாகும். மோட்சம் அல்லது நித்திய வாழ்வைத் தரும் வீடு சதா நமக்கு ஞாபகமிருக்குமாறு இவ் வுலகிடை வைத்த வீடு அல்லது இல்லமானது, நாம் வீட்டின்பமாகிய பேரின்பத்தை யடையும் நெறியில் நடப்பதற்குச்சாதகமாக ஏற்பட்ட இடம்,என்பதனை எண்ணுமல்,அறியாமையினுல், மனையையும், அம்மனைக்கு விளக்கமாகிய மடவாளையும், அம்மடவாளுக்கு விளக்கமாகிய புதல்வரையும், அவரைக் காப்பாற்றுவான் வேண்டிய உலகப் பொருளையும் நாம் தேடத் தொடங்கி, குருநாதனையும் அவன் றரும் மோட்ச நிலையையும் மறந்து திண்டாடுகிறோம். இது மாயையின் செயலன்றி வேறென்ன ? இம்மாயையாகிய இல்லற வாழ்வு யாரால் வந்தது? இறைவனது திருவுள்ளப்படி யன்றி நமது வினையின் பயனுகவே வந்ததெனக் கொள்வோம். 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்னும் நிலையில்,அவன் திருவுள்ளமன்றி நமக்கென வினையும் அதன் பயனும் அவ் வினையை நாம் அவனையின்றி அநுபவித்தலும் தனிப்பட வில்லையானது பற்றி, இல்லெனும்

இம் மாயையும், இம் மாயைக்கு ஆதாரமான அறியாமையும், அவ் வறியாமையான் வரும் இன்ப துன்பங்களும், ஆகிய வெல்லாம் அவனே யாம் என்பதனை அருளுணர்த்த உணர்ந்து, அவ் வுணர்ச்சிகொண்டு அவன் முன்னிலையிலேயே நின்று, நமது பிரத்யக் பாவனையால் அவனுக்கு ஏற்பட்ட கோபத்தை மாற்றிக்கொள்ள இம் மறை ஏதுவாதலை உய்த்துணர்ந்துகொள்ளுக. பன்னிருவாகு வென்பதும், ஆறுமுக மென்பதற்கிணங்கச், சிலரை மயங்கச்செய்யும் சொற்றொடர் ஆகும். போராற்ற லுள்ள ஒருவன் செய்யும் செய்கையெல் லாம் அவனது பல கரங்களாக வருணிக்கப்படுதல் கவிமர பானதுபற்றி, ஈண்டு ஆறுமுகத்திறற் குறிப்பிட்ட உருவத்துக் கேற்பப் பன்னிரண்டு வாகுக்களையும் கூறினர். அவ் வருஞ் செயல்களைப்பற்றி,

> "விண் செலல் மரபின் ஐயர்க்கேந்திய தொருகை,
> உக்கஞ் சேர்த்திய தொருகை,
> நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை
> அசைஇய தொருகை,
> அங்குசங் கடாவ ஒருகை, இருகை
> ஐயிரு வட்டமொடு எஃகு வலந்திரிப்ப,
> ஒருகை மார்பொடு விளங்க,
> ஒருகை தாரொடு பொலிய,
> ஒருகை
> கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப,
> ஒருகை
> நீனிற விசும்பின் மலிதுளி பொழிய,
> ஒருகை
> வானர மகளிர்க்கு வதுவை சூட்ட,
> ஆங்கு, அப்
> பன்னிரு கையும் பாற்பட வியற்றி"

—திருமுருகாற்றுப்படை.

என்றார் நக்கீரரும். இம் மறையாசிரியர் புயவகுப்பு முதலிய

வகுப்புக்களால் முருகனது வாகுக்களில் சொன்மாலை புனைந் தணிய விட்டுள்ளது உலக மறிந்த விஷயமாகும். இம்மறை அருணகிரி வாக்கல்ல என்னும் பட்சத்திற் 'சொல்லே புனை யும்' என்பது பொருத்தமாயிருக்குமாறு இம்மறை புனையப் பெற்றுள்ளதென்ப. மந்திர சாஸ்திர சித்தி பெற்ற பெரி யாரிடத்து ஏனையோர் சென்று தங்களுடைய வாழ்க்கை சுகப்படுவதற் கான மந்திரங்களை அல்லது மறைகளைக் கேட்டு வாங்கி உபாஸித்து ஸித்தி யடைந்து தங்கள் வாழ்க் கையைச் சிறப்பினதாகச் செய்துகொள்வது உலக வழக்கு. அதுபோலத் தம்மாட்டு வந்து கேட்ட ஒரு கிருஹஸ் தருக்கு எழுதிக் கொடுத்து ஜபிக்கச் சொன்ன மறைகளில் இதுவும் ஒன்றாக இருத்தல் கூடும். பின்னர் அதனைத் தமது அநுபூதி நூலிற் கூட்டி எழுதிவைத்திருத்தலும் கூடும் என் பதையும் கவனிப்பார்களாக. உபாஸகனது மனச்சாந்தியே உபாஸ்யமாகிய மூர்த்தியின் கோப சாந்தி யானதுபற்றி யும், அவ் வுபாஸகன், கார்யாகார்ய விவேசனத்தால் தனது அறியாமையினின்று நீங்கவே, தனது உபாஸ்யமூர்த்திக் குக் கோப நீங்கினதாக எண்ணுவது, உபாஸகர்கள் கண்ட வுண்மையானது பற்றியும், தனக்கு அறிவு வளர்ந்ததும் தனது பூர்வ அறியாமையை யுணர்ந்து அதற்காகப் பச் சாத் தாபப்பட்ட அக்கணமே எதிர்தோற்றும் தெய்வத் தின் கோப மாறினதாகக் கருத்துட் டோன்றுமாறு, 'கட வுள்முன் கோப மாற்ற' என்ற தலைப்பிட்டார்.

வழக்குப் பேச

செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றொவ்வாதெதென வுணர்வித்ததுதான்
அவ்வா றறிவா ரறிகின்ற தலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப்பதுவே? 30

## அந்வயம்

செவ்வானின் உருவின் திகழ் வேலவன் அன்று ஒவ்வாதது என உணர்வித்ததை அவ்வாறு அறிவார் அறி கின்றது அ(ல்)லால் ஒருவர்க்கு எவ்வாறு இசைவிப்பது? (தான், ஏ, ஆசைகள்.)

## பொழிப்புரை

தலைப்பு :—[உபாஸனையில் நிற்பவர்கள், ஸந் நிதானங்களென்றும் ஆசார்யர்களென்றும் ஆடம்பரஞ் செய்யும் மனிதர்களைத் தங்களைப்போல் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களோடு கூடிய மாந்தர்களாகவே மதிப்பார்கள் என்னும் தந்திர நூல் வழக்கை எடுத்துப் பேச உதவிய மறை இது.] தந்திர நூலின் ஆசாரம் இது என்பதை எடுத்துக் கூறிச் சாதிக்க.

செய்யுள் :—சிவந்த அந்தி வானின் உருவம்போல விளங்கும் (தேஜஸையுடைய) வேற்பெருமாள், (என்னைத் தேடிப் பிடித்து ஆட்கொண்ட) அவ் வமயத்து (எனது அறிவினுள் அறிவாய்ப் புகுந்து) தான் அப்பொழுது வெளிப்படுத்திய பொருள் உலகத்து வழங்கும் (செல்வம் கல்வி என்னும்) பொருள்களைப் போன்ற தல்ல வென்று உணர்வித்த அந்த ஞான அநுபவத்தை, (என் போலவே குருநாதனது திருமுன்னர் நின்று) அக் குருவி னருள் ஊட்ட அறிபவர்கள் (தங்களுக்குள் அநுபவித்து) அறிந்துகொள்ள வேண்டுமே யல்லாமல்,(ஒருவர்) மற்றொருவருக்கு எவ்வகையாகச் சொல்லி அந்த ஞானமானது அவர்களை யடையுமாறு செய்வது? (முருகக் கடவுளே! அது முடியாத கார்யமென்பதை நீரே புகல்வீராக என முடிக்க.)

## விசேடக் குறிப்புகள்

உலகத்தில் பெரும்பாலான மதங்கள், ஆத்மாநுபவத்தை நேர்முகமாகத் தனது உபாஸனா குருவினிடத்திலிருந்து உபாஸகனை பெறும் முறையைப் போதிக்காமல், வியர்த்தமும் நிரார்த்தகமு மான கர்மங்களையும் ஒழுக்கங்களையும் மத மென்னும் பேருடன் போதித்து, வீண் படாடோபங்களையும், லோகாடம்பரங்களையும் புரியும் சமூகக் குருக்கண்மாரைத் தட்சிணாமூர்த்தி யவதாரமென்றும், இரட்சகப் பிரதிநிதியென்றும், பிரஹ்ம ஸ்வரூப மென்றும், ஸ்வாமியென்றும் மதித்துப் போற்றுமாறும், அவர்களும் ஏனைய ரோடொத்த முக் குணப் பிண்டங்களே என்பதை மறப்பித்து அவர்களுக்குப் பாதஸேவை பாதகாணிக்கை முதலிய உபசாரங்கள் புரியுமாறும், உபதேசம் செய்து நிற்பது எவ்வளவு பேதைமை? மந்திர சாஸ்திரத்தை விஸ்தாரமாக விரித்துக் கூறும் தந்திரங்கள் எவையும் இம் மூடத்தில் உபாஸகர்களை யாழ்த்துவதில்லை. ஒரு மறையைப் பின்பற்றி, அம் மறைக்கு ஆதாரமாயுள்ள உபாஸனா மூர்த்தியைப் பூஜா புரஸ்ஸரமாக வணங்கத் தொடங்கி, அவ் வுபாஸனா மூர்த்திக்கும் தனக்கும் பேத மேற்படாத நெறிக்கான ஸாதனையைச் செய்து, அநுபூதி யடைந்தவர், உலகத்து வேதாகமங்க ளாதியான பல விஷயங்களையும் தமக்குப் புகட்டும் நூல குருக்களை வித்தியா குருக்களாகமட்டும் மதிப்பதே யன்றி ஆத்மார்த்த ஞான குருவாக மதிப்பது இல்லை. ஏன்? அந்தத் நூல குருவுக்கும் சீடனுக்குப் போலவே பிராரப்த அநுபவத்தை மாற்றும் வழி யில்லை. அந்தத் நூல குருவுக்கும் பசி, பிணி, முதலிய உடலுபாதிகள் ஒழிய வில்லை. அந்தத் நூலகுருவும் ஒன்றைவிட்டு ஒன்றைப் புலம்பும் ராஜஸ தாமஸ குணங்களினின்று நீங்கினவ ரல்லர். அப்படி யிருக்க, அவரை ஞான குருவாகக்

கொள்வது மாந்தாது அறியாமையையே வெளிப்படுத்தும். பின், சில பல சமூகங்களே அத்தகைய வாழ்க்கையைச் சிலாகித்து ஒழுகுகின்றனவே யெனில், அச் சமூகங்களை ஆட்டு மந்தைகளெனவும், அத் தூல குருவை மேய்ப் பானெனவும், அச் சமூகத்தினரே கூறித், தங்களது அறி யாமை நிலையை, உலகவர்க்கு விளக்குவது கண்கூடு. அத ஞல்தான், உபாஸகன், தூலகுருக்கண்மாரை அறிவுள்ள மனிதர் என்ற தகுதிக்குமேல் வைப்பதில்லை. இக்குறை உபாஸ்ய தெய்வங்களிடத்தும் காணக் கிடைப்பதில்லையோ வெனின், (ஆ விரிஞ்சாத் அமங்கலம்) 'பிரஹ்மபதம் வரை யில் அழியத்தக்கது' என்னும் சுருதி வாக்கியப்படி, ஆஸ் தான தேவதைகளையும் பதம்பெற்ற கடவுளர்களையும் உபாஸனு தெய்வங்களாகக் கொள்ளும் உபாஸகர்களுக்கு மட்டும் இக்குறை கூறுதற் குளதே யன்றி ஸர்வக்ஞனும் ஸர்வசக்திமானு மான பரமேசுவரனையும் அவனது அம்சங் களாய் அல்லது அவஸரங்களாய் உள்ள மூர்த்திகளை யும் உபாஸ்ய தேவதைகளாகக் கொண்டவர்களுக்கு இவ் விதக் குறை கூற முடியாது. எந்தத் தேவதைகள் பத தேவதைகளாக மட்டும் தங்களைக் கட்டுப்படுத்திக்கொண்டு நிற்கின்றனவோ, அந்தத் தேவதைகளுக்கு அப் பதத்துக்கு மேற்போந்த ஆற்ற லில்லை. ஆனதுபற்றியே,

" அத்துவித வத்துவை, ஸ்வப்ரகா சத்தனியை
அருமறைகள் முரசறையவே,
அறிவினுக் கறிவாகி ஆநந்த மயமான
ஆதியை, அநாதி ஏக
தத்வஸ்வ ரூபத்தை, மதஸம்மதம் பெரு
ஸாலம்ப ரஹித மான
சாசுவத புஷ்கல நிராலம்ப ஆலம்ப
சாந்தபத வ்யோம நிலையை,

நித்ய நிர்மல ஸஹித நிஷ்ப்ரபஞ்சப் பொருளை,
நிர்விஷய சுத்த மான
நிர்விகாரத்தைத், தடஸ்தமாய் நின்று ஒளிர்
நிரஞ்சன நிராம யத்தைச்,
சித்தம் அறியாதபடி சித்தத்தில் நின்றிலகு
திவ்ய தேஜோ மயத்தைச்,
சித்பர வெளிக்குள் வளர் தற்பரம தான பர
தேவதையை அஞ்சலி செய்வாம்.''

என்று தாயுமானார் தமது உபாஸனா தெய்வத்தின் தன்மையை அறுதியிட்டுக் கூறினார். இந் நூலாசிரியரும் இந் நூல் 28-வது மறையில் 'தானாய் நிலைநின்றது தற்பரமே' என்றார். அதனால் முருகோபாஸனை செய்பவர்கள் பிறர் கூறும் அக் குற்றங்களுக் கெல்லாம் உள்ளாகாதவர்கள் என அறிக. இனிக் கர்மடர்களால் பாராட்டப்படாத எந்த ஞானம் ஈண்டு உபாஸகன் அறிந்தது என்பதைப்பற்றி விசாரிப்போம். ஒருவன் ஒரு துயரத்துக் குள்ளாகிறான். அத் துயரத்தை நீக்குவதற்கு மதங்கள் முன்வந்து, கட்டணங்கள், காணிக்கைகள், பலிகள், விரதங்கள், ஸஹஸ்ரார்ச்சனைகள் முதலியவற்றைத் தங்களது கோவில்களுக்கோ, ஸ்வாமிகளுக்கோ, மதகுருக்களுக்கோ செய்யுமாறு சொல்லுகின்றன. இடருற்ற மனிதன் தன்னைச் சூழ்ந்துள்ளோரது மூட நம்பிக்கைகளுக்கு உள்ளானவனாய் அவற்றையெல்லாம் செய்யத் தொடங்குகிறான். எனினும் அவனது கஷ்டம் நிவர்த்தி யாவதில்லை. தான் முன் செய்த கர்மங்களெல்லாம் உலக திருப்திக் கென்றே நன்றாக அவனுக்குப் படுகிறது. அதன் பின்னர் அவன் வெளிப்புறம் நோக்குவதை விட்டு உள் முகமாக நோக்கத் தொடங்குகிறான். அவனது உபாஸனா குரு இடரை நீக்கும் உண்மை நெறியை அவனுக்குப் போதிக்கிறார். ஜாக்கிரம், ஸ்வப்நம், சுழுப்தி, துரியம் என்ற

நான்கு நிலைகளையும் தாண்டித் துரியாதீதம் என்ற நிலையில், மூலாதாரத்தில், புருடன் என்ற நிலையிலே உபாஸனா மூர்த்தியின் ஸாயுஜ்யத்தைப் பெற்று நிற்கும் தன்மையால் இப் போதனை ஏற்படுகிறது. இப்படியறிந்த உபாஸகனுக்குப், பின்னர், தன் இடர் நீங்குதற்குத் தக்க வண்ணமாகக் கருவி கரணங்களும் அமைகின்றன. இதனை மேனாட்டவர்கள் 'அவ் விஷயத்தை நினைத்துத் தூங்கிவிட்டு வா' (Sleep over the matter) என்பர். ஆனால்,தாயுமானாரோ, ஜாக்கிர நிலையில் லலாடஸ்தானத்தில் ஆன்மாவாகிய புருஷன் அரசாட்சி செய்யும்போது முப்பத்தைந்து கருவிகளும் வேலை செய்வதனால் நூதன உணர்ச்சிகளையோ அல்லது யுக்திகளையோ உணர்வதற்கு அது தக்க இடமல்ல வென்று தள்ளி; அங்கிருந்து போந்து ஸ்வப்ந ஸ்தானமாகிய கண்டஸ்தானத்திலும் அக் கருவிகளில் பத்துத் தள்ளி யிருந்த இருபத்தைந்தும் வேலைசெய்வதனால்,புதிய ஆலோசனைகளுக்கு இடம்பாடு ஏற்படாமையை எடுத்துக்காட்டி விளக்கி; அடுத்த ஸுஷுப்தி ஸ்தானமாகிய ஹ்ருதய ஸ்தானத்தில் (சாந்தோக்கியத்தில் கூறப்படும் தகராலயம் இது) பிராணன், சித்தம், புருஷன் மூன்றுமட்டுமே இருப்பதைக் காட்டி, இவ்விடத்தும் மனம் அல்லது சித்தம் தனது முன் அபிப்பிராயங்களைக் கைவிடாது நின்று, பிராணனும் புருஷனும் தங்களிஷ்டப்பிரகாரம் ஆலோசனை செய்யவொட்டாதபடி தடுப்பதால், அந்த ஸ்தானத்திலும் சரியானபடி உடற்கு வரும் இடையூறுகளை விலக்குதற்கான மார்க்கங்களைப் பற்றிப் பேச முடியாமையைச் சூசிப்பித்து ; நான்காவதாகிய (துரியமாகிய) நாபிஸ்தானத்தில் பிராணனும் புருஷனும் மட்டும் ஏகாந்தமாக விருந்து மேல்வருவனவற்றிற்கு ஆன விஷயங்களைப் பரியாலோசனை செய்வதை விளக்கி ; காரிய ஸித்திக்கோ அல்லது இடையூறு நீங்குவதற்கோ

ஆன முறையைக் கண்டபோதும் அக்காட்சிக் கேற்றவாறு உடல் அமைக்கப்படா தொழியின் பயனில்லை யானதுபற் றிப் புருஷன் மாத்திரம் துரியாதீத ஸ்தானமாகிய மூலா தாரத்திற்குச் சென்று ஒடுங்கி நின்று, தான் காட்டிய நெறி யில் பிராணனுகிய ஜீவ சக்தி உடலையும் அதன் தத்துவங் களையும் மாற்றி அமைத்துக்கொள்ளுமாறு விட்டு, அது மாற்றிய பின்னர் மீண்டும் துரியத்திற்கு வந்து பிராண ேேனாடு கூடி, மறுபடியும் இதயத்துக்கு வந்து மனத்தையும் சேர்த்துக்கொண்டு, கண்ட(கழுத்து)ஆறுக லலாடஸ்தானத் தை அடைந்து அரசாளும் தன்மையை,

" ஜாக்கிரமாம் நுதலினில், இந்திரியம் பத்தும்
சப்தாதி வசனுதி வாயு பத்தும்
நீக்கமில் அந்தக்கரணம் புருடனோடு
நின்றன முப்பான் ஐந்தும் நிலவு கண்டத்(து)
ஆக்கிய சொப்பன மதனில், வாயு பத்தும்
அடுத்தன சப்தாதி வசனுதி ஆக
நோக்கு கரணம் புருஷனுடனே கூட
நுவல்வர் இருபத்தைந்தா நுண்ணி யோரே.

" சுழுத்தி இதயந்தன்னில், பிராணன் சித்தம்
சொல்லரிய புருஷனுடன் மூன்ற தாகும்;
வழுத்திய நாபியில் துரியம், பிராணனோடு
மன்னு புருஷனும் கூட வயங்கா நிற்கும்;
அழுத்திடு மூலம் தன்னில் துரியாதீதம்,
அதனிடையே புருஷன்ஒன்றி அமரும் ஞானம்
பழுத்திடு சிந்தையர் அறிவர், அவஸ்தைதோறும்
பாங்குபெறக் கருவிநிற்கும் பரிசு தானே."

என்னும் இரண்டு செய்யுட்களினுல் தாம் தமது குருநாதனி டம் அறிந்தபடி கூறியுள்ளார். இதனுல்தான் முதல்நாள் மனி தனுக்கிருந்த கவலை மறுநாள் தூங்கி எழுந்ததும் இல்லாமற் போகிறது. சரீரமும் சுக துக்கங்களைத் தாங்கவல்ல தாகி

றது. ஒரு சிலருக்கு இவையெல்லாம் ஜாக்கிர நிலையிலேயே அமையவும் கூடுமென உணர்க. இதனை 'மௌனத்திற் சேகல்' (Going into the Silence) என்பர் எல்லாரும். இவ்வகையாக இடர்ப்பட்ட முருகோபாஸகன் அவ் விடரைக் கண்டவுடன் அது நீங்குதற்கான முருகஸாயுஜ்ய ஸாதனையைச் செய்து தனது கஷ்டத்தை நீக்கிக் கொள்ளுகிறான். இதையே இம்மறையில் 'அவ்வாறு அறிவார் அறிகின்றதலால்' என்றார். இத்தன்மை, 'பிறர்க்குப் பிறர் செய்வதுண்டோ மற்றில்லை, தமக்கு மருத்துவர் தாம்' என்றபடி, ஒவ்வொருவரும் தாமே கண்டறிய வேண்டிய தானது பற்றியே, 'எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பதுவே' என்றார். 'ஒரு குதிரையைக் குளத்தடிக்குக் கொண்டு போகலாம். அதனைத் தண்ணீர் குடிக்குமாறு செய்ய யாராலாவது முடியுமா?' என்னும் ஆங்கிலப் பழமொழியைப்போல அவரவரே உண்முக நாட்டத்தில் உழைத்துப் பெறவேண்டி யிருப்பதனால்தான், இப்படி ஒவ்வொருவரும் பெறுவதற்குச் சிறந்த நெறியாகிய உபாஸனையை விட்டுத், தூல குருக்கண்மார்களிடத்திலும், மகா ஸன்னிதானங்களிடத்திலும் சென்று கால் தாழ்ந்து, கேவலமான கருமங்களைச் செய்வதிற் பயனென்னவுள தென்னும் வழக்குப் பேச இம்மறை இடங்கொடுப்பதை உய்த்துணர்க. ஈண்டு நுதல் ஸ்தானத்திலிருந்து மூலாதாரம் வரை செல்லுகிற சாக்கிரம், ஸ்வப்நம், சுழுப்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து நிலைகளிலும் முருகனது உருவமே பல தேவதாரூபங்களாக வியாபித்து நிற்பதென்பது காப்புச் செய்யுள் உரையிலேயே முன்னர் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இதனால், உபாஸனா முறையாகிய தந்திர அல்லது ஆகம அநுபூதி நெறியில் நிற்பவன், அநுபூதி யில்லாமல் நிருமிக்கப்பட்டு, ஸம்ஸ்காரங்கள் (Sacraments) என்ற பேரில்

வழங்கிவரும் பாழ்ங் கர்மங்களை ஒரு சிறிதும் மதியானாய் நின்று, பிறவிப் பயனை அடைவது வெளியாகும்.

கடவுள் முன்னிலையில் ஞானம் பெற

பாழ்வாழ் வெனுமிப் படுமாயையிலே
வீழ்வா யென வென்னை விதித்தனையே
தாழ்வானவை செய்தன தாமுளவோ?
வாழ்வா யினிநீ மயில்வாகனனே! 31

அந்வயம்

மயில் வாகனனே! பாழ் வாழ்வு எனும் இப் படு மாயையில் வீழ்வாய் என என்னை விதித்தனை. (யான்) தாழ்வு ஆனவை செய்தன உளவோ, இனி நீ வாழ்வாய் (ஆக). (தாம், ஏ, ஏ, அசைகள்.)

பொழிப்புரை

தலைப்பு:—[ஒருவன் தாங்கமுடியாத துக்கத்தில் ஆழ்ந்திருக்குங்கால், தெய்வ ஸந்நிதியில் தன்னை நிறுத்திக் கொண்டு தனது குறைகளை யெல்லாம் கூறுவதும், அவனது குறை கூறுதலுக்குப் பதில் கிடையாது வருந்திப் பின்னர்த் தன் அறிவு கொண்டே தெளிவதும், உலக அநுபவம். அவ் வநுபவத்தை ஒட்டியே இத் தலைப்பு ஏற்பட்டது.] தெய்வ ஸந்நிதியில் ஞானத்தைப் பெற.

செய்யுள் :—மயிலை வாஹனமாக வுடைய முருகக் கடவுளே! அழிந்துபோகும் வாழ்வு என்று கூறப்படும் இப் பெரிய மாயையில் என்னை ஆழ்ந்து கிடக்குமாறு நியமனஞ் செய்தாய். நான் புத்திக் குறைவான காரியங்கள் எவற்றையேனும் செய்ததுண்டோ? (அப்படிச் செய்ததனால் நான் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பினும் அக்கறை யில்லை) இனி நீ சுகமாயிருப்பாயாக!

## விசேடக் குறிப்புகள்

"நெடுந்தூரந் துக்கித்துப் பின் எல்லாம் சிவன் செய லேயென்பர்காண்" என்றபடி, மனிதன் தனக்கு நேரும் சுகங்களை யெல்லாம் தானாகவே தனது புத்தி ஸாமர்த்தியத் தினால் வருவித்துக் கொண்டதாக நினைத்தாலும், தனக்குக் கஷ்டம் நேரும்போது, 'சிவன் செயலாலே யாதும் வரு மென'த் தேர்தல் மரபு. இந் நிலையில் கஷ்டம் தோன் றும்போதுதான் எவனும் தனது சூணிலைகளைப் பரிசீலிப் பது வழக்கம். அப்படிப் பரிசீலிக்கும்போது, முன்னர்த் தான் செய்தவற்றிலுள்ள தவறுகள் நன்கு தெரியவரும். அத் தெளிவுணர்ச்சி வந்ததும், தன்னை அவ்வளவு காலம் நீக்க முடியாத துக்க வாழ்வில் அழுத்தினது தனது அறி யாமை யென்பதை உணராது, மேலெழுந்தவாரியாய், விதி யே அதனைத் துய்ப்பித்தது என்று எண்ணுவான். அப் பொழுது மேகத்தில் மின்னலைப் போலெழுந்த அறிவு, அருளுணர்த்துங் காரணத்தினால், உண்மையை நன்கறிய வல்லதாகும். அப்படி யறியும்போது சென்ற நாளைக் கெல்லாம் ஏற்பட்ட துக்கம் ஒரு புற மிருக்க, இனி எதிர் காலத்திலாவது அத் துக்கநிவர்த்தி யேற்பட்டதே யென்ற உள்ளத்தோற்றம் எழும். அத் தோற்றம் எழுந்ததனால்தான், அப்பொழுதாவது அவ் விதி தனக்கு விழிப் பூட்டிற்றே யென்ற நன்றியறிவு தோற்றப், போனதற்காக வருந்துவதை ஒரு புறம் கட்டி வைத்துவிட்டு, அப்பொழுதாவது அரு ளுணர்த்த அறிவுபெற்று மேனிலைக்கு வந்தோமே யென்ற இன்பத்தில், அவ் வருளை யூட்டி விஷயங்களைத் தெளிவுறப் புலப்படுத்திய தெய்வத்தை வாழ்த்தப் புத்தி யெழும். அப் படிப் புத்தி யெழுந்த காலத்திற் கூறிய உபசார மொழியே 'வாழ்வாய் இனி நீ' என்றது.

" ஆசைக் கடலு ளகப்பட் டருளற்ற அந்தகன்கைப்
பாசத்தி லல்லற் படவிருந் தேனைநின் பாதமென்னும்
வாசக் கமலந் தலைமேல் வலியவைத் தாண்டுகொண்ட
நேசத்தை யென்சொல்லு வேனீசர் பாகத்து நேரிழையே"

என்றபடி, அறிவு கொளுத்தின காலத்துத்தான், தா
பாழ் வாழ் வெனும் அப் படுமாயையில் அழுந்தியுள்ள ச
கதி தெரியவரும். அது தெரிந்த அக்கணமே அம்மா
யற்றுப்போயிற்றென்றும் அதற்கு பின் அது தன்னை
வாதிக்க முடியாதென்றும் உண்மையாக விளங்கும். அப்ப
விளங்குங்கால்,

" நன்றி மறப்பது நன்றன்று ; நன்றல்ல
தன்றே மறப்பது நன்று."

என்றபடி முன்னைக் கஷ்ட நிலையை மறந்து, பின்னர் வ
நிற்கும் இன்பத்தை யெண்ணிக் கிருதார்த்தனாய், இக் கூ
பாடான மாறுதலைத் தந்ததற்குத் தெய்வத்தை வாழ்த்து
தல் மரபென்க. இவ்வகை யுணர்ச்சி யேற்பட்டதே ஞான
மானதுபற்றி, அந்த ஞானமானது ஒருவனைத் தவநெறியிற்
செலுத்த, அத் தவத்தால், மனிதன் பல இடுக்கண்களையுங்
கடந்து மேனிலை யடைகின்றானென்பது இம் மறையின்
துணிபாகும். உரையில், 'அப்படிச் செய்ததனால் நான் கஷ்
டப்பட்டுக் கொண்டிருப்பினும் அக்கறை யில்லை' என்றதன்
நோக்கம், அறிவானது நியதிகளைத் தோற்றமாத்திரையாய்க்
காட்டா நிற்க, அத்தோற்றந் தொடர்ந்தேறிச் சுகதுக்க
ரூபமாகப் பயன் றராதபடி, அருளானது மாற்றவல்லதென்
பதை முற்றும் உணர்ந்த துணிபே என்க. இத் துணிபே,
பிற் கூற்றாகிய 'வாழ்வாய் இனி நீ' என்பதற்கும் ஆதார
மாயிற்று. அருளை யாள்பவர்கட்கும் ஏனையோர்களுக்கும்
இவ்விடத்திலேயே பேதம் ஏற்படுகிறது. அருள் உணர்
த்துதலால் முதற்கண்ணேயே விஷய ஞானம் பெற்ற ஒரு

வன், இவ்விஷயம் ஸ்தூலப்பட்டுக் காரியமாகத் தோற்றுவ தற்கு முன்னரே, அதன் நன்மை தீமைகளையும் காரண காரியங்களையும் பரிசீலனைசெய்து, மன வுலகத்திலேயே சுக துக்க ரூபமான உணர்ச்சிகளை அநுபவித்து விடுகிறான். இவ் வுள்ள வுணர்ச்சி ரூபமான அநுபவத்திற்குப் பின்னர் அவ் விஷயம் நடந்தேறினும், அதன் லாப லோபங்கள் அவனுக்கு ஒருவிதக் கூர்த்த உணர்ச்சியை யளிப்பதில்லை. அதனால் அவ னுள்ளம் மரத்துப் போக அவனுக்கு ஸமத்துவ பாவனை ஏற்பட்டுவிடுகிறது. இப் பாவனை ஞானமானது ஊழையும் உப் பக்கங் காண வல்ல தாகிறது. அதுபற்றியே தீவிர பக் குவ ஞானிகளுக்கு வரும் அல்லல்கள் அவர்களைத் தொந் தரை செய்ய முடியாம லழிகின்றன. அவர்களுக்கு வரும் இன்பங்களை அவர்கள் எப்பொழுதும் துன்ப முட்பொதிந்த மாத்திரைகளாகவே மதிப்பவர்க ளானதுபற்றி, அவ் வின் பங்கள் அவர்களுக்கு அதிகம் உளமகிழ்ச்சியைக் கொடுத்து, அவர்கள் நிலையழியுமாறு செய்ய முடிவதில்லை. இத் துன் பங்களெல்லாம் ஞானமொன்றினால் ஒழிவதுபற்றியே கட வுளை வாழ்த்த இட மேற்பட்டது. படுமாயை என்பதிலுள்ள படு மிகுதிப் பொருளில் வந்தது.

## கோலை மறுக்க

கலையே பதறிக் கதறித் தலையூ
டலையே படுமா றதுவாய் விடவோ?
கொலையே புரி வேடர் குலப்பிடிதோய்
மலையே மலை கூறிடு வாகையனே. 32

### அந்வயம்

கொலை (ஏ) புரியும் வேடரது குலப் பிடி தோய்கின்ற மலையே! மலை கூறு இடும் வாகையனே! கலை (ஏ) (யானது)

பதறிக் கதறித் தலையூடு அலை (எ) படும் ஆறு (அது) ஆய் விடவோ? [(எ) மூன்றும் அசைகள். (அது) பகுதிப் பொருள் விகுதி.]

## பொழிப்புரை

தலைப்பு:—[கொன்று புலாலுண்ணும் குலத்தில் பிறந்து வளர்ந்தவனேனும் அவனுக்கும் அருள் கிட்டுவதற்கான நெறியைப் போதிக்கும் மறை இது.] கொலைத் தொழிலை விட்டு நிற்க.

செய்யுள்:—கொலையைக் (குலத் தொழிலாகப்) புரியும் வேடரது குலத்தில் வளர்ந்தவளேனும், (தன் மட்டில் அக் கொலையையும் புலாலுண்ணலையும் கை விட்டு நின்ற) பெண் யானை போன்றவளாகிய வள்ளி நாச்சியாரை எள்ளத் தக்கவ ளல்லவென நீ ஏற்றுக் கொண்ட காரணத்தால், (உன்னை வந்தடைந்து) அவள் உனது தோளைத் தோயும் பாக்கியத்தை யளித்த பர்வதாகார மானவனே! கிரௌஞ்ச மலையைப் பிளந்து வெற்றி மாலையைச் சூடினவனே! (காட்டினிடத்து அலைக்கப்பட்ட) மானானது மனப் பதற்றத்தையடைந்து கதறி அக் காட்டினிடத்தே சிக்கி, அங்கு மிங்குமாகத் திரிந்து வருந்துவது போல (நானும்) கதியின்றி யலைந்து நிற்றல் தகுதியோ? (அக் கொலை, புலாலுண்ணல் இரண்டினையும் நானும் விடுத்து உனது ஸாயுஜ்யத்தைத் தோயுமாறு அருள் புரிவாயாக) என முடிக்க.

## விசேடக் குறிப்புகள்

'கொலை மறுக்க' என்னும் தலைப்பு, 'கொலையே புரி வேடர் குலப்பிடி தோய் மலையே' என்பதனாற் பெறப் பெற்றது. இம்மறையின் தலைப்பையே மாற்றி விட்டவரது உரை ஈண்டு கருதத் தக்க தன்று. அது ஆகம நெறிக்கும் முரணானது. வேடர் குலப் பிடி யென்பதன் உண்

மையை நோக்குங்கால் அது நன்றி யறிவை யுணர்த்தும் உபசார வழக்கென்பது வெளியாகும். ஒருவனது பிறப்பும் வளர்ப்பும் சூணிலைகளும் அவனது முன்னேற்றத்தைத் தடுக்க முடியா வென்பதற்கு இம் மறை ஆதாரமாகும். உலகத்து ஓர் ஆன்மா பூர்வ ஜன்மத்திற் செய்த நல்வினை தீவினைகளின் பயனாக இச் சன்மத்துப் பிறப்புக் கொள்ளுகிறது என்பது நம்மனோரது உறுதியான நம்பிக்கை. எனினும் அவ் வான்மா ஒருமைக்கண் தான் கற்ற கல்வியை எழுமைக்கும் ஏமாப்புடைத்தாகக் கொள்ளவல்லதாதலால், சில ஸம்ஸ்காரங்கள் கொண்டு அவ் வான்மாவைத் திருத்தி விடலாம் என்பதற்காகவே வேத ஆகம விதி நியமங்கள் ஏற்பட லாயின. இவ் வேற்பாட்டுக்கு ஆதாரக் கொள்கை ஆன்மாவிற்குச் சுய வறிவுண் டென்பதாகும். ஒருவன் எவ்வளவு கேவலமான சூணிலைகளில் பிறந்து வளர்வானாயினும் "நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே, யல்லாது வேறு நிலையுளதோ?" என்றபடி ஸாதுக்களின் ஸஹவாஸத்தினாலும், மூர்த்தி யுபாஸனையினாலும் தனது கேடான சூணிலைகளை யெல்லாம் அறவும் மாற்றிக்கொண்டு, பெரியார்களது அநுபவ மொழிகளைக் கற்று, ஞானத்தை யடைந்து, கற்ற அவ் வழியிலேயே நின்று, முத்தி யடைய முடியு மென்பது அறிஞர் யாவரும் ஒப்புக் கொண்ட விஷயமாம். அதனால் இம் மறையிற் கூறியபடி வள்ளி நாச்சியாரது தனிப்பட்ட ஒழுக்கத்தை மனதில் பதித்துத் தாமும் திருந்தி நல்வழிப் படுவதற்கு இம் மறை கருவி யாதல் காண்க. உபாஸகனது செயலின்மையையும் குற்ற மற்ற தன்மையையும் காட்டக் கலைமானை உபமானமாகத் தந்தருளினார். தலையூடு என்பதற்குத் தன் கொம்பு சிக்கிக்கொண்டு என்று உரை கூறுவதில் தவறொன்றுமில்லையேனும், தலையை இடப்பெயராகக் கொண்டு ஊடு என்

பதனை ஏழாம் வேற்றுமைப் பொருளில் கொள்ளுதல் சாலும். 'அலேயே படுமாறது' என்ற சொற்றொடரிலுள்ள ஏ அசை. அலைபடும் ஆறு அது, அலையு நெறியாகிய வது வென்க. ஆய்விடவோ என்பதன்முன் நான் என்னும் தோன்றா எழுவாயை வருவிக்க. நிரபாரதியான மானுனது தானுள்ள காட்டில் வசிக்கும் துஷ்ட ஜந்துக்களின் கூட்டுற வால் துன்பப்படுவதுபோலக், கொலையையும் புலாலுண்ணலை யும் மறுத்த நான், எனது உறவு, அயலார் இவர்களது கூட் டுறவால் உனது அருளுக்குப் பாத்திரமாகாது துன்ப மெய் துவது நியாய மல்ல வானதுபற்றி, வள்ளி நாச்சியாரைத் தேடிப் பிடித்து நீ சேர்த்துக்கொண்டதுபோல என்னை யும் தேடிப் பிடித்து ஆட்கொள்ளுவாயாக என வேண்டிய படி. இவ்விதப் பிரார்த்தனையைச்செய்யும் மனத்துணிவு ஏற் படுவதற்குக், கொலைபுரிதலும் புலாலுண்ணலும் விலக்கப்பட வேண்டியவை என்பதை நன்கு வெளிப்படுத்தவே, 'கொலை மறுக்க' எனத் தலைப்புக் கொடுத்தார் என்க.

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிரும் தொழும்.''

என்னும் குறள் வாக்கும் இக் கருத்தை வற்புறுத்துவது காண்க. பிடி தோய் மலையே என்பது செய்வினை செயப் பாட்டுவினை என்னும் இரு வினைப் பொருளிலும் நிற்குமாறு அழகாகப் பெய்யப் பெற்றுள்ளது. மலை அசேதனமாக விருப்பின் பிடி தோய்தலே தகுதி. ஆனல் ஈண்டு குறிக் கப்படும் மலையானது தக்க சமயம் பார்த்து மாந்தரைத் தானே வலிய வந்து ஆட்கொள்ளும் சேதன வஸ்துவானது பற்றிப் பிடியைத் தோய்கின்ற மலையே என்பதே சிறப் புடைத்து. பிடியும் என உம்மையை உரைகாரர்கள் வருவித் துத், தெய்வயானையே யன்றி வேடர் குலப் பிடியும் தோய் எனப் பொருள் பணித்தினர். அது ஈண்டு எடுத்துக்

கொண்ட பொருண்மைக்கு ஏற்றதாகாததுமன்றி அநவசரமானதுமாகும். பிடியும் தோய் என்று, இழிவு தோற்றிய உம்மையெனக் கொள்ளலும் தகுதியல்ல: ஏன்? அக் குலப் பிடியை முருகன் தோய்ந்தது அவளது சிறப்பான ஒழுக்க உயர்வை நோக்கி யென்ப தறிக. அதனால் எவ் வகையானும் உம்மை விரிப்பதற்கு இட மின்மை யுணர்க.

## வியாகுலம் ஒழிக்க

**சிந்தாகுல இல்லொடு செல்வமெனும்**
**விந்தாடவி யென்று விடப் பெறுவேன்?**
**மந்தாகினி தந்த வரோதயனே,**
**கந்தா, முருகா, கருணாகரனே! 33**

## அந்வயம்

*மந்தாகினி தந்த வரோதயனே! கந்தா! முருகா! கருணா ஆகரனே! சிந்தா ஆகுல இல்(ஒடு) செல்வம் எனும் விந்தா அடவி விட என்று பெறுவேன்? (சொல்வாயாக.)*

## பொழிப்புரை

தலைப்பு:—[*தாரம், புத்திரன், வித்தம் என்னும் மூன்று ஈஷணைகளினாலும் வரும் துன்பங்களை யொழிக்கக் கூறிய மறை இது.*] *மன வருத்தத்தை யெல்லாம் ஒழிக்க.*

செய்யுள்:—*கங்கை உதவிய சிலாக்கியமான தோற்றம் வாய்ந்தவனே! கந்தனே! முருகனே! அருளுக்கு உறைவிடமானவனே! சிந்தைக்குத் துன்பத்தை யளிக்கின்ற மனைவி (மக்கள்) செல்வம் என்னும் மூவேஷணைகளாகிய ஆச்சரியகரமான காடானது என்னைவிட்டு நீங்க நான் எப்பொழுது சுகத்தைப் பெறுவேன்? (நீ சொல்வாயாக.)*

## விசேடக் குறிப்புகள்

சிந்தாகுல, விந்தாடவி என்பன வடமொழி ஸந்திகள். சிந்தா வியாகுல, விந்தையாகிய அடவி எனப் பொருள் விரிக்க நிற்பன. விந்தியமலைக் காடென்றும் அது வெட்ட வெட்டத் தளிர்ப்பதென்றும் கூறும் உரை வேண்டற்பால தன்று. விந்தாடவி என்னும் சொற்றொடரில் வித்யா எனும் சொல், வித்தை, அல்லது விந்தையென ஆய், பின்னர் வடமொழி ஈற்றை ஏற்று, விந்தா வென அடவியோடு தீர்க்க ஸந்தியாகப் புணர்ந்து நின்றது. மந்தாகினி, கந்தா என்னும் எதுகைகளுக்கு இயைய இம் மாறுபாடு வரலாயிற்று. இல்லையும், செல்வத்தையும் சொன்ன காரணத்தால் புத்திரனையும் விரித்துக் கூறலாயிற்று, வித்தேஷணை தாரேஷணை புத்ரேஷணை என்பன வடநூலார் வழக்கானமைபற்றி. மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்பது தமிழ்நூல் வழக்கு. ஈண்டு வடநூல் வழக்கையே செய்யுளிற் கூறினார். இனிச் சிந்தாகுல இல்லையும், செல்வமெனும் விந்தாடவியையும் எனக் கொள்வாரும் உளர். மந்தாகினி தந்த வரோதயனே என்பதைப் பற்றிய விசேஷம் நன்கு கருதத் தக்கது. 'பெம்மான் முருகன் பிறவான் இறவான்' என்ற பெரியார், கங்கை யீன்ற அல்லது பெற்றெடுத்த என்று உரை கூற மனங் கொள்வாரா என்ற ஆட்சேபனை ஏற்படும். இவ் வுரைபேதங்களுக்கு மதபேதங்களே, காரணமானது பற்றி ஈண்டு மதங்கள் தோன்றி வளர்ந்து அழியும் வரலாற்றைச் சற்றுக் கவனிப்போம். உலகத்துத் தோன்றிய மதம் ஒன்றேனும் நாளிதுவரை அழியாமல் எங்கேயோ ஒரு மூலைக்கண் இருந்துகொண்டே யிருக்க, அழியும் வரலாறு என எப்படிக் கூறலாம் என்ற கடா நிகழலாம். நன்று, நன்று: தோற்றமும், வளர்ச்சியும், அழிவும் மாந்தாது

அறிவளவில் மட்டுமே யன்றி நிரந்தர வுலக இருப்பி லல்ல வென்று உணர்க.

இவ்விடத்திலேயே வேதாந்தத்துக்கும் (அத்வைதத் துக்கும்) சித்தாந்தத்துக்கும் (விசிஷ்டாத்வைத த்வைதங்க ளுக்கும்) உள்ளமாறுபாடு வெளிப்படுகிறது. வேதாந்தம் ஸத் தையும் சித்தையும் நிலைக்களமாகக் கொள்கிறது; சித்தாந்தம், ஈசன், ஆன்மா, மாயை இம் மூன்றையும் நிலைக்களமாகக் கொள்கிறது. இவ் விரண்டன் நல் லுணர்ச்சியே உலகத்து மனிதனது லட்சியத்துக்கும் வாழ்வுக்கும் நல்லாதார மாவது பற்றி ஈண்டு இவ்விஷயத்தை ஒரு சிறிது விரித்துக்கூறுவல். வேதாந்தி (அத்வைதி), "ஸத்தென்ற தன்மையில் ஜீவனும் ஈசுவரனும் ஒன்றே. ஈசுவரன் சமஷ்டி ரூபமாகக் கருதப் படுபவன். ஆன்மா என்று உபசாரப் பெயர் பெற்ற ஜீவன் வியஷ்டி ரூபமாகக் கருதப்படுவது. இப் பேதம் ஒன்றே யன்றி ஜீவான்மா பரமான்மாக்களுக்கு வேறு பேத மில்லை." என்கிறான். ஆன்மா என்பது ஜீவனுக்கு உப சாரப் பெய ரென்ற தெப்படியெனில்: ஜீவன் என்பது, சப்த தாதுக்களும் சரியான அளவில் கூடி நின்று உடலாகிய உருவெடுத்து நிற்கும்போது அவ்வுடலினிடத்துத் தோன்றி நிற்கும் உயிர்ப்புச் சக்தியே யல்லது, ஆன்மா வாகா தென்க. ஆன்மாவென்பது இஜ் ஜீவ சக்தி உயிர் பெற்று நிற் கும்போது அதனிடத்தில் காணப்படும் ஈசுவர சைதன்ய மாகும். ஆனல் இந்த ஜீவனுக்கும், ஆன்மாவுக்கும் உள்ள பே தத்தைக் கண்டறிவது கடினமாயிருப்பதால், பலர் ஜீவனே ஆன்மாவென மயங்க வேண்டியிருக்கிறது. இச் சீவனுக்கும் ஆன்மாவுக்கும் ஒட்டுத்தான் மனம் என்னப்படுவது. இம்ம னம் ஈசுவரனென்ற பரமான்மாவினது பக்கத்தை நோக்கும் போது துல்லியமாயும் தெளிவாயும் சுத்த ஸ்படிக ஸங்காசமா யும் இருக்கும். இம்மனம் ஜீவனென்ற உயிர்ப்புச் சக்தியினது

பக்கத்தில் அடிக்கடி மலினப்பட்டுக் காணும். கடிகாரக்காரன் தான் செய்து வைத்த அல்லது பழுது பார்த்த கடியாரத்தை அடிக்கடி சுத்தம் செய்வதுபோலப், பரமான்மா, தான் சிருஷ்டித்து, வளர்த்து வருகிற சரீரத்தில் மனம் வழியாக உள் நுழைந்து, ஸதா அதனைச் சுத்தம் செய்துகொண்டே யிருக்கிறது. இச்செய்கை ஒவ்வொரு நாளும் மனிதன் தூங்கும்போது நடைபெறுகிறது என்பது சாதாரண ஜனங்களது நம்பிக்கை. ஆனால் அறிவாளிகள் விழித்துக்கொண்டிருக்கும் போதும் மகா மௌனத்துக்குச் சென்று தமது உடற்கூறுகளை அடிக்கடி புதுப்பித்துக் கொள்ள வல்லவராகிறார்க ளென்பது மேல் 30-வது மறையின் விசேடக் குறிப்பில் காட்டப் பெற்றது. இதுவே எல்லா நாட்டும் சிறந்துள மனஸ் தத்துவ நூலாரும் கண்ட உண்மைக் கொள்கை யாகும். நிற்க, ஜீவாத்மா அல்லது கூடஸ்தப் பிரஹ்மம் அல்லது பிண்டான்மா என்பதும், பரமாத்மா, அல்லது பரப்பிரஹ்மம் அல்லது அண்டான்மா என்பதும் ஒன்றே யென்றும், அதன் ஸ்வரூபம் சித்தென்றும் வேதாந்தி (அத்வைதி) கூறுவான்.

ஆனால் "அப்படிக் கூறுதல் தகாது; ஜீவான்மா வேறு; ஈசுவரன் வேறு; ஜீவான்மாவுக்கு முத்தியிலும் தனிப்பட்ட நிலையுண்டு. இஜ் ஜீவான்மாவுக்கு ஆநந்தம் ஒன்றே அல்லாமல் பஞ்ச கிருத்தியங்கள் செய்யும் அதிகாரம் இல்லை. அதனாலே, (முத்தியிலும் மூன்றும் மொழியக் கேள்)" என்று சித்தாந்தி (விசிஷ்டாத்வைதியும் துவைதியும் என்க.) வாதிப்பான். அதற்குக் காரணம், கடம் உடைந்தபின் கட ஆகாசமானது மஹா ஆகாசத்தில் கலந்ததுபோல், தனது ஆத்மாவானது மஹாப் பிரளயமாகிய பேரிருளில் உள்ள விடம் தெரியாமல் அழிந்துபோனதாகக் கொண்டால், தான் விரதங்கள் நோற்பதும், அவ் விரதங்களுக்குப் பலனாக ஸாலோக

ஸாமீப ஸாரூப ஸாயுஜ்யங்களைப் பெறுவதென்பதும் வீணாக வல்லவோ முடியும் என அவன் கருதுவதே. இக்கருத்து ஆணவத்தினால் வந்ததல்லவா வென்பான் வேதாந்தி (அத்வைதி.)

இவ்வகையாக ஜீவான்மா பரமான்மாக்களை ஒன்றாகவே மதிக்கும் வேதாந்திக்கு இவ் வுலகமாகிய மாயை இல்பொருளாகத் தோன்றும். ஆனால் ஜீவனும் ஈசுவரனும் வேறு என்னும் சித்தாந்திக்கு இவ்வுலகம் என்று முள்ளது (அதாவது மாயை நித்தியமானது) என்பது கொள்கை. ஏன்? "இம் மாயா காரியமாகிய உலகம் ஒருநாளும் அழிந்ததாக எண்ணுவதற்கு இடமேயில்லை. ஒருவன் இருந்தாலும் சரி இறந்தாலுஞ்சரி மாயா காரியமாகிய உலகம் எப்பொழுதும் தொடர்ந்தாற்போல் இருந்துகொண் டிருக்கவே காண்கிறோம். இது சுருதி, யுக்தி, அநுபவம் என்னும் மூன்றுக்கும் ஒவ்வும்." என்று சித்தாந்தி சாதிப்பான். சாதிப்பானென்று கூறுவானேன் எனில், தன்னதே முடிவு, தன் முடிவுக்கு வேறான கொள்கையெல்லாம் மாயா மயக்கம் என்பது அவனது சித்தாந்தமானதுபற்றிச் 'சாதிப்பா' னெனக் கூறியதென்க. இதனையே ஆங்கிலர் (Dogmatism) பிடிவாதக் கொள்கை என்பர். இதனாலேயே சிலர் அத்வைதியை மாயாவாதி என இழித்துக் கூறவும் தொடங்கினர் என அறிக. ஆனால் அவ் விழிவு, இன்ப நிஷ்டை கூடாது, கட பட மென்றுருட்டிச் சொல்லளவாக வேதாந்த விசாரம் செய்து திரியும் வாய் வாதப் பேயருக்கு ஒவ்வுமே யன்றி, உபாஸனை நெறியால் அத்வைத உண்மையை அநுபூதி வாயிலாக வுணர்ந்த வேதாந்தி(அத்வைதி)களுக்கு ஒவ்வாதென உணர்க.

ஆனால் ஈண்டு வேதாந்தி (அத்வைதி) உணர்த்துவது என்ன? "பிடிவாதமாகக் கொள்கைகளை வைத்துக்கொண்டு நிற்பதானது ஆன்மசக்தியைக் கட்டுப் படுத்திக் குறைத்து

விடுவதாகும். ஆன்மாவே அறிவு ஸ்வரூபமாக வுள்ள தானது பற்றி அறிவு மயமாய் நின்று உலகத்தைப் பார்க்கவேண்டியது அவசியமாகும். அப்படிப் பார்க்கத் தவறுவதனால்தான் லோகாயதம் பலப்படுகிறது. மாயைக்குத் தனிப்பட்ட நிலை கொடுக்கவேண்டிய அவசியமே யில்லை. மாயையும் அதன் காரியமாகிய உலகமும் என்று முள்ளதாகவே யிருக்கட்டும். ஒருவனது மடியில் நூறு ரூபாய் நோட்டு இருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அவன் அதை மறந்து விடுவானானால் அந் நூறு ரூபாயால் அவனுக்கு ஏதாவது பலனுண்டா? அதனால் அவனது அறிவு முக்கியமானதே யன்றி ரூபாயுடைமை யல்ல வென்பது வெளியாகும். முக்கியமல்லாததான அப் பணம் முக்கிய வஸ்துவாகிய சித்தினால் அறியப்படுவ தில்லையானால் எப்படிப் பயனற்றதாகப் போகிறதோ, அப்படியே ஆன்மாவாகிய சித்து இவ்வுலக முண்டென்பதை யறிந்தாலல்லாமல் இவ்வுலகம் யாதொரு பயனையும் தரவல்லதல்ல வானதுபற்றிச், சித்தே முக்கிய வஸ்துவும், என்று முள்ளது மாம். அச் சித்து இல்லை யெனில் உலகமு மில்லையாகும். ஆகையினால் சித்து ஒன்றுக்கு நிலையான இடத்தை யளித்து அச் சித்தினால் அறியப்படுவதற்கு முன்னும் அச் சித்து மறந்துவிட்டதன் பின்னும் (உள்ளதாகச் சொல்லப் படினும்) அச் சித்தின் கண்ணுக்குப் படாத மாயா காரிய உலகமானது இல்லையென்று கொள்வதில் வந்த தவறு என்ன?'' என்பன்.

இப்படிக் கொள்வதில் ஒரு இலாப முண்டு என்றும் அவ் விலாபமே உண்மையான ஆன்மலாபமு மாகுமென்றும் வேதாந்தி (அத்வைதி) தெளிவுறக் கூறுவன். அவ் விலாபம் யாதெனப் பார்ப்போம். ''உலகத்தை அல்லது மாயையை நித்தியப் பொருளாகக் கொண்டால், அம் மாயையாகிய உலகத்துக்கும் சித்தாகிய தனக்கும் அடிக்கடி போராட்ட மேற்

படுகிறது. அச்சித்தையும் ஜீவான்மா, பரமான்மா என இரண்டாகப் பிரித்ததனால் அச் சீவான்மா மாயையோடு செய்யும் போராட்டத்தில் பரமான்மாவை மறக்க ஏற்படுகிறது. அப் பரமான்மாவை மறக்காமல்நின்று இம்மாயையாகிய உலகைச் சயித்தோ மென்ற பட்சத்திலுங்கூட, நாம் லோகாயதர்களிற் சிறந்து நின்றே மென்ற பேரே யல்லாது, ஆன்ம ரூபமாய் உலகத்தைக் கடந்து நின்றேம் என்பது ஏற்படுவதில்லை. அதனால் ஒரு வஸ்துவுக்கு உண்மையிருப்பைக் கொடுத்து அதைச் சயிக்கப் பார்ப்பதினும், அவ் வஸ்து இல்லையென மனங்கொண்டு அதனைக் கவனியாமலே இருந்துவிடுவ தல்லவா அதனைக் கடக்கும் வழி?

"உலக முகமாக ஓர் உதாரணம் பார்ப்போம். ஒருவனுக்கு ஓர் எதிரி இருப்பதாக நினைத்துக் கொண்டால் அவ் வெதிரியைப்பற்றி நினைப்பதிலும் அவனையும் அவன் செய்யும் தீங்குகளையும் நிவர்த்திக்கவேண்டிய வழிகளைத் தேடுவதிலுமே அவன் காலமெல்லாம் போய்விடும். அப்படி ஓர் எதிரி யிருப்பினும், அவனிடத்து எதிரி யென்ற பாவனையை யொழித்து நடப்பதனால், நமது மனதுக்குச் சாந்தியும், நமது வாழ்வுக்கு இடையூறின்மையும், அதனால் நம் வாழ்வின் ஒக்கமும் ஏற்படுவதை நாம் பிரத்தியட்சமாகக் காண்கிறே மல்லவா? ஆனதனால் எந்த பாவனை சிறந்ததென்று யோசித்துப் பார்க்கின், எதிரியுண்மை என்ற பாவனையிலும் எதிரியின்மை யென்ற பாவனையே சிறந்த பாவனை யென்பது அறிவுக்குப் புலப்படும்.

"அதுபோலவே, உலகமும் அதற்கு முதற் கருவியாகிய மாயையும் நித்தியம் என்று எண்ணி, அம் மாயையினின்று ஈசுவரனையும் ஆன்மாவையும் வேறுபடுத்தி, ஆன்மாவானது ஈசுவரனைத் துணைக்கொண்டு மாயையை வென்றது என்று சொல்வதைக் காட்டிலும், 'ஈசுவரனே ஆன்மா; ஆன்மாவே

ஈசுவரன் ; மாயை என்றுமுள்ளதன்று; அது உலகத்துக்கு முதற் கருவியுமன்று ; ஈசுவரனே உலகத்துக்கு முதற்கருவி துணைக்கருவி யென்னும் இரண்டு மாவான் ; அவ் வீசுவரனே ஆன்மாவுமாவான்; இவ் வான்மாவிலும் ஈசுவரன் வேறு என்று எண்ணித்தான் உபாஸனை செய்து பார்த்ததில் ஒருவன் கண்ட அநுபூதியும் அதுவே. ஆகையினால், சித்தாகிய ஸத்து ஒன்றே எல்லாமாய் விளங்குவது.' என்று தெளிந்து மனத்திற் கொள்வானானால், தனக்கு எவ்வளவு சுகமும் சாந்தியும் ஏற்படுகின்றன வென்பதை ஒவ்வொருவனும் தன் அறிவு கொண்டே தெளிந்தறிதல் முடியுமே ! இதற்கு அந்நியமாய் அநுபவத்துக்கு ஒத்து வராத கொள்கையை மனங்கொண்டு நமது அறிவைக் குறுக்கிக்கொள்வதிற் பயனென்ன ?" என்றுணர்ந்ததே அவ் விலாபமாம்.

நிற்க, இவ்வளவு தூரம் மற்றொன்று விரித்தலென்னும் குற்றத்திற் குட்பட்டதுபோல விளக்கினது, 'மந்தாகினி தந்த' என்பதற்குக் கங்கை பிரஸவித்த என்று பொருள் கூறலாகாதென்று சொல்ல வந்த ஸந்தர்ப்பத்தில், மதங்கள் தோன்றி வளர்ந்து அழியும் வரலாற்றைச் சற்று பார்ப்போம் என்று கூறியவிடத்து,மதங்கள் அழியும் வழியாவது, அறிவு குறுகி நின்றபோது உண்மையெனத் தோன்றிய மதம் அவ் வறிவு விரிந்து காட்டும்போது அழிந்து மறையும் என்பதனை வேதாந்த (அத்வைத) சித்தாந்த (விசிஷ்டாத்வைதத் துவைத) முகங்களால் எடுத்துக் காட்டலாயிற்று. இதனாலேயே வேதாந்த சித்தாந்த ஸமரஸ முயற்சியில் நின்ற தாயுமானாரும்,

" அப்பொருளு மான்மாவு மாகமநூல் சொன்னபடி
தப்பில்லாச் சித்தொன்றாஞ் சாதியினால்—எப்படியும்

> தேரிற் றுவிதம் : சிவாகமமே சொல்லு நிஷ்டை
> ஆருமிடத் தத்துவித மாம். "

என்று சொல்லிப் போந்தார். சிவஞான ஸித்தியார் தாயுமானருக்கு ஆதார நூலெனின், சிவஞான ஸித்தியார் கருத்தும் இதுவே என்பது விசதம். அதனால் மதங்கள் தோன்றுதலும், வளர்தலும், அழிதலும் ஸஹஜமே யென்போம். மதம் என்பது ஒரு மகன் ஒருவித நிலைக்கண் தன்னை நிறுத்திப் பார்த்தபோது அவன் அந் நிலையில் அநுபவித்த உண்மையின் சொற்குறியாகும். அந் நிலை மாற மாற அம் மதமும் மாறுபட்டுக் கொண்டே வரலாம். எனினும், அம் மதங்களெல்லாம், ஒன்றுக்குமேலொன்று, வஸ்துவை யறிதற்குக் கருவியாக நிற்கும் சோபானங்கள் (படிக்கட்டுகள்) ஆனது பற்றியே, நம்மனோர் எல்லா மதங்களையும் மனிதன் தன் அறிவால் அளந்து தெரிந்து தெளியட்டு மெனச் சமரச பாவனையைத் தர்மமாக நிலைநாட்டினர். இவ் விந்து மதம் என்னும் சநாதன தர்மம் ஒன்று தவிர மற்றெல்லா மதங்களும் தத்தம் கொள்கைகளையே தாமதச் செய்கைகொடு பிடிவாதமாய் உளறுநிற்கும். ஆனால் நமது இந்து மதமோ, ஆன்மாவுக்குப் பக்குவம் வந்தபோது கண்டு தெளியும் என்ற கோட்பாட்டில், எல்லாச் சமயங்களும் தங்க ளளவில் நற்சமயமே யென்று கூறுநிற்கும். அதனால் சமயப் போராட்டத்தை யொழித்துப் பார்ப்பதே உபாஸகனுக்கு முக்கியகருவியாக விருக்கவேண்டு மானதுபற்றி, 'மந்தாகினி தந்தவரோதயனே' என்னும் சொற்றொடரைக் கவனிக்கும் போது, அதன் உண்மையை எவ்வளவு தூரமும் பரிசீலித்து அறியவேண்டுமோ அவ்வளவு தூரமும் பரிசீலித்துப் பார்க்க வேண்டு மென்பதற்காக, இவ்வளவு தூரம் விரிக்கலாயிற்று.

இம் முருகனது தோற்றம் ஏனைய கடவுளர்களது தோற்றம் போன்ற தல்ல.

"தேவர் முறையிட நின்வடி வீந்தனை செய்யபொரு
ளாவலி னேங்கிய தன்மையி னேனஃ தறிந்தனனால்
தாவரு மன்ன தனல் வளி யப்பு,கு, சார்த்தியதுங்
காவல் முறைபிற ழாவியல் காட்டிற்றுக் கண்மணியே."

—கண்மணிமாலை.

என்று காப்புச் செய்யுளின் விசேஷக் குறிப்பிலும், 18-வது மறைக்க ணுள்ள, 'விமலன் புதல்வா' என்னும் சொற்றொடருக்குக் கூறிய உரையிலும் சிறிது காட்டியுள்ளோமாயினும், ஈண்டு ஸவிஸ்தாரமாக எடுத்துக் கூறுவல். அதற்கு முன்னர் இவ் வுபாஸனா மூர்த்தங்கள் உள்ளதை யுணர்த்துங் கருவிகளாக மட்டுமே பயன்படுவன வென்பது தட்சிணாமூர்த்தி ஸ்தோத்திரத்துக்கு ஸுரேசுவராசாரியார் தமது மானஸோல்லாஸத்தில் கூறியுள்ள வியாக்கியானத்திற் கண்டு தெளியலாகும். இதுவே வேதாகமத் துணிபாம். இதுவே மந்திர சாஸ்திரங்கள் போதிப்பது. இதனாலேயே உபாஸகர்களது பக்குவத்துக்குத் தக்கபடி தேவதைகள் பல குறித்து வைத்தனர். அதனால் இதுவே இக் கந்தரநுபூதியின் துணிவும் என்க. இவ்வகையாக வேதாந்த சித்தாந்த மிரண்டுக்கும் ஸமரஸமாகவே முருகனது தோற்றமும் ஏற்பட்டுள்ள தென்பது தெரிய வரும். அத் தோற்றம் வருமாறு:—

ஒரே கடவுளென நின்ற சிவத்தை யாட்சேபிக்க ஒரு பிரஹ்ம புத்திரனாகிய தக்ஷன் ஏற்பட்டான். அச் சிவத்தின் இடத்தை நிரப்ப விஷ்ணு ஒரு முதலானான். இச் சிவ பரத்துவ வாதிகளுக்குத் தக்ஷி முதன்மைபெற்று நின்றனன். விஷ்ணு பரத்துவ வாதிகளுக்குத் தலைவ

ளுக முன் வந்த தக்ஷனுக்கும் ததீசிக்கும் ஸம்வாதம் நிகழ்ந்தது. ததீசியின் சொல் அவைக் களத்து ஏற வில்லை. தக்ஷ யாகமானது தக்ஷனுக்கே பிராணபத்தாக முடிந்தது. அவன் பக்கத்தினர்க்குத் தாங்க முடியாத துன்பத்தை அது அளித்த தென்பது சூரபத்மனது அரசியல் முறையி லிருந்து நாம் அறியக் கிடப்பது. இக்கதையை மேல் நடத் துவதற்கு முன்னர் இதனல் ஊகிக்கக் கிடப்பதையும் பார்த் துச் செல்லுவோம்.

இமயமலைக்கு வடக்கண் உள்ள மேரு மந்தரவாசிகள் விஷ்ணு பரத்துவ வாதிகளாய்ச் சூரியனை அவ் விஷ்ணு வின் அம்சமாக மதித்துப் போற்றி வந்தவ ரென்ப தும், அவர்களே தேவர்கள் (திவ்ய சக்ஷுஸ் வாய்ந்த வர்கள்) என்று தங்களைக் கூறிக்கொண்டார்க ளென்ப தும், இவர்கள் அம் மேரு வென்னும் ஆல்டாய் (பொன்) மலைப் பிரதேசத்தினின்றும் சென்று மேற்காசியா வெனத் தற்காலம் வழங்கும் ஐராணியம் (இரணியன் நாடு) காக்கேசி யம்(ஜாரதுஷ்டிரநாடு)முதலிய பிரதேசங்களிலிருந்த அஹுர் மதத்தவர்களை (அசுரர்களை)த் தம் ஆற்றலாலும் அறிவா லும் வென்று தங்கள் விஷ்ணுவே (ஆதித்யனே)பரமாத்மா வென்னும் மதத்தை ஸ்தாபித்து வந்தார்களென்பதும், மேருவுக்கும் இமயத்துக்கும் இடையிலிருந்த மனோவதி யில் அல்லது மனஸரோவார் ஏரிப் பிரதேசத்தில்—(பிரம னது மானஸ ஸரஸ்' என்பதும் இதுவே. இது இமயத்துக்கு வடக்கே திபேத்தில் பிரமபுத்திர நதி உற்பத்தியாகுமிடத் துளது.)—வசித்த வகுப்பினர் அஹம் பிரஹ்மவாதிகளாய்த் தங்களைச் சயிப்பா ரொருவரு மில்லாதிருந்தன ரென்பதும், இமயமலையின் தெற்கண் நின்று முதலில் இந்துஸ்தானம் கட லாயிருந்தபோது பிரிக்கப்பட்டுப் பின்னர் (அகஸ்தியர் கடல் குடித்ததன் பயனாக) ஆரியாவர்த்த மென்ற தேசம் உண்

டானதும் ஒன்ருகச் சேர்க்கப்பட்ட தட்சிண கண்டத்தவர்க ளான சிவபரத்துவ வாதிகள்—(இவர்கள், வடக்கு விந்தம், மேற்கு ஆப்பிரிக்கா, தெற்குக் கடல், கிழக்கு ஆஸ்திரேலியா வரை வியாபித்திருந்த கண்டத்தை யாண்டவர்கள். பின்னர் இமயம்வரைகைப்பற்றினவர்கள்)—இப்பிரஹ்மவாதிகளைத் தாக்கத் தொடங்கினுர்களென்பதும், இவர்களே அக்கினி யைச் சிவஸ்ரூபமாகக் கருதினவர்க ளென்பதும், அதிலிருந் தும்(தாக்கினதிலிருந்தும்) அப் பிரஹ்மவாதிகள் சிவபரத்து வத்தை ஒப்புக்கொள்ளவேண்டி வந்த தென்பதும், அக் கால த்திலிருந்து இப் பிரஹ்மவாதிகளால் பரமாத்மாவின் அம்ச கக்கொண்டாடப்பட்டு வந்த இந்திரனுக்குப்—(திபேத்தின் கீழ்ப்பாகமும் அஸ்ஸாமும் பர்மாவும் தற்காலம் சீனக்கடல் வரையுள்ள இந்துசீனப் பிரதேசமும் இவ்விந்திரக் கட்சியின ரது ஆட்சி ஸ்தலமாய் அப்போதிருந்ததென்க.)—பரத்துவ நிலை போயிற் றென்பதும், அப் பரத்துவ நிலையைக் காப் பாற்ற இப் பிரஹ்மவாதிகளுக்கு உதவி செய்த உபேந்திர (வாமன)வாதிகளானதேவர்களுக்கும்சாய்வு காலமேற்பட்ட தென்பதும், அதிலிருந்து அப் பிரஹ்மவாதிகள் சிவ பரத்து வத்தை ஒப்புக்கொள்ள வேண்டி வந்ததென்பதும், அப்படி முழுவதும் ஒப்புக்கொள்வதற்கு முன்புதான் தேவர்களது போதனையினுல் பிரஹ்ம புத்திரனுன தக்ஷன் இச் சிவபரத் துவ வாதிகளை வெல்ல முயற்சித்தா னென்பதும், அம் முயற்சியில் தானும் அழிந்ததோடு தனக்குத் துணை செய்த அத் தேவர்களுக்கும் இடுக்கண் விளைவித்தானென்பதும், இந்த ஸந்தர்ப்பமே நமது முருகன் அல்லது ஸுப்ரஹ்மண் யனது தோற்றத்துக்குக் காரணமானதென்பதும், ஆதிய விஷயங்களை முதற்கண் நாம் மனதில் வைத்துக்கொண்டால், இனி அம் முருகனது தோற்றமானது ஸமரஸத் தோற்ற மென்பது வெளியாகும். இத் தோற்றத்தில் பிரஹ்ம வாத

மாகிய வாசா வேதாந்த மதமும் பெறப்படுகிறது. அதற்குக் காரணம் மனேவதிப் பிரதேசத்தாரது கொள்கையை இச் சிவபாரத்துவ அல்லது உபாஸனு வாதிகள் உடன்படுத்திக் கொண்டதேயாகும்

உடல் தோற்றுவதற்கு வேண்டிய பஞ்சீகரண முறையைச் சூசிப்பித்துச் சிவத்தினின்றும் ஆறு புலிங்கங்கள் (தீப்பொறிகள்) தோன்றின. இப் புலிங்கம் வெளிப்பட்டதற்குக் காரணம் சிவத்தின் கோபம் ஆறுகை யாகும். அப் பொறிகள் ஜோதியாய் எங்கும் பரந்தன. அக்கினியும் வாயுவும் அவற்றைக் கொணர, அது அவர்களால் தாங்க முடியாத வெப்பமாய்ப் போக, அப் பொறிகள் கங்கையாகிய நீரில் இடப்பெற்றன. அக் கங்கையும் அச் சூட்டைத் தாங்க வியலாது கரைக்கண் ஒதுக்கவே, அப் பொறிகள் அருகிலிருந்த நாணற்காட்டில் புக, ஆறுருவங்க ளடைந்தன வென்பது புராணம்.

இதனுல் உடல் நிர்மாணத்துக்கு வேண்டிய பஞ்சபூதங்களும் அம் முருகன் உருவத்துக்கு ஆதாரமாயின வென்னும் கட்சியாளரது மதம் நிலைநாட்டப் பெற்றதாகும். எனினும், அருளின்றி இறைவன் செயல் கைகூடா தென்னும் சிவமதக் கொள்கையை யுணர்த்த, சிவ மதத்தினரோடு கலப்பதற்கு முன்னர் தாக்ஷாயணி யென்ற பெயரின் வளர்ந்து, கைலாஸ பர்வதத்தின்கண் வளர்ந்தோங்கிய சிவ மதத்தினர் அறிவிலும் உயர்விலும் பெருகுவதைக் கண்டு, அவர்களிடைப் பருவதராஜ குமாரி என்று தோன்றி, பின்னர்ப் பார்வதியாய் விளங்கி நின்ற உமை, அவ் விறைவன் கூறுகி நின்ற உடலைத் தொடவே, ஏகமாய், இறைவன், மாயை, அருள் என்னும் மூன்றுங் கலந்ததாயுள்ள ஒரு காட்சி எல்லார்க்கும் வெளியாயது. இக்காட்சியும் குழவித் தன்மை வாய்ந்து நின்றதால் எல்லாக் கட்சியினர்க்கும்

இன்பத்தை விளைத்ததாக, அகில உலகமும் இத்தோற்றத்தில் களி கொள்ளலாயிற்று. அதுமுதல் பழைமையாகிய சிவத்துக்கும் பகைமைத் தோற்றங் காட்டிய விஷ்ணுவுக்கும், இடையில் இன்பமானது பெருகத் தொடங்கியதால் இம்முருகனே உபாஸ்யனென்றும் காலவரதனென்றும் பல வகையினராலும் கொண்டாடப் பெற்றனன். இவ்வளவையும் பக்தகோடிகள் நன்கு உணருமாறே "மந்தாகினி தந்த வரோதயனே" என்றார் என்க.

இதற்கிணங்கவே உமையினால் ஒன்றுபடுத்தப் பெற்றவனென்பது தோற்றக் கந்தா வென்றும், நித்திய இளமையோடு தன்னைப் பார்க்க விரும்பும் ஒவ்வொருவரது மூலாதாரத்திலும் நாளைக்கும் தோன்றக் கூடியவனென்பது வெளிப்பட முருகா (இளையனே) என்றும், அருளுக்கு அவனே உறைவிடமென்பது தோற்றக் கருணாகரனே யென்றும் விளிகள் கொடுத்தார். முருகன் மூலாதாரத்துத் தோற்றுவானென்பதை,

"......................சூர்க்குடைந்த
காலத்தே தோற்றிய காட்சி பழைமையதா
ஞாலத்தே போகினும் நாடிய்வர்—மூலத்தே
ஆற்றுக் குழவிப் பருவத் தகலாத
தோற்ற மொளித்ததோ சொல்லுவாய்..."

—தூய்போநள்ாட்சி.

என்பதனால் அறியலாம்.

'மேற்சொன்ன வேதாந்த மதப்படி ஏஷணா த்ரயங்களை ஒழிக்கும் வழிகூறும் குருமூர்த்தம் நீயானதுபற்றி, இவ் ஏஷணைகளால் வருவதும், உண்மை யல்லாததும், அதே சமயத்து ஆச்சர்யத்தைத் தருவதுமான பாசக்காட்டை நான் எப்பொழுது விட்டு நீங்குவேன்; அதற்கான ஞானத்தை நீ என்று தருவாய் சொல்லுவாயாக' என்பது

தோன்ற, ‘ சிந்தாகுல...............என்று விடப்பெறுவேன் ’ என்றார்.

இவ் வுரைக்குறிப்புச் சற்று நீண்டுபோயினும் தத்துவ வுண்மைகளும், சில சரித்திர ஆராய்ச்சி யுண்மைகளும் பொதிந்து கிடப்பதனால் அறிஞர்கள் தள்ளாரென நம்பி அதனை அப்படியே நிறுவலாயிற்று.

பெண்களைத் தாயாக நினைக்க

சிங்கார மடந்தையர் தீநெறி போய்
மங்காம லெனக்கு வரந் தருவாய்,
சங்க்ராம சிகா வல சண்முகனே,
கங்கா நதி பால க்ருபாகரனே. 34

அந்வயம்

ஸங்க்ராம சிகா வல! சண்முகனே! கங்கா நதி பால! க்ருபாகரனே! சிங்கார மடந்தையரது தீ நெறியிற்போய் மங்காமல் எனக்கு வரம் தருவாய்.

பொழிப்புரை

தலைப்பு:—[மாதர்களிடத்துப் பழகுதல் இருநெறித்து. ஒரு நெறி தாயாகவும் பெண்ணாகவும் சகோதரியாகவும் பாவித்துப் பழகுதல்; மற்றொரு நெறி மனைவியாகவும் இன்ப மாதராகவும் கொண்டு பழகுதல். இவ் விரு நெறியிலும் முதல் நெறியே சுகமான நெறி யானதுபற்றி அந் நெறியிலேயே பழகும் மனப்பண்பைத் தனக்கு அளிக்கு மாறு முருகனைப் பிரார்த்தித்து அடைதற்கான மறை இது.] ஸ்திரீகளைத் தாய்க்கு ஸமானமாகக் கவுரவ புத்தியோடு நினைக்க.

செய்யுள் :—*யுத்தஞ் செய்ய வந்த சிகை வாய்ந்த மயிலை வென்று வாஹனமாக நடத்தும் வல்லமை வாய்ந்தவனே! வியாபக முகத்தோடு கூடியவனே! கங்கைக் கரையினர் 'பாலா' வென்று அழைக்க நிற்பவனே! கருணைக்கு உறைவிட மானவனே! தங்களை அலங்கரித்துக்கொண்டு காமவின்பம் தரும்புமாறு ஒழுகும் மாதர்களது சிற்றின் பாநுபவமென்னும் தீயநெறியிற் சென்று என் அறிவும் யானும் மங்கிவிடாத வண்ணமாக எனக்கு ஞான நெறி யாகிய பேரின்பாநுபவ வரத்தைத் தருவாயாக.*

## விசேடக் குறிப்புகள்

*பெண்களென்றும் தாயென்றும் தலைப்பிற் கூறியதாற் சகோதரிகளையும் குறிப்பிற் கொள்ளலாயிற்று. 'கண்டு கண்டிருப்பதல்லாற் கனவிலும் புல்லொணாதே.' என்றார் ஒரு பெரியார். பெண்களைத் தாயாக நினைப்பவர்க்குப் பொறியடக்கம் எவ்வளவு வேண்டுமென்பதைச் செளந்தர்ய லஹரியில் (தமிழ் நூலில் இம்மொழி பெயர்ப்புச் சரியாக வில்லை யென்பதைச் சில வருஷங்களுக்கு முன்பே 'தமிழர் நேச'னில் வெளிப்படுத்தியுள்ளேன்.) 95-வது சுலோகத்தில்,*

*"புராராதேர் அந்த: புரம் அஸி; தத: த்வத் சரணயோ: ஸபர்யா மர்யாதா தரல கரணாநாம் அஸுலபா." அதாவது "நீ திரிபுராந்தகனது அந்தப்புரத்தில் இருக்கிறாய்; அதனால் உனது பாதபூசை செய்யும் யோக்யதை சஞ்சல சித்தமுள்ளவர்களுக்கு முடியாத காரியம்"*

*என்று கூறியிருக்கிறார். அந்நூலுக்கு வடமொழியில் வியாக்கியானம் செய்துள்ள லக்ஷ்மீதரரும் 'அந்தப்புர ப்ரவேசம் சஞ்சல சித்தர்களுக்கு இல்லையென்பது பிரஸித்தம்' என எழுதியுள்ளார். நீதிவாக்யாம்ருதமானது 'நிச்சல சித்த*

முள்ள அந்தப்புர காவலராலேயே ஸ்திரீகளது அந்தப்புரம் பிரவேசிக்கத்தக்கது' என்று கூறுகின்றது. இதனால் மாதர்களோடு பழகுவோர்களுக்கு வேண்டிய மனோநிலை நன்கு குறிக்கப்படுகிறது. இம் மனோநிலையை மகாபாரதத்தில் கூறப்பெற்றுள்ள ஒரு சங்கதியினாலும் காணலாம். கர்ணன் குந்தியினால் பாண்டவர்களோடு சேருமாறு அழைக்கப்படுங்கால்,

"மடந்தைபொற்றிரு மேகலைமணி யுகவே
மாசறத் திகழு மேகாந்த
இடந்தனிற் புரிந்தே நானயர்ந் திருப்ப
எடுக்கவோ கோக்கவோ என்றான்"—வில்லிபாரதம்.

தனக்கும் துரியோதனனுக்கு முள்ள சிநேக பாவனையை விளக்க வந்த கர்ணன், தான் ஏகாந்த ஸ்தலத்தில் துரியோதனனது மனைவியோடு சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந்தபோது, தனக்குத் தெரியாமல் துரியோதனன் வந்ததை அவன் மனைவி கண்டு கூச்சத்தால் எழ, அவளது மடியைப் திழுத்து உட்காரச்செய்த முயற்சியில் தான் அவளது மேகலையை அறுத்துவிட, அம் மேகலை மணிகள் சிதறுண்ணவே, திரும்பித் துரியோதனனைக் காணச் சிறிது உள்ளங் கலங்கினனாகத், துரியோதனன் அக் கலக்கத்தை மாற்றத் தான் அம் மணிகளை எடுத்துத் தரவோ அல்லது கோத்துக் கொடுக்கவோ வென்று கேட்டான் என்று கூறி, அத்தகைய நண்பனுக்குச் சோற்றுக்கடன் கழிப்பதே தனக்குப் புகழும் கருமமு மென்று கூறினானென்ப. இவ்விடத்துப் பிறன் மனைவியோடு அவளது கணவனும் ஒப்பப் பழகும் உரிமையைக் கர்ணன் பெற்றிருந்ததற்குக் காரணம் அவனது நிச்சல சித்தமே யென்பது நன்கு வெளியாகும். அதனால் மடந்தையரிடத்துப் பழகுங்கால் காம நினைப்பின்றிப் பழகுவதே சமூகச் சிறப்புக்கும் தனி மனிதச் சிறப்

புக்கும் பெருமையைத் தருவதென்பது வெளியாகும். ஒரு திருஹத்து யான் சிறு வயதிற்பழகி வருங்கால் அவ் வில்லக் கிழத்தியாகிய ஒரு யுவதி 'இங்கு வந்து ஊர்க்கதை யெல்லாம் களகளவென்று வேடிக்கையாகப் பேசிப் போகிறவர் களங்கமற்ற மனதுள்ளவர்' என்று சொல்லிக்கொண்டிருந்ததை யானே அசதியிற் கேட்டு ஆநந்தித்திருக்கிறேன். அதனால், மாதரைத் தாயாக நினைப்பதனால் வாக்கும் மனமும் தாராளமாக ஓடுவதும், போதப் பொருள் பறிக்கப்படாமலிருப்பதும் அநுபவத்தில் காணலாம். சற்றுக் களங்க புத்தி அம் மனதுக்கு வந்தாலும் அவ்வெண்ணம் மாறும் வரை வாக்குத் தடைபடுவதும், மனங் கனத்து வெடிப்பதுபோல் காணுவதும் உலக இயற்கை. ஆனது பற்றித் 'தீ நெறி போய் மங்காமல் எனக்கு வரந்தருவாய்' என்றார்.

" நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்துக்
கொண்ட கருவளிக்குங் கொள்கைபோல்—ஒண்டொடீஇ
போதந் தனங்கல்வி பொன்றவருங் காலத்து
மாதர் மேல் வைப்பர் மனம் "

என்ற ஔவை வாக்கும் ஈண்டு கருதத் தக்கது.

சிகா வென்னும் சொல் கொண்டை எனப்பொருள் பட்டு அக் கொண்டையை யுடைய மயிலுக்கு ஸங்க்ராம என்னும் அடையினால் இலக்கணையால் வந்தது. ஷண்முகனே என்பதற்கு வியாபக முகனே எனப் பொருள் கொண்டார், ஆறு தாரங்களிலும் வியாபித்து விளங்குவோனதுபற்றி. கங்காநதி பால வென்பதற்குக் கங்காநதிக் கரையினர் பாலா வென்றழைக்க வந்தவனே என்பது புத்துரையாகக் காணலாம்.

கங்கை பெற்றெடுத்த புத்திரனே யென்பதினும் இதுவே சிறந்த வுரையாகும். ஒரே பரமாத்மாவை சூரிய

ரூபமான விஷ்ணுவெனப் பாவித்த மேருவாசிகளும், இந்திர ரூபமான பரமேசுவரனென அல்லது பரப்ஹ்மமெனப் பாவித்த மனோவதி வாசிகளும், முதலில் லிங்கரூபமாக வெண்ணிக் கண்டு பின்னர் அக்கினி ரூபமான சிவனெனப் பாவித்த தெற்கிமய வாசிகளும், தம்முள் மாறுபட்டுச் சீர் குலைந்து நின்றபோது, அவ் விமயத்தின் தெற்குச் சரிவிற் பெருகியோடும் கங்கைக் கரையில் இம் முருகன் (வடநாட்டார், பாலாஜீ, என்பர் இவனையே) என்ற நன்மூர்த்தம் தோன்றி, அக் காலத்திருந்த உலகடங்கலுக்கும் இன்பத்தை யளித்த காரணத்தால் கங்காநதி பால என்று உபசார வழக்காகக் கூறினார். அதன் விரிவை 33-வது மறையின் விசேஷக் குறிப்பிற் கண்டு தெளிக.

"கடுவோ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள்ளணி நீள்கொடிச் **செல்வனும்**, வெள்ளேறு
வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோள்
உமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்
மூவெயில் முருக்கிய முரண்மிகு **செல்வனும்**;
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
யெருத்த மேறிய திருக்கிளர் **செல்வனும்**,
நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
உலகங் காக்குமொன்று புரிகொள்கைப்
**பலர் புகழ் மூவருந் தலைவராக**
**ஏமுறு ஞாலந் தன்னிற் றோன்றி**
.........................................
.........................................

உறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மா
ரந்தரக் கொட்பினர் வந்துடன் காண
..........................................."

—திருமுருகாற்றுப்படை.

என்னும் அடிகளால் சூசிப்பிக்கப்பட்டு நிற்பதும் அது. நக்கீரர் இதனை ஆவினன் குடியினது பெருமையை யுணர்த்தக் கூறினரேனும் அதில் பொதிந்துள்ள முருகனது சிறப்பு மேற் சொன்ன விஷயங்களையே விளக்குவ தறிக.

## சரீர வாஞ்சை ஒழிக்க

விதிகா ணுமுடம்பை விடா வினையேன்
கதிகாண மலர்க்கழ லென் றருள்வாய்
மதி வா ணுதல் வள்ளியை யல்லது பின்
துதியா விரதா சுர பூபதியே. 35

### அந்வயம்

மதி வாள் நுதல் வள்ளியை அல்லது (மற்றொருவரைப்) பின் (சென்று) துதியா(த) விரதா! ஸுர பூபதியே! விதி காணும் உடம்பை விடா வினையேன் கதி(யைக்) காண (நின்) மலர்க் கழல் என்று அருள்வாய்?

### பொழிப்புரை

தலைப்பு:—[சரீரத்தில் உள்ள பற்று அற்றாலன்றி மூவாசையையும் ஒழித்த பயன் கைக் கெட்டா தாதலின், இச் சரீரவாஞ்சையை ஒழித்து முத்தியைப் பெறக் கூறிய மறை இது.] சரீர அபிமானத்தை முற்றும் ஒழித்து நிற்க.

செய்யுள்:—பிறைச் சந்திரனை யொத்த ஒளி பொருந்திய நெற்றியையுடைய வள்ளி நாச்சியாரை யல்லாமல் வேறொருவரிடத்தும் பின் சென்று புகழாத விரதத்தை

யுடையவனே! (சந்திர மண்டலத்திற் கூடிப், பிரிந்து காட்டும் வல்லியை யன்றி மற்றொன்றைப் பின்றொடர்ந்து புகமாத விரத முள்ளவனே!) தேவ வுலகத்துக்கு நாயகனே! ஊழின் வசமாய் எனக்குத் தோன்றிய உடலினிடத்துள்ள அபிமானத்தை விட்டுவிடாத கர்மடனாகிய யான் உனது பத ஸாயுஜ்ய மாகிய நற்கதியைப் பிரத்தியட்ச அநுபவமாகப் பார்க்க (உனது) மலர் போன்ற பாதங்களை எப்பொழுது என் சிரத்திலும் நெஞ்சிலு மிருக்குமாறு அருளப் போகிறாய்? (நான் அதி தீவிர பக்குவமுடையே னாதலின் இப்போதே கொடுத்தருளுக என்று கேட்டுக்கொண்டபடி.)

## விசேடக் குறிப்புகள்

“ அற்றது பற்றெனில் உற்றது வீடதை யாரறியார்
உற்றமுவ் வாசை யொழிந்த விடத்துந் தகவொழிமோ
பற்று முடல்நசை விட்ட தெனிற்பக ரேந்துவரும்
கற்றவ ரேத்திறை காலனுஞ் செய்வதென் கண்மணியே ”

—கண்மணிமாலை.

என்றபடி, மண், பெண், பொன் என்னும் முப்பொருளிடத்தும் ஆசையை யொழித்தாலும் இவற்றிற்கெல்லாம் மூல காரணமான சரீர அபிமானம் ஒழிந்தாலன்றி மற்ற ஆசைகளெல்லாம் பின்னரும் ஒருவனைச் சூழ்ந்து பற்றிக்கொள்ளும். ஆனதுபற்றி அம் மூல வாசையையே முற்றவும் ஒழிக்கவேண்டு மென்பதை வற்புறுத்தவே, “சரீரவாஞ்சை ஒழிக்க” என்னும் தலைப்புக் கொடுத்தார். இச் சரீரத்துக்கு இம்மி யளவு சுகத்தைக் கொடுத்துக் காட்டினாலும், அது கருவியாகக் கொண்டு, பல வித சுகங்களையும் இவ்வுடல் அபேக்ஷியாநிற்பது அநுபவ சித்தம். அதனால் சுகம் எதிர்ச்சையாய் அவ் வுடலுக்கு ஏற்படும்போது, மனம் அதனிடத்துப் பற்றாமல், அது அநுபவித்த சுகத்தின் அளவுக்குத் தவநிலையில் அந்த வுடலை வருத்தவேண்டியது ஒவ்

வொரு மனிதனுக்கும் முக்கிய கடமை யாகும். இல்லையேல் ஒரு சுகத்திலிருந்து மற்றொரு சுகமாகத் தேடத் தொடங்கிச் சிறிது காலத்துக்கெல்லாம் அவ்வுடல், அவனது மனோவிருத்தியைக் கெடுத்து, ஞானத்தின் துவாரா மோட்ச சுகத்தைப் பெறவொட்டாதபடி செய்துவிடும். இவ் வுடற் சுகத்தை நாடுபவர் செல்வரைப் பின் சென்று இச்சகம் பேசித் துதித்துச் சுயமரியாதையை யிழந்து நிற்பர். நமது முருகனும் அம் மாதிரி பின் சென்று துதிப்பதுண்டென இம் மறையில் அறியக் கிடக்கிறதே என்பார்க்குத் தெளிவுறக் கூறும் சமாதானம் இது :

முருகன் துதிப்பது யாரை என்று சற்றுப் பார்ப்போம். இத் துதி உடலுரு வெடுத்தார் எல்லாரும் புரிய வேண்டிய தொன்றாகும். மதிவாணுதல் வள்ளியை என்பதற்குப் பொதுவாக வள்ளி நாச்சியாரை யெனப் புராணப் படி உரை கூறினும், ஆண்டு ஓர் இரகசியம் உளது. இவ் வள்ளி அல்லது வல்லி, இடை பிங்கலை ஸுஷும்நை என்னும் மூன்று நாடிகளைச் சார்ந்த கொடியாம். இந் நாடிகள் நெற்றி அல்லது நுதல் ஸ்தானத்தில் வந்து கூடிப் பிரிபவையாம். இம் மூன்றும் ஒன்றாக மூலாதாரத்துக் காணப்பட்டன. பின்னர் இடையும் பிங்கலையும் வெளிப்புறமாக வந்து, வீணாதண்டைக் கத்திரிபோல் மாறி மாறிச் சுற்றி, இந் நுதலிடத்து (ஆக்ஞையில்) வந்து மறுபடியும் ஒன்று கூடின. ஸுஷும்நா நாடி (சுழுனை)யோ வீணாதண்டின் உட்புறமாக நேராக மேல் வந்து இவ் விடை பிங்கலையோடு கூடிற்று. இப்படிக் கூடியபிறகு இத் திரிவேணிகளில் இரண்டு (இடையும் பிங்கலையும்) வலது இடது நாசித் துவாரங்களிற் சென்று வெளிப்பட்டன. அதனால் இந் நாடிகள் உலக நாட்டத்திற் சென்று தொழில் புரியலாயின. ஆனால் சுழுனையோ ஒழிவிலொடுக்க முறையிற் பின்புறமாக மனோ மண்டலத்தைக்

கடந்து பூரண சந்திரன் ஒருநாளும் குறைவுபடாது விளங்கும் சந்திர களா மண்டல மாகிய ஸஹஸ்ராரத்துக்குச் சென்று, அங்குள்ள அமிர்தத்தைக் கடைந்து, அந்நிலை கைவந்த யோகியானவன் அவ் வமுதத்தைத் தானும் புசித்து உடல் முழுவதையும் நனைக்கவும் செய்தது. மூலாதாரத்தில் குழவிப் பருவத்துத் தோன்றிய முருகன் இவ் வல்லியைப் பின் சென்று துதிப்பது, உலகினர் தாமும் அவ் வண்ணமே துதித்து அங்குள்ள அம்ருதத்தைத் தாங்களும் புசிப்பதற்கே யாம் என்க. இவ் வகை முருகன் மூலாதாரத்துத் தோன்றுவதை முன்னர் 33-வது மறையின் விசேஷக் குறிப்பிற் கூறிய மேற்கோளிற் காண்க. இப் படிப் பின் சென்று துதிக்கும் முறையை விடுத்து, 'கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினும் கொடுப்பாரிலை' ராகிய மாந்தரைப் பின் சென்று துதிக்கத் தலைப்படுதல் முறையன்று என்பதை வற்புறுத்தவும், மாந்தர்க்கு இயல்பாகவுள்ள துதிக்கும் பழக்கத்தை உபயோகிக்க வேண்டிய வழி இன்னதென்று உபாஸகர்களுக்கு வெளிப்படுத்தவும், 'மதிவாணுதல் வள்ளியை யல்லது பின் துதியா விரதா!' என்று கூறினார். மதிவாள் நுதல் என்ற விசேஷணத்தால் (வல்லி) வள்ளிக்கு, யுக்த முக்த த்ரிவேணியாகிய இடை பிங்கலை சுழுனைக் கொடிகளெனப் பொருள் கொள்ளலாயிற்று. இத் துதியி னுண்மையை யுணர்ந்து துதிப்பவர்க்கு வினையின் பயனாக விதிக்கப்பட்ட இவ் வுடம்பினிடத்து அபிமானம் ஏற்படாது; அப்படி ஏற்படினும் அதனை அடிக்கடி ஞானத்தினாற் கண்டித்து, அவ் வபிமானத்தை விட்டுவிடவேண்டுமென்று வற்புறுத்த வந்தவர் 'விதிகாணு முடம்பை விடா வினையேன்' என்றார். அவ்வினை, விடுதலைக்கான செய்கையா யிராது, பந்தத்திற்கான வினையாக நிற்பதென்பதைச் சுட்டியும், 'உடம்பை விடா வினை

யேன்' என்றதென்க. இவ்வுடம்பின் பற்றை ஒழிக்கத் திருவடி சாயுஜ்யமானது இன்றியமையாதது. ஏன்? உடல் பொருள் ஆவி என மூன்றையும் இறைவனிடத்து அளித்துச், சென்றது கருதாராய், நாளைச் சேர்வது நினையாராய், கண்முன் நின்றனவற்றைப் பிராரப்த போகமாக எண்ணிப் புசிப்பதற்கும், அப் புசிப்பினிடத்து மனப்பற்று வையாமல் பாலர், உன்மத்தர், பிசாசர்களது குணம் வருவதற்கும், மௌனமா யிருப்பது அவசியமாகும். அம் மௌனத்தி லிருக்கும்போது மனதுக்கு ஒரு பற்றுக்கோடு வேண்டும். அப் பற்றுக்கோடுதான் குருநாதனது ஞானத் திருவடியாகும். அத் திருவடியைப் பற்றிக்கொண்டு உலகப்பொருள்களினிடத்து நிராலம்பமாகத் தொங்குபவர்களுக்கே அருள் ஒழுகும் வழி புலப்படும். அவ் வழியைக் கண்டு அநுபூதி பெறுங்கால் தோன்றும் இன்பம் நித்தியமானதாகவும் வடித்தெடுத்த இன்பமாகவும் ஏற்படும். இவ் வின்ப மயமாக நின்று, மேலே சொன்ன அமிர்த மண்டல மதிக்குள்ளே புத்தியை நாட்டி, வாய்மடுத்து, அமிர்த வாரியைப் பருகி, அவ் வம்ருத வடிவமாகவே சித்த யோக நிலையைப் பெற்று, ஞானத்தை யடையவேண்டியதற்காக, இவ்வுடலை உலக சுகங்களில் அழுத்தித் துரபிமானத்தை அடையலாகாதெனக் கற்பிக்க வந்தவர், 'விதிகாணும்..........என்றருள் வாய்.' என்றார். இப் பத ஸாயுஜ்யம் ஸதேஹ முக்திக்கு ஒத்ததேயன்றி விதேஹ முக்திக்கு வேண்டியதன்று என்பது சிவாக்ரயோகி போன்றாரது மதமென்பதை அவரது சிவஞானசித்தியா ருரையில் தெளிவுறக் காணலாம்.

கடவுளைக் காண

நாதா குமரா நமவென் றரனார்
ஓதா யென வோதிய தெப்பொருள் தான்

வேதா முதல் விண்ணவர் சூடு மலர்ப்
பாதா குறமின் பத சேகரனே. 36

அந்வயம்

வேதா முதல் விண்ணவர் சூடும் மலர்ப் பாதா! குற மின் பத சேகரனே! அரனார், 'நாதா குமரா நம' வென்று (புகழ்ந்து), ஓதாய் என ஓதியது எப் பொருள்? (தான், ஆசை.)

பொழிப்புரை

தலைப்பு :—(நாத பிந்து கலாதீதமாய் மனம் வாக்குக் காயங்களுக்கு எட்டாது நிற்கும் வஸ்துவைப் பிரத்தி யக்ஷ அநுபூதியிற் காண உரைத்த மறை இது.] மனதை யும் வாக்கையும் கடந்து நின்ற வஸ்துவை அகக்கண் புறக் கண் இரண்டினாலும் பார்க்க.

செய்யுள் :—பிரஹ்மா முதலான தேவர்கள் தங்கள் சிரசில் தரிக்கின்ற மலரை யொத்த கால்களை யுடையவனே! குறவர் குடியில் வளர்ந்த மின்போலும் இடையையுடைய வள்ளி நாச்சியாரது பாதங்களைச் சிரமீது தரித்தவனே! (அல்லது சிவாகாரமாகிய கட்டிலில் நிற்கும் சிவையைப் போலச் சக்தி ஸ்வரூபமாய், ஸஹஸ்ரார த்தலத்தில் நிற்கும் வல்லியாகிய பராசக்தியின் பாதத்தைச் சிரஸா வஹிப்ப வனே!) சிவனார் 'நாதனே! குமரனே! நமஸ்காரம்' என்று துதித்துச், சொல்லச் சொன்ன பொருள் எது? [அதனைக் கூறவே உன் உண்மை ஸ்வரூபம் என் கண்ணெதிரில் படும் ஆனது பற்றி அதனைச் சொல்வாயாக என்றபடி.]

விசேடக் குறிப்புகள்

“ ..........................................

..................இமவான் மகட்குத்

தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன்
தமையன் எம் ஐயன்..................."

என்று திருவாசகத்திலும், 'தவளத்த நீறணியும் தடந் தோளண்ணல் தன் ஒருபால் அவள் அத்தனும் மகனும் தில்லையான்' என்று திருக்கோவையாரிலும் கூறியுள்ளபடி, சிவத்துக்கும் சக்திக்கும் உள்ள சம்பந்தம் மாயைக்கும் பிரஹ்மத்துக்கும் உள்ள சம்பந்தம் போன்றதானது பற்றியும்,

"நாளொடு கோளென நண்ணக்கலங்கிய நானிலத்தோர்
வேளென மூத்தபெருமாள் சிவம்சத்தி வேறுபல
ஆளென முன்மொழிந்து ஓதுமெலாம் ஒன்றின்அம்சமெனக்
காள மறைந்தென நீகூறிய பினர்க் கண்மணியே!"

—கண்மணிமாலை.

என்றபடி, சிவம் சக்தி, விநாயகன் வல்லபை, முருகன் வல்லி, பிரஹ்மா ஸரஸ்வதி, விஷ்ணு லக்ஷ்மி, என்பனவெல்லாம் பர ஸம்வித்தையும் பராசக்தியையும் குறிக்கும் பரியாய நாமங்களானதுபற்றியும், 'குறமின் பத சேகரனே' என்பதற்கு 'வல்லியாகிய பராசக்தியின் பாதத்தைச் சிரஸா வஹிப்பவனே' என ஒரு பொருள் கூறினோர். ஏன்? ஸௌந்தர்ய லஹரியில் நான்காவது சுலோகத்தில், 'உன்னொழிந்த தேவ கணங்களுக்கெல்லாம் அபயஹஸ்தம் வரத ஹஸ்தமென உண்டு. அவற்றைக்கொண்டு அத் தேவதைகள் பயத்தை நீக்குவதும் வரத்தைத் தருவதும் செய்கின்றன. உன் னொருத்திக்கே அத்தகைய கைகளில்லை. ஆனால் உனது உபய பாதங்களே எல்லாருக்கும் பயத்தைப் போக்குவதோடு வேண்டிய வரங்களையும் தந்தருளுகின்றன. அதனால், (அடைந்தவரைப் புரப்பவளே) உனது இரண்டு கால்களுமே நிபுணத்வம் வாய்ந்தவை.' என்றும், இரண்டாவது சுலோகத்தில், 'உனது சரண பங்கேருஹத்தில் உண்

டாகிற நேர்த்தியான தூளியைத் தியானித்துப் பிரமன் பரிபூரணமான லோகங்களை யெல்லாம் சிருஷ்டிக்கிறான்; சௌரி (விஷ்ணு) தனது ஆயிரந் தலைகளாலும் அவற்றைத் தாங்குகிறான்; அரனோ அவற்றை யழித்தபின் அவற்றின் சாம்பலைப் (புனர் சிருஷ்டியின் பொருட்டுப்) பூசிக்கொள்ளும் விபூதியைப் பகுத்தறிகிறான்.' என்றும் கூறியுள்ள காரணத்தால், முருகன் தனது சக்தியாகிய வல்லியின் பாதங்களைச் சிரசில் வகிப்பதற்கு உண்மைக் காரணம் இதனைப் படிப்போர்க்கு இனிது விளங்கும். மேலும் ஈண்டு உபாஸகர்கள் அறியவேண்டிய விஷய மொன்றுண்டு. குமாரக் கடவுளை உபாஸனை செய்பவர்கள் தேவி உபாஸனையையும் உடன் பெற்றுச் செய்வார்க்கு சிவ ஸ்வரூபத்தோடு சக்தி ஸ்வரூபமும் சற்று முன் பின்னாக வெளிப்பட்டுத் தரிசனம் கொடுப்பதுதான் முறை. முதலில் முருகனைத் உருவம் எனது படுக்கையருகிலும் பின்னர் என் சிரம் மீதும் நின்று, அதன் பின்னர் எனது நெஞ்சுக் கூட்டிலும் அமரக் கண்டயான், சின்னாட்களுக்கெல்லாம் நாற்பத்து முக்கோண ரூபமான ஓர் அறையில் பிந்து ரூபமான தலை யிட்டுள்ள ஒரு முக்காலியில் யான் அமர்ந்திருக்கவும், அங்கு பத்து வயதுடைய வாலைப் பெண்ணாக் என்னெதிரில் சக்தி தோன்றி,

"வாமப்பாலைப் பருக மறுவாலிபம் வருகக்
காமப்பா லுண்ணக் கண்டேன் மனோன்மணியே"

—மஸ்தான் ஸாகிபு பாடல்.

என்றபடி, எனக்குத் தனது வாமப்பாலை யளிக்கவும் கண்டுள்ளேன். அதனாலேயே,

"பத்து வயதுடைய பாவையினை யன்றோ நீ
சித்தர்க்கெல்லாம் தாயாய்ச் செய்தாய் மனோன்மணியே"

என்று அம் மஸ்தானே கூறியதும். இச் சக்தி தரிசன விரிவைக் கருவூரார் பூஜாவிதியிலும் பரக்கக் காணலாம். இம்

மாதிரியாக முருகனும் வள்ளியுமாகிய சிவம் சக்திகள் வெளிப்பட்டு நிற்பதை உபாஸகர் அறிவதற்கு உதவி செய்வது அரனுக்கு முருகன் செய்த பிரணவோபதேசமே யானது பற்றி, 'நாதா............ஓதாயென ஓதியதெப் பொருள் ?' என்று வினவினர். இனி அப் பிரணவத்தின் உண்மையையும் பார்ப்போம். இந்நூல் 20-வது மறையின் விசேஷக் குறிப்பில் தாரகன் என்னும் பதத்திற்குப் பொருள் கூறும்போது, ஓம் என்னும் பிரணவத்தினைப்போல உடல் உயிர் இரண்டும் தானகவே யிருந்து ரட்சிப்பவனென்று கூறியிருப்பதைக் கவனிக்க.

> " கூற்றழிக்கும் மறைய[illegible]ம் குடிலை [illegible]
> தோற்று மதுணர்[illegible] கண்மணிரோ
> நாதபிந்துவும் நவிலு[illegible] நாதமும்
> இலை[illegible] பிங்கலை யெனும் [illegible]த்
> தடையற அமர்ந்த வீணா தண்டும்,
> குகப்பெருமான் கரக் கூர்வேல் இலைமுகத்து
> அகக் குண்டலி நிமிர்ந் தமர வாய்ந்ததும்,
> பிரம ரந்திரப் பெருவழி திறப்பதும்,
> சுழுனைவார் தோற்றும் துளையமை தருவும்,
> தழுவு மகாரிலார் தாமவர்ப் பெறுவான்
> நாகவுருவின் நாட்டி யமைப்பதும்
> நாக லிங்க நிதானம் நவில்வதும்
> ஐந்தலை அரவின் அமைந்து நிற்பதும்
> ஆறுதலைக் கிடமாக வந்ததும்
> மாறில் வகை இன்னும் அநந்த மாகும் "

—திரு நான்மணி மாலை.

இதனால் ஓங்காரம் என்று சொல்லப்பெற்றுப், பிராணிகளில் யானை வடிவத்திலும், புஷ்பங்களில் கொன்றைப் பூவிலும், இயற்கைத் தோற்றமாக எல்லாரும் காண நிற்கும் இப் பிரணவமானது, சுவாதிஷ்டானந் தொடங்கி மூலா

தாரம் ஆறுக மேல் நோக்கி வளைந்து, மணிபூரக அநாஹத விசுத்திகளின் துவாரா ஆக்ஞையில் பிந்து போன்ற வடிவத்தோடு நிற்கும் (ஓ) தூல்தநுவாகவும், சுழுனை யடங்கியுள்ள வீணா தண்டில் மூன்று கிரந்தி ஸ்தானங்களிலும் ஒட்டியும், மற்ற ஆக்ஞா, அநாஹதம், சுவாதிஷ்டானம் என்னும் ஸ்தானங்களில் கொம்புபோல் நின்றும் (தலையுச்சியில்) ஸஹஸ்ரார ஸ்தானத்தில் பிந்துவைத் தாங்கின அறைச் சந்திரன்போலக் காணப்பட்டும் விளங்கும் சூக்கும தேகமாகவும் நிற்கின்றது. இனி இத் தனுக்கள் சரியான அளவில் அமைந்த பின்னர் அவற்றில் ஏற்படும் ஜீவசக்தியும் இப் பிரணவமே யாதல்பற்றித்தான் அது உடலும் உயிரு மென மேல் 20-வது மறையிற் கூறினா ரென்க. இனி இதனை அட்சர ரூபமாகப் பார்ப்பதை விடுத்து, வர்ண ரூபமாகப் பார்ப்பாரும் உளர். மேற்குறித்த அட்சர ரூப உணர்ச்சியே சிருஷ்டிக்கு ஆதாரமானது பற்றிப் பிரஹ்மனுக்கு உபதேச முறையாக ஓமெனும் தாரக ஒண் பொருளைச் சிவனுக்கு ஆமென மொழிந்து முருகன் அருட்குரு வானான். நிற்க, இப் பிரணவம் அகார, உகார, மகாரங்களா லானதென்றும், அம் மூன்று வர்ணங்களும் (1) புவனத்தில், அங்கம், உரம், முண்டம் என்னும் பாகங்களுக்கு முதலொலிகளாகவும் (2) ஸ்திதியில், அந்தத்வம், உக்ரத்வம், மனனத்வம் என்னும் பிரிவுகளுக்கு முதலொலிகளாகவும், (3) தேவதாம்சங்களில், (அ)ஸ்தாவர், உரகம், மனுஷ்யன் என்னும் மூன்றுக்கும் முதலொலிகளாகவும் (4) வித்தையில், அர்த்த வாதம், உபாஸனை, மந்த்ரம் என்னும் பிரிவுகளுக்கு முதலொலிகளாகவும் காணப்படுமென்றும், வடநாட்டு ஸந்யாஸி ஒருவராகிய புருஷோத்தம ஸ்வாமிஜீ என்பவர் தாம் செல்லும் இடங்கள் தோறும் பிரஸங்க பூர்வமாக எடுத்துரைப்பர். இனிப் பாகவதம் முதல் ஸ்கந்தத்துக்கு யான் கண்ட விசேஷ

உரை ஒன்றில், இவ் வோங்காரத்துக்குப் பல பொருள்கள் விஸ்தாரமாகக் கூறப்பட்டுள்ளன. தென்னாட்டிலும் சோளங்கிபுரம் அருணகிரி முதலியார் என்ற பெரியார் 'ஓங்கார விளக்கம்' என்று ஒரு பெரு நூலையே எழுதியுள்ளார். இவ்வகையாக உபாஸகன் ஒரு வட்டத்துக்குள் அமைக்கப் பெற்ற அறுகோணச் சக்காரத்தில் ஓம், ஹ்ரீம், ஸாம் என்னும் சக்தி பீஜஸுப்ரஹ்மண்ய பீஜ மந்திரங்களை எழுதி உபாஸனை பண்ணுவதால், சிவஸ்வ ரூபமாக முருகனும் சக்தி ஸ்வரூபமாக (வள்ளி) வாலையும் தோன்றுவதைப் பழுத்த பக்குவ முள்ளவர்கள் பூதக் கண்ணால் விட்ட குறையின் பயனாகக் காண்பதும், தநுவே யோங்காரமெனக் கண்டு அத் தநுவில் தலை கீழாகவோ நேராகவோ ஓங்காரம் ஸ்தூல சூக்கும தேகங்களில் அமைந்து கிடப்பதோடு அத் தநுவுக்கு ஜீவனாகவும் அவ் வோங்காரமே யமைந்து கிடப்பதை யோகிகள் யோகத்தால், தமது அகக் கண் கொண்டு காண்பதும், அர்த்த வாதிகளான ஞானிகள் தமது அநுமானாதிகளால் முப் புவனத்திலும், முஸ்திதியிலும், முத் தேவதாம்சங்களிலும் காண்பதும், அநுபவமாம் என்பதையே முருகன் சிவனுக்கு விளக்கினானெனக் காட்ட வந்தவர் 'ஓதாயென ஓதியது எப்பொருள்?' என வினா முகத்துக் கூறினார் என்க. இனி இச் சிவ சக்திகளே ஆறு ஆதாரங்களிலும் ஒவ்வொரு தொழிலை மேற்கொண்டு லாஸ்ய தாண்டவங்கள் செய்வதை ஸௌந்தரிய லஹரியில் 36-வது சுலோகத்திலிருந்து 41-வது சுலோக மீறாகக் கூறுமாற்றால், இச் சண்முகன் தனது ஆறுமுகங்களிலுங் கூட இச் சக்தியைச் சிரஸா வஹிப்பது வெளியாகுமானதுபற்றி, குறமின் பத சேகரத்வம், ஊடல் தீர்க்கும் நோக்கத்தோடல்ல வென்பது நன்கு வெளியாகும். அணிமாதி ஸித்திகளில் மயங்கும் மற்ற தேவர்கள் சிவஸ்ரூபமான குமாரக்

கடவுளது பாதத்தைச் சக்தி ரூபமாகத் தங்கள் சிரஸில் தாங்க, இவ் வஷ்ட சித்திகள் எவருடைய ஸந்நிதியில் நின்று தொழில் செய்கின்றனவோ அக் குமார சிவம் ஞான ஸ்வரூபமான சக்தியின் பாதத்தைத் தமது சிரஸில் தாங்கி நிற்பது இயற்கை யென உணரவும். சமீப காலத்திருந்த பெரிய முருக பக்தரும், புலவர் புராணம், தில்லை யாயிரம், அரங்கத் தாயிரம், இருபெருமா ளந்தாதி, முதலிய நூல்களெழுதியவருமான தண்டபாணி சுவாமிக ளென்ற முருகதாஸ ஸ்வாமிகள், தமது அறுவகை யிலக்கணத்தில் இவ் வுருவக் காட்சி ஸ்வப்ந ஸாத்திய மானவுடன் உபாஸனை முடிந்ததாக வெண்ணுவது தவறென்றும், அக் காட்சிகளை ஜாக்கிரத்தில் காணப்பெற்றவனே பூரண ஸித்தி பெற்றவ னுவானென்றும் கூறியுள்ளார். அதுவே என் ஸ்வாநுபூதியுமாம். மூன்று தலை முறையாக மந்திர சாஸ்திரப் பயிற்சியிலேயே ஈடுபட்டு நின்ற குடும்பத்திற் பிறந்து, அம் மந்திரஸித்தியிற் றேறிய யான் கண்டது, இருவினை யொப்பும் மல பரிபாகமும் ஏற்படாத உடல்களுக்கு ஸ்வப்நஸித்திக்கு மேல் ஏற்படுவதில்லை யென்பது. அதற்குக் காரணம் அவர்களது மனம் பழுக்காமையும் எவ்விஷயத்திலும் உதாஸீன புத்தியோடிருக்க அறியாமையுமே யாம்.

### தனது அகந்தையை ஒழிக்க

கிரிவாய் விடு விக்ரம வேலிறையோன்
பரிவார மெனும் பத மேவலையே
புரிவாய் மனனே பொறையா மறிவால்
அரிவா யடியோடு மகந்தையையே. 37

### அந்வயம்

கிரிவாய் விக்ரம வேல் விடும் இறையோனது பரிவார மெனும் பதத்தை மேவலைப் புரிவாய் (ஆகும்) மனனே!

அகந்தையைப் பொறையாம் அறிவால் அடியோடும் அரி வாய். (ஏ இரண்டும் அசைகள்)

(அல்லது)

மனமே! கிரிவாய் விக்ரம வேல் விடும் இறையோன் பரிவாரம் எனும் பதம் மேவலையே! (அது) புரிவாய். (அற் றேல்) அகந்தையைப் பொறையாம் அறிவால் அடியோடும் அரிவாய். (ஏ, அசை.)

பொழிப்புரை

தலைப்பு :—[பதிபோதத்தில் பசுபோதத்தை யொழிக்க வேண்டியதற்காகக் கூறிய மறை இது.] தான் என்னும் கர்வத்தைவிட்டு நிற்க.

செய்யுள் :—(கிரௌஞ்ச மலைமீது அல்லது, சிரமாகிய மலையின்மீது) தனது வெற்றி பொருந்திய வேலைச் செலுத்துகின்ற இறைவனாகிய முருகக்கடவுளது பக்த கோடிகளில் ஒருவன் என்னும் ஓர் பதவியை யடையவேண்டியதற்கான உபாஸனையைச் செய்யும் மனமே! (அப் பதம் உனக்கு நிலைத்திருக்க வேண்டுமாயின்) தான் என்னும் கர்வத்தைப் பொறுமை என்னும் ஞானவாள் கொண்டு ஸமூலமாக அறுத்து எறிவாயாக.

அல்லது

மனமே! கிரியின்மீது வெற்றி வேலை விடும் முருகக் கடவுளது கூட்டத்திற் சேர்ந்தோம் என்னும் பதமகிமையை நீ (இன்னும்) அடையவில்லையே! (இன்னே! முருக பக்தர்களில் ஒருவனாவதற்கு வேண்டிய உபாஸனையைப்) புரிவாயாக. (அப்படிப் புரிந்தால்) பொறுமையாகிய அறிவு கொண்டு உனது அகந்தையை வேரோடு அழிக்க வல்லவனாவாய்.

## விசேடக் குறிப்புகள்

ஸ்வானுபவ மில்லாதார் உரைகள் பொருளை விளங்கக் கூறுவன வல்ல. இம் மறைக்கு இரண்டு வழியாகப் பொருள் கொண்டதற்குக் காரணம் வருமாறு: முருக பக்தி செய் யும் உபாஸகர்களுக்குச் சில சமயங்களில் கர்வம் ஏற்படு வது ஸஹஜம். அக் கர்வத்தை ஒழித்தாலன்றி அவ் வுபா ஸனையின் பூரண பலன் அவ் வுபாஸகர்களுக்குக் கிடைக் காது. ஆனதுபற்றி, உபாஸனை செய்யப்புகுந்த மனமே! அவ் வுபாஸனையால் மட்டும் எல்லாவற்றையும் ஸாதித்து விடலா மென்று எண்ணுமல் முருகனது அருள் எப்படி ஒழுகுவ தென்பதைப் பொறுமையோடு காத்திருந்து கண்டு அக் காட்சியால் பெறும் பயனை அடைவதற்குமுன்னர் உன்னுடைய அகந்தையால் வரும் இடையூறுகளை யெல்லாம் தவிர்ப்பதற்காக, அருள் ஞானத்திஞல், உன்னிடத்துக் கதித்துத் தோன்றும் யான் எனது என்னும் செருக்குகளை யற வொழிப்பாயாக.' என்று இம்மறை உபதேசித்தபடி. மற்ருெரு உரைப்படி, "மனமே!

'எனக் கெனச் செய லொன்றிலே; யாவு மிங் கொருநின்,
றனக்கெனத் தகு முடல் பொருள் ஆவியுந் தந்தேன்;
மனத் தகத்துள வழுக்கெலாம் மாற்றி யெம்பிரான் நீ
நினைத்த தெப்படி அப்படி யருளுதல் நீதம்.'

என்ற பெரியார் வாக்கின்படி முருகனது பரிவாரத்தொரு வனுன காரணத்தாலேயே நாம் எண்ணிய கருமங்களை முடி க்க வல்லோ மாஞேமே யன்றி நமது சொந்த அறிவாலன் றென்று அறியாமலும், அம் முருக பக்தன் என்னும்நிலையை யடையாமலு மிருப்பது தகுமா? உடனே அந்த நிலையை அடைவதற்கான உபாஸனையைப் புரிவாயாக. அப்படிப் புரிந் தால் 'வைவேல் விடுங்கோன் அருள் வந்து தானே உமக்கு வெளிப்படுமே' என்பதுபோலப், பொறையும் அப்பொறை

யால் வரும் ஞானமும் உனக்கு மெய்த்துணையாக வர, நீ "யாங்களே கடவுள் என்றிடும் பாதகத்தவர்களது பழிப்பு நிலையை யடையாது, உண்மைத் தெய்வ நிலையைப் பெற்று அகங்கார மமகாரங்களை ஒழிக்க வல்லவனுவாய்." என்று மனதுக்கு உபதேசித்த தாகும். இரண்டு பொருள் களிலும் ஸர்வதந்திர ஸ்வதந்திரனுகிய உபாஸனு தெய்வத் தினிடத்துத் தன்னைப் பூரணமாக ஒப்புக் கொடுத்துவிட்டு 'வான்பார்க்கும் பைங்கூழ் போல் வாளா நினதருளே நான் பார்க்க நீ பார்த் தருளினுய்' என்ற நிலையில் நிற்பவர்களுக் குத்தான் அருள் பழுத்த ஆனந்தக் கட்டிப் பேறு கிடைக்கு மென்பதை வற்புறுத்திக் காட்டியுள்ளது உணர்க. 'விக்ரம வேள் இமையோர்' என்ற ஒரு பாடமும் காணப்படுகிறது. அப் பாடாந்தரத்திற்கு (வேலைக்) கிரிவாய் விடு விக்ரம வேளி னது தேவக்கூட்ட மெனும் பதத்தை எனப் பொருள் கொள்ளலாகும். அப் பாடம் சிறப்பின்ருயினும் அப்படி யொன்றுள தென்பதை எடுத்துக்காட்ட அதை ஈண்டுக் கூறியதென்க.

## பிசாசம் ஒழிக்க

ஆதாளியை யொன் றறியேனை யறத்
தீதாளியை யாண்டது செப்பு மதோ
கூதாள கிராத குலிக் கிறைவா
வேதாள கணம் புகழ் வேலவனே. 38

### அந்வயம்

கூதாள கிராத குலிக்கு இறைவா! வேதாள கணம் புகழ் வேலவனே! ஆத(ம்) ஆளியை, ஒன்று அறியேனை, அறத் தீ(தினை யே) ஆளியை (நீ) ஆண்டது செப்பும் (தரத்து) அதோ?

## பொழிப்புரை

தலைப்பு :—[வேதாள கணங்க ளெல்லாம் புகழும் பெருமை வாய்ந்த முருகக் கடவுளைத் துதித்ததனால் உபாஸகனுக்கு ஒரு பிசாசை ஓட்டுவது எளிது என்பதைக் காட்ட வந்த மறை இது.] ஒருடலையும் உயிரையும் பற்றி வருத்தும் பேய், பிசாசு, பூதம், பிரேதம், பிரஹ்மராக்ஷஸ் முதலியவற்றை ஓட்ட.

செய்யுள் :—கூதாள மலரை யணியும் வேடகுலத்தில் வளர்ந்த வள்ளியாகிய சக்திக்கு நாயகனே! பூதம், பிரேதம், பிசாசம், பிரஹ்மராக்ஷஸ் என வகைப்படுத்துக் கூறப்பட்ட வேதாள கணங்களெல்லாம் ('எங்களுக்கு வேண்டும் போதெல்லாம் ஊனும் நிணமும் நெய்த்தோரும் தரவல்ல போர்க்களத்தைக் காட்டவல்ல வீரா' வென்று) புகழ்ந்தேத்துகின்ற வேலாயுதனே! மூடத்தனத்தால் ஆட்கொள்ளப்பட்டவனும், ஒரு விஷயமும் அறியாதவனும், முழுவதும் கெடுதல்களையே கையாண்டு நிற்பவனுமாகிய என்னை நீ ஆட்கொண்டு நிற்கும் தன்மை சொல்லும் தரம் வாய்ந்ததாகுமோ?

## விசேடக் குறிப்புகள்

ஸுப்ரஹ்மண்ய மஹாமாலா மந்திரத்தில் இவ் வேதாள கணங்களைப் பூத, ப்ரேத, பிசாச, ப்ரஹ்ம ராக்ஷஸங்களென்று வகுத்துக் கூறப்பட்டுள்ளது. பூத மென்பதனைப் பூத நாடிக்கு ஆதாரமான அதிதேவதை யென்பர். இதுவே சில தேகங்களில் அடிக்கடி ஸ்வப்ந ரூபமாக வெளிப்பட்டுக் காண்பது. ஜாக்கிரத்தில் சில ஸ்திரீகள் தங்களுக்குத் திருப்தியாக இச்சைகள் கூடி வராத காரணத்தால், பிதற்றுவது, தலை சுற்றுவது, பேயாடுவது, துணிகரமாகச் சமூக நிலையி லுள்ளவர் பயப்படத்தக்க விபரீத காரியங்களைச்

செய்வது முதலியவற்றுக் கெல்லாம் இப் பூத நாடியே காரணம். இதனை ஆங்கிலர் (Hysterics) ஹிஸ்டரிக்ஸ் என்பர். இப் பூதநாடி வாய்ந்தவர்களுக்குத் தம் மொத்த பூத நாடி வாய்ந்த பிறரை நட்புக் கூட்டுவது சிறந்த பலனை யளிக்கும். இனிப் பிரேதம் என்பது செத்தாரது சவத்தினின்றும்வெளிவந்து அச் சவம் உயிரோடிருந்தபோது பெற்றிருந்த கேவலப் பண்புகளை யெல்லாம் கையேற்றுத் திரியும் ஆவியாம். அவ் வாவிக்கு வேண்டிய பிரீதியை அறிந்து செய்தால் அது நீங்கு மென்ப. பிசாசம் என்பது மாமிச இச்சை வாய்ந்ததோர் ஆவி. இவ் வாவிக்கு ஊனுணவு பலியாகக் கொடுப்பதனாலும், இப் பிசாசத்துக்கென ஒரு தலத்தை அல்லது ஊர்ப்பொதுவிலுள்ள முதுமரம் போன்ற ஓர் இடத்தை நியமித்து அங்கே இருத்திக் காலாகாலங்களில் பலியிட்டு வருவதாலும், அதன் ஆற்றல் ஒழியும் என்ப. பிரஹ்மராக்ஷஸ் என்பது உடலோடிருந்தபோது வேண்டிய அறிவைப் பெற்றிருந்த உயிர், அவ் வறிவை மற்றவர்களுக்குப் புகட்டாதொழிந்த காரணத்தாலும், அவ் வறிவைப் பிறனொருவனுக்குப் புகட்டுவதற்குமுன் உடலையிழந்த காரணத்தாலும்,அவ்வறிவைப் புகட்டும்வரை தான் கொண்டிருக்கும் ஆவிநிலை. பதஞ்சலியினிடத்துப் பாணினி வியாகரணத்துக்கு மஹாபாஷ்யம் கேட்டு, வகுப்பு நடந்து கொண்டிருக்கு மிடையில் பாடத்தை விட்டுவிட்டுப்போன குற்றத்திற்காகக் கௌடபாதர் ப்ரஹ்மராக்ஷஸாகப் போகுமாறு சாபம் பெற்றதும், பின்னர் அப் பதஞ்சலி மஹாபாஷ்யத்தைச் சந்திரசர்மனென்னும் கோவிந்த முனிக்கு உபதேசம் செய்து பழைய தன்னுருப் பெற்றதும் உலகம் அறிந்ததாம். இத்தகைய வேதாள கணங்களைப் பற்றி ஈண்டுச் சில வுண்மைகளைக் கூறி மேற்செல்வல். "தெய்வமுள தென்பார் தீய செயப்புகின் தெய்வமே கண் இன்று

நின்றொறுக்கும்; தெய்வம் இல தென்பார்க்கு இல்லை.'' என்றபடி ஒருவனுக்குத் தெய்வ நம்பிக்கை இருக்குமாயின் இப் பிசாச கண நம்பிக்கையும் இருந்தே தீரவேண்டும். ஏனெனின், தெய்வம் பிசாசு என்பன துவந்துவ நிலையாம். ஒன்று நன்மைக்கும் மற்றொன்று தீமைக்கும் காரணமென்று கருதுவது உலகவியற்கை. இதை முன்னிட்டே ஜாரதுஷ்டிர மதத்தினர் நன்மைக்கெல்லாம் ஒரு கடவுளும் தீமைக்கெல்லாம் மற்றொரு கடவுளும் உளரென்றும், இவ் விரு கடவுளரும் போடும் போராட்டத்தினாலேயே மாந்தர்க்கு நன்மை தீமைகள் உண்டாகின்றனவென்றும், முடிவில் நன்மைக் கடவுளே வெல்கின்ற தென்றும் நாளைக்கும் நம்புகிறார்கள். ஆங்கிலத்துத் (Spectator) 'திருஷ்டா' வென்ற பத்திரிகை யொன்று நடத்திய (Addison) அட்டிஸன் என்பாரும், பேய்களுண்டா வென்னும் கேள்வியை எழுப்பி, உண்டென்றும் இல்லையென்றும் துணிந்து சொல்லுவதற் கில்லையென்று பூர்வ பட்சப் படுத்திப், பின்னர் அப்படிப் பே யென்ப தொன்றிருப்பினும் அது ஸர்வ சக்திமானை கடவுளுக்குள் அடக்கமே யானது பற்றி, அக் கடவுளை யடுத்து உபாஸிப்பவர் இப் பேய்களுக்கு அஞ்சவேண்டியதில்லை யென்று சித்தாந்தப்படுத்திப் போந்தார். நம் மதத்திலும் க்ஷுத்ர தேவதைகள் என்று கூறப் பட்ட இவ் வேதாள கணங்களுக்குக் காலமும் இடமும் வகுத்து இன்ன இன்ன தேவதைகள் இன்ன இன்ன காலத்திலேயே தோன்றுமென்றும், இன்ன இன்ன இடங்களிலேயே தோன்றுமென்றும் கூறி, அத்தகைய சிறு தேவதைகளை யடக்குதற்காக நல்ல பெருந்தன்மையும் பலமும் வாய்ந்த உயர்ந்த தேவதைகளை எடுத்துக் காட்டி, அவற்றிற்குச் சக்கரம், அட்சரம், பூஜை, பிரயோகம் முதலியவற்றை நியமனஞ் செய்து, மந்திர ரத்நாகரம், மந்திர மஹோததி

போன்ற தந்திர நூல்களை ஏற்படுத்தியுள்ளார்கள். இவ்வுலகப் பெருந்தேவதைகளைத்தான்' 'ஆதித்யம் அம்பிகாம் விஷ்ணும் கணநாதம் மகேசுவரம், என்று வரையறுத்துக் கூறியது. மேலே சொன்ன ஐந்தையும், அவ்வைந்தின் அம்ச, அவசர, அவதாரங்களையும் பூஜிப்பவர்களுக்கு இச் சிறு பூதங்களை யடக்கி யாளும் வன்மை யுண்டாகுமென்பது வேத மதம்; அது தந்திர மதமு மாகும். இம் மதப்படியே காலையில் பைரவன் காவல் என்பதும், நள்ளிரவில் காளி காவலென்பதும், ஸந்திகளில் ஐயனார் காவலென்பதும் முதலிய அமைப்புகள் ஏற்பட்டன. இத் தந்திர மதத்தின் படி ஸர்வ சக்திமானான மகேசுவரனது அம்சங்களும் அவஸரமு மானவர்கள் கணேசனும் ஸுப்ரஹ்மண்யனு மாவர். கணேசன் ஞானத்துக்கும் உலக சுகத்துக்கும் எவ்வளவு உபயோகமுள்ளவனோ, அதைவிடப் பதின்மடங்கு பக்த கோடிகளைத் தடுத்தாட்கொண்டு ஸர்வ ஜன ரட்சகஞ் செய்வதில் முருகன் வல்லவன். ஆனதுபற்றியே இம் மறையில் 'தீதாளியை யாண்டது செப்புமதோ' என்று கூறப்பட்டது. இனி இம் முருகோபாஸகர்கள் பொதுஜன நன்மைக்காகப் பல விஷயங்களையும் உணர்ந்து அவற்றை லோகோபகாரமாக உதவக் கடமைப்பட்டவர்கள். அவ் வுதவி, உபாஸகனது ஆற்றலுக்கும் மனவன்மைக்கும் ஏற்றவாறு வேறுபடும். ஒரு சிலர், ஜனசமூகத்தில் விபூதி போடுதல், குழையடித்தல், பால், எண்ணெய், மிளகு முதலிய மந்திரித்துக் கொடுத்தல் ஆதிய தற்கால உபசாந்திகளைச் செய்வதோடு நின்றுவிடுவர். வேறு சிலர் தந்திர சாஸ்திர நல்லுணர்ச்சி பெற்று, தாயித்துக் கட்டுதல், பூஜா யந்திரங்கள் அமைத்துத் தரல், கோயில்களில் விக்கிரஹ ஸ்தாபனங்களுக்கான கிரியா ஜபங்களைச் செய்து தரல் இவற்றோடு நிற்பர். பரந்த உள்ளமும் விரிந்த உணர்வுமுள்ள அருணகிரி போன்ற பெரி

யார் இத் தந்திரங்களிலுள்ள நுணுக்கங்களை யெல்லாம் பிறர்க் குரைத்துத் தந்திர சாஸ்திர உண்மைகளைப் பிறர்க்கு உபயோகமாக விளக்குவதில் காலங்கழிப்பர். இம் மூவரும் முறையே (Ritual, Mythology, Philosophy) கர்மம், உபாஸனை, ஞானம் இவற்றைச் சிருஷ்டிப்பவர்களாதலின், ஒவ்வொருவரும் தம்மளவில் உபகாரியே யாவர். இவருள் எவரும் தீய ஒழுக்கங்களுக்குள் புகார். புகுந்த அளவுக் குச் சக்தி குன்றுமென்பது அவர்களுக்கு நன்கு தெரியு மானது பற்றி, மந்திர சாஸ்திர வுணர்ச்சியோடு அத் தந் திரத்தை யநுஷ்டித்து வாழும் தவசிகள் எவரும் குற்சித நெறிகளிற் செல்லா ரென்க. இனி 'ஒன்று அறியேனை' என்பதைத் தாயுமானார்,

"எல்லா மறிந்தவரு மேது மறியாதவரு
மில்லை யெனு மிவ் வுலகமீ(து)
ஏது மறியாதவ னெனப் பெயர் தரித்து, மிக
வேழைக்கு ளேழையாகிக்
கல்லாத வறிவிற் கடைப்பட்ட நான் அன்று
கையினு லுண்மை ஞானங்
கற்பித்த நின் னருளினுக் கென்ன கைம்மாறு
காட்டுவேன், குற்றேவல்நான்,
அல்லார்ந்த மேனிகொடு குண்டுகட் பிறையெயிற்
ருபாஸ வடிவமான
அந்தகா நீ யொரு பகட்டாற் பகட்டுவ
தடாதடா காசு நம்பாற்
செல்லாதடா வென்று பேச வாயது தந்த
செல்வமே, சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே,
தேசோ மயா நந்தமே."

என்னும் செய்யுளில் அழகாக விளக்கி யிருப்பது காண்க. பொதுஜன நம்பிக்கையினுல் அல்லாமல், இப் பேயோட்டல்

உயிர்ப்பித்தல், வியாதியை நீக்குதல் முதலிய அற்புதங்கள் நடைபெறு வென்பதை உபாஸகன் நன்குணர வேண்டிய வனுதலாலும், அந் நம்பிக்கையிலும் காகதாளிய மது வென்பதை அவனது நியாயவுள்ள மவனுக்குத் தெளிவுற விளக்குவதாலும், எனினும் அருளானது இவனது ஆருகத் தெய்வ விச்சை நடைபெற வேண்டுமென்று அமைத்துள்ளதை இவன் மனமார அறிகிறுனுதலாலும், அப்படி இவனே (Medium) ஆருக அவ் வருள் நடத்துவதற் கேற்ற காரணத்தை இவனும் முற்றும் அறிய முடியாதபடி யிருப்பதனுலும், அவ் வகை யருள் இவன் துவாரா ஒழுகும்போதும் இவன் உலக செல்வந் தேடுவதோ அல்லது உலக சுகங்களை அனுபவிப்பதோ இவை போன்ற எவற்றையும் விட்டிராதிருப்பதைக் காண்கின்று னுதலாலும், இவ்வளவு உண்மைகளையும் உள்ளடக்கி 'ஆதாளியை ஒன்று அறியேனே, அறத் தீதாளியை' எனக் கூறினுர். இனி விரிப்பிற் பெருகுமென இதனேடு நிறுத்தலாயிற்று.

ஜனனம் எடாதிருக்க

மாவேழ் ஜனனங் கெட மாயை விடா
மூ வேடனை யென்று முடிந்திடுமோ
கோவே குறமின் கொடிதோள் புணரும்
தேவே சிவசங்கர தேசிகனே. 39

அந்வயம்

கோவே! குறமின் கொடி தோள் புணரும் தேவே! சிவ சங்கர தேசிகனே! மா ஏழ் ஜனனம் கெட, மாயை(யை) விடா(த) மூ ஏஷணை என்று முடிந்திடுமோ?

பொழிப்புரை

தலைப்பு :—[ஒருவன் சாகும்போது எதை நினைக்கிறுனே அந்த அந்திம ஸ்மரணத்துக்கு ஏற்றவாறு பிறக்கிறுன்

என்னும் சுருதி வாக்கின்படி, மக்கள், விடுதலையாகிய கடை நினைப்பைச், சாகுந் தருவாயில் எண்ணிப் பிறவி நீங்கி ஒழி வதற்குப் போதிக்கும் மறை இது.] நால்வகைத் தோற் றத்து எழுவகைப் பிறப்புகளி லடங்கிய எண்பத்து நான்கு லட்சம் ஜீவ பேதத்தில் ஒன்றிலேனும் பிறவாதிருக்க.

செய்யுள் :—(அண்ட பிண்ட சராசரங்கள் அனைத் துக்கும்) நாயகனே! குறவர் குலத்து வளர்ந்த மின்னற் கொடி போன்ற வள்ளி நாச்சியாரது தோளை (சத்தியை)த் தனதாக் கொள்ளும் திவ்ய சக்ஷுஸ் வாய்ந்தவனே! மங்கல மான நற்காரியங்களையே செய்யும் குருமூர்த்தமே! பெருத்த ஏழ்வகைத் தோற்றத்திலும் யான் பிறவாதபடி, மயக்கத்தை விட்டொழியாத (தாரேஷணை, புத்ரேஷணை, அர்த்தேஷணை யென்னும்) மூன்று ஆசைகளும் எப்பொழுது எனக்குச் சற்றுமில்லாமற் போகும்? (நீ கூறுவாயாக.)

## விசேடக் குறிப்புகள்

அண்டஜம் (முட்டையிற் பிறப்பன) ஜராயுஜம்(பையிற் பிறப்பின) சுவேதஜம் (அழுக்கிற்றோன்றுவன) உத்பீஜம் (மண்ணைப் பிளந்து வெளிவருவன) ஆகத் தோற்றம் நான்கு வகையாம். இத் தோற்றங்கள் தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்னும் ஏழ்வகைப் பிறப்புக்குள் அடங்கு மென்பராயினும், தேவ ரென்ற பகுதி, அதன் பின்னர்க் கூறப்பெற்ற ஆறு பகுதியிலும் திவ்வியத் தன்மை பெற்றதனுல், மாந்தரால் பகுத்துணரப் படும் பேதமேயன்றி அத் தேவப் பிறவி தனிப்பட்ட பிறவி வாய்ந்த தல்லவென வுணர்க. இத் தேவப் பிறவி யென்பது ஒருவகைப் பரிணமமே யன்றி மேற்சொன்ன நால்வகை யோனிகளிலிருந்தும் பிண்டீகரித்து வந்ததாகச் சொல்ல வியலாது. ஏனெனில் அப்படி வந்ததென ஒப்புக்கொண்

டால், பிறவியெடுத்த ஒவ்வொரு உயிரும் தேவனெனும் அதிவியாப்தி தோஷம் வரும். அல்லது தேவப் பிறவியிலும் மற்றப் பிறவிக்கு ஏதுவான கர்மேந்திரிய உத்ஸர்க்க விஸர்க்கங்களைத் தூலவளவிற் கூறவேண்டி வரும். ஸ்தூல சரீரமில்லாத இத் தேவப் பிறவிக்கு அவை கூறுதல் தகாதானதுபற்றித் தேவ என ஏழாவது பிறவியாகக் கூட்டியெண்ணியது உபசாரமென்க. பின் சுருதிகளிலும் புராணங்களிலும், பிருச்னி மருத்துக்களைப் பெற்றாளென்றும், அதிதி, திதி என்னும் தேவாசுர மாதர்கள் பிள்ளைகளைப் பெற்றார்களென்றும் கூறப்பெற்றுள்ளதேயெனின், பிரத்தியக்ஷப் பிரமாணமே யன்றி மற்றும் பிரமாணங்களில்லையென்று வாதிப்பாருக்கு மற்றப் பிரமாணங்களுமுண்டு என்பதை விளக்கவும், ஈசுவரனது ஸர்வ சக்தித்துவத்தைக் காட்டவும், ஞானிகளால் உதாரணத்துக்காகச் சிருஷ்டிக்கப் பட்ட உபசார மொழிகளேயன்றி அவை உண்மையாக மாட்டா. அதே சுருதியிலேயே, ரிபுக்கள் மக்களாய்ப் பிறந்து சில அரிய கர்மங்களைச் செய்து தேவரானார் என்பது முதலிய வாக்கியங்களைப் பரக்கக் காண்கிறோம். பின் உண்மை என்னவெனின், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் என்னும் ஆறிலும் தெய்வத்தன்மையைப் பெற்றுத் தேவநிலைக்குப் பரிணமித்துச் செல்லக் கூடிய சக்தி யுண்டென்பதை உலகோர்க்கறிவிப்பதற்கும், அப்படித் தெய்வ நிலையை யுற்றோர்களுக்கு மற்றப் பிறப்புக்களோடொத்த ஒரு தனிப்பிறப்பு அமைத்தாலன்றி அத் தெய்வ நிலையை யடைந்தாரை அமைத்துக்கொள்வதற்கு ஓர் இடம்பாடில்லாமற் போகுமென்பதை வற்புறுத்துவதற்கும், தேவர் என்னும் வகுப்பை எழுவகைப் பிறவியில் முதற் பிறவிபோல அமைத்ததென்க. இதுவே தசாவதாரம் போன்ற அவதார விசேஷங்களுக்கு ஆதாரமுமென்க.

இதனைச் சிலர் சப்தப் பிரமாணத்துக்கு மாறுபடான கொள்கையென்று நினைத்தல் கூடும். அன்னோர் வேத ஸூக்ஷமங்களை அறியாதவ ராவர். நிற்க, இவ் வெழுவகைத் தோற்றத்துள்ளும் எண்பத்து நான்கு லட்சம் ஜீவ பேதமென்று அமைத்துள்ளதும் எண்ணிறந்த பிறவி பேதமெனக் கூற வந்ததே யன்றி வேறில்லை. இதனையே, தாயுமானவரும், 'எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிது அரிதுகாண்' என்று சொல்லிப் போந்தார். இத்தனை பிறவிகளுள் ஒன்றை எடுப்பதற்குக் காரணம், மனமும் அம் மனத்தைப் பெற்றதால் தன்னை இறைவனினின்றும் வேருகப் பிரித்து நோக்கினதுமே என்று இந் நூல் ஏழாவது மறையின் விசேஷக் குறிப்பில் விஸ்தாரமாகக் கூறப் பெற்றது. அப் பிறவிகள் வளர்ந்து பெருகித் தொடர்ந்தேறி வந்ததற்கு மூலகாரணம், பரமாத்ம ஸ்வரூபமாயிருந்த ஆன்மா, அப் பரமாத்மாவையேபற்றி ஸாக்ஷிமாத்திரையாக நில்லாமல், உடலையும் உயிரையும்பற்றி அபிமானித்து ஆசைகளை விருத்தி செய்ததே யாகும். ஆனதுபற்றியே, மூவேடணை என்று முடிந்திடுமோ' என்றார்.

ஈண்டு பரிணும வாதிகளில் ஒரு சாரார் ஒரு தோற்றத்திலிருந்து மற்றொரு தோற்றத்துக்கு மேலேறினவன் மீண்டும் கீழ் வகைப்பட்ட தோற்றத்திற் பிறப்பதில்லையென வாதிப்பர். உதாரணமாக எல்லா விதப் பிறப்புக்களிலும் பிறந்து பின்னர் மனிதனுக உற்பவித்தவர் மறுபடியும் கீழ்ப்பட்ட உயிர்களாகிய விலங்கு புள் முதலியவற்றிற் பிறப்பதில்லையெனக் கூறுவர். அன்னோர் அப்படிக் கூறுவதற்கு ஒரு காரணம் இது. ஒருவனது தகப்பனர் ஜடபரதர்போல மானுகவோ அல்லது வேறு இச்சையை அந்திம ஸ்மரணமாகக் கொண்டதனுல் புல்லாகவோ அல்லது காய் கறிகளாகவோ பிறப்பதாக எண்ணிக்கொண்டால், அம்

மானையோ அல்லது புல், காய்கறிகளையோ மனித வாழ்க்கையிலுள்ள அவனது புத்திரனே உணவாகக் கொண்டதாக எண்ணிப் பார்த்தால் அது எவ்வளவு கோரணியாகவிருக்குமென்பர். இன்னோர் பிறவித் தத்துவத்தை யறியாதார் என்போம். ஏன்? பக்குவப்பட்டு மேல் நிலைக்கு வந்த மனிதன் மறுபடியும் ஆசா வசத்தினால் கீழ்ப்பிறவியை எடுத்தானாயினும் அப் பிறவியிலும் முன் ஜன்மத்து நல்லுணர்ச்சிகள் அவனைப் பின்பற்றிக் காக்கும் செய்கையையிவர்கள் மறந்தனர். மேலும் அத்தகைய ஆபாஸவுணர்ச்சிகளை அறிவினால் ஆராய்ந்து பார்ப்பார் ஒவ்வொருவரும் அவற்றிற்கு வேண்டிய சமாதானங்களைக் கண்டறிதல் கூடும். அது வன்றிக் கட்சிப் பிரதிகட்சி வாதமாகக் கூறும் எவருக்கும் அவரது பிடிவாத குண மேம்பாட்டினால் உண்மை யுணர்ச்சி புலப்படாதென்க. அன்னோர்க்கு அருள் நூல்களைக் கூறுதல் விருதா காலட்சேப மாகும். மேலும் இப் பிறப்புக்களில் ஒவ்வொன்றும் ஒத்த பண்பும், ஒத்த பயனுமுள்ளவை யென்பதும், ஒன்றுக்கொன்று கீழ் மேலென மதிப்பதெல்லாம் அறியாமையால் வந்த செருக்கின் பாற்படு மென்பதும், நல்லறிஞர்களின் துணிபு. தோள்புணர்தல் என்பதற்குச் சக்தியைத் தன்னதாகக் கொள்ளல் என்றதும், சிவசங்கர தேசிகனே என்பதற்கு மங்கலமான நற்காரியங்களைச் செய்யும் குரு மூர்த்தமே யென்றதும் தத்துவ வுரைகளாம். ஸ்தூலமாக, வள்ளியைப் புணர்பவனே யென்றும் சிவசங்கரனுக்குக் குருவே யென்றும் கூறுவதில் பொருள் நயம் ஒன்றும் அதிசயமாக வில்லாமைபற்றி, இச் சூக்கும உரையை உய்த்துணர வைத்ததென்க. ஆசைகளுக்கெல்லாம் மூலகாரணம், மெய்யுணர்ச்சி யில்லாமையே

யாதலின் 'மாயைவிடா மூவேடணை' என்றார். இதனையே தாயுமானார்,

"மெய்விடா நாவுள்ள மெய்யருள் இருந்து நீ
 மெய்யான மெய்யை யெல்லாம்
மெய்யென உணர்த்தியது மெய்; இதற்கு
 ஐயமில்லை; மெய் எதும் அறியா வெறும்
பொய்விடாப் பொய்யினேன் உள்ளத் திருந்துதான்
 பொய்யான பொய்யை எல்லாம்
பொய்யெறு வண்ணமே புகலவைத்தா யெனிற்
 புன்மையேன் என் செய்குவேன்?"

என்று கூறிப்போந்தார். அதனால் ஸத்திய வுணர்ச்சி வரவே ஈஷணைகள் விலகும். ஈஷணைகள் விலகவே ஜனனம் அறுதலும் வீடுபேறும் பெறப்பட்டதை உணர்க. ஈஷணை, ஏஷணை என்ற இரண்டு சொல்லும் தமிழில் வழங்கக் காண்கிறோம்.

மாயை தெளிய

வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்
மனையோடு தியங்கி மயங்கிடவோ?
சுனையோ டருவித் துறையோடு பசுந்
தினையோ டிதணோடு திரிந்தவனே 40

அந்வயம்

சுனையோடு, அருவித் துறையோடு, பசும் தினையோடு, இதணோடு திரிந்தவனே! மனையோடு தியங்கி மயங்கிடவோ? வினை ஓட விடும் கதிர் வேல் மறவேன்.

பொழிப்புரை

தலைப்பு :—[உள்ளது ஒன்றிருக்க அதனை யறியாது, போலியுண்மையை நித்தியமென மயங்கும் பிராந்தியைப்

போக்கக் கூறிய மறையிது.] உண்மையைக் கண்டு பொய்யைக் கைவிட்டு மனந்தெளிய.

செய்யுள் :—சுனையினிடத்தும், அருவித்துறையினிடத்தும், பசிய தினைப்புனத்தினிடத்தும், (வள்ளியாகிய சத்தியிருந்த) பரணிடத்தும் அச் சக்தியைப் பெறநாடி (அவளது மனம் திரும்பும்வரை) பின்பற்றிச் சென்றவனே! (இம்மாதிரியான சக்தி படைப்பதற்கு ஆதாரமானது மனையறமென்பதை உணராது, உலக வல்லல்களி விழுத்துவிடும் ஆசாபாசங்களை நிறைய ஊட்டும் இல்லினைச் சதமென நம்பி அதனையே முடிவிடமாகவும் கொண்டு நான்) அம்மனையினிடத்துத் தியக்கமெய்தி உண்மையை மறந்து நிற்கவோ? இருவகைப்பட்ட மூவ்வகை வினைகளையும் என்முன் நில்லாமல் ஓட்டும் உனது ஞான சத்தியாகிய பிரகாசம் பொருந்திய வேலை நான் ஒருபோதும் மறக்கமாட்டேன்.

## விசேடக் குறிப்புகள்

ஆங்கிலத்துக் கோல்டுஸ்மித்து (Goldsmith) என்னும் வித்துவான் "முதற்கண் தெய்வ நிலையைப் பெறுக; பின்னர் மணஞ்செய்க." என்று கூறிப்போந்தார். இதனால் அறியக்கிடப்பது தெய்வ நெறியை யறியாத ஆண் பெண் இருபாலாரும் செய்யும் இல்லற வாழ்க்கை துன்பத்துக்குக் கொள்கலமாக நிற்கும் என்பதாம். இனி இல்வாழ்க்கையே பாபசிந்தைகளுக்கும், பாபச் செய்கைகளுக்கும் மூலகாரணமாவதை யறிந்து மணவினையே வேண்டாமென்று கருதியும், மாசிலாக் குலத்து வந்து மனமொத்த பண்புவாய்ந்து தேசினேடொழுகுவாளைத், தெய்வமே யெனத் தனக்குப் பேசுறு கணவன்றன்னைப்பேணு மன்னவளை மணக்கப் பிதாதூண்ட ஒப்புக்கொண்ட மிருகண்டு முதலியோரது சரித்திரங்களை ஆராய்ந்துபார்ப்பவர்க்கு, அவர்களது இல்வாழ்க்கை

தெய்வ வாழ்க்கைக்கு ஒத்த வாழ்க்கையாக நின்ற விஷயம் புலப்படும். அத்தகைய தெய்வ வாழ்க்கையை நடத்துவ தற்குவேண்டிய சக்தியைத் தருபவள் தெய்வவருள் பழுத்த மனைவியே யாதல்பற்றி, அத்தகைய தெய்வவருள் வாய்ந்த நங்கையரை எவ்விதத்தாலும் தேடிக்கண்டு மனைவியாகக் கொள்ள வேண்டுமென்பதை யறிவிக்க வந்தவர், 'சுனை யோடு........திரிந்தவனே! என்று கூறினார். இவ்வகையாகச் சக்தியைப் பின்பற்றி யெய்திய பின்னர், தான் உலகத்து மண் பொன் ஆசைகளில் மயங்கித் தனது நெறியை மறந்து விடலாகாதென வற்புறுத்த வந்தவர், 'மனையோடு தியங்கி மயங்கிடவோ?' என்றார். இவ்வகை மயங்காமல் நிற்பினும் தான் முதலில் மேற்கொண்ட தவத்தைத் தொடர்ந்து நடத்துவதற்கே அம் மனையானவள் துணைவந்தவளென் பதை மறவாது, ஞான வழிகளை விருத்தி செய்துகொண்டு மேலும் தனது தபோ வாற்றலை அதிகப்படுத்துவதற்கான சக்தியைப் பெற்று அதனால் வரும் பயனை யநுபவிக்க முய லல் வேண்டுமென்பார், "வினையோட விடும் கதிர்வேல் மற வேன்" என்றார். வேலானது எப்படி இருவினை யொப் பும் மல பரிபாகமும் ஏற்பட்ட காலத்துச் சக்தியை ஒரு வனது உடலிற் பதிக்கிறதென்பதை முன்னர்ப் பல மறை களின் விசேஷக் குறிப்புகளிலும் விளக்கியுள்ளேன். இந் நூலாசிரியர் வேல் ஞானசக்தி யென்பதை நன்கு அநுப வித்துணர்ந்தவ ரானதுபற்றிப் பல விடங்களிலும், அவ் வேலைப் புகழ்ந்து கூறியுள்ளார். வேல் வகுப்பு வேல் வாங்கு வகுப்பு முதலியவற்றைப் பார்க்கவும். இருவகைப் பட்ட முவ்வேறு வினைகளையும்பற்றி ஏழாவது மறையின் விசேஷக் குறிப்பிற் காண்க. ஒருவனை யடைந்த ஞான சக்தியானது அவனது வினைகளை அவனிடத்து நில்லாத வண்ண மோட்டிவிடு மென்பதைத் தெரிவிக்கவே, 'வினை

யோட விடும் கதிர்வேல்' என்றார். உண்மையிற் பார்க்கில் இவ்வேல் ஆதியில் தேவர்களுக்குற்ற இடுக்கண்களை யெல்லாம் நிவர்த்தித்ததை ஸ்காந்தம் விஸ்தாரமாகக் கூறும். நாளைக்கும் அது மனித உடலை நடமாடக்கோவிலாகச் செய்ய வல்லதென்பது, 'கிளைபட்டெழு சூர் உரமும் கிரியும் தொளைபட்டுருவத் தொடு வேலவனே' என்னும் நான்காவது மறையின் விசேஷக் குறிப்பிற் காட்டப்பட்டுள்ளது காண்க.

நித்திய தேகம் பெற

சாகா தெனையே சரணங்களிலே
கா, கா, நமனார் கலகஞ் செயு நாள்,
வாகா, முருகா, மயில்வாகனனே
யோகா, சிவ ஞானொப தேசிகனே. 41

அந்வயம்

வாகா! முருகா! மயில் வாகனனே! யோகா! சிவ ஞான உப தேசிகனே! நமனார் கலகஞ் செயும் நாளில் (யான்) சாகாது, (உன்) சரணங்களிலே கா, கா.

பொழிப்புரை

தலைப்பு :—[ஈசுவர பக்தர்களுக்கு ஓர் அடையாளம் உண்டு. அவர்களுடைய தேகம் உள்ளவரை வச்சிர காயமாக விளங்கும். இவ்வுடலத்தை விடும்பொழுதும் அவர்கள் தம் மிச்சைப்படியே விடுவர். அதனைப் பழைய வஸ்திரத்தைக் கழற்றி எறிவதுபோல எண்ணுவர். அப்படி இவ்வுடலைக் கழற்றி எறியுங் காலத்துக் காலனது வாதையின்றிக் கடவுள் முன்னிலையில் நிற்பதாக உணர்ந்து, தமது பிராரப்த அநுகுணமாக, ஸாலோக, ஸாமீப, ஸாரூப ஸாயுஜ்யப் பேறுகளில் ஒன்றைப் பெறுவர். அவர்களது கடைசி

நிமிஷங்கள் தெய்வ ஸந்நிதானத்தில் நிற்கும் நிலையாகவிருக்குமே யன்றி, உலக வாழ்வினரது கடைசி நிலையைப்போல உறவின் முறை கதறி யழுவும், ஊரார் சுடலைக் கெடுக்கவெனவும் கூறப்படும் ரோதனைகளொன்றுங் காணப்படா. அத்தகைய நிலையை யடைவதற்கான சிவஞானயோகிகள் ஆதியிலிருந்தே இவ் வுடலைத் தயார்செய்து வைப்பர். 'சாகுநாளையிலே சிவனே யெனிற் சாடவே வரும் ஏமபடாளர்கள் விடுவரோ'? என்பது அவர்களுக்கு நன்கு தெரியுமானதுபற்றி, பாலத்தன்மை, வாலிபத்தன்மை, காளைத்தன்மை, காமுறு மிளமை முதலிய எல்லாக் காலத்தும், காலமானது தனது அடிச் சுவட்டைத் தங்களது சரீரத்தின்மீது வையாதபடி காத்துக்கொள்வர். அப்படி அவர்கள் காத்துக்கொண்டிருப்பதனால், அவர்களுக்கு விஞத்தெரிந்த காலம் முதல் தூல சரீரத்திலிருந்து மகா காரண சரீரம்வரை அவர்களது ஆன்மாவானது செல்லச் சக்தி யுண்டாகிறது. அதனால் ஒருவித தேகம் சிருஷ்டிக்கப்பட்டு இறக்குமெனத் தெரிந்தவுடனேயே மற்றொருவித தேகத்தில் நிலைத்திருக்கப் பழகிக்கொள்வர். இப்பழக்கம் வலுப்பட வலுப்பட அவர்களுக்குத் தூல தேகத்தினிடத்துப் பற்று அதிக மிராது. பற்று அதிக மிராது என்று சொன்ன காரணத்தால் அவர்கள் அந்தச் சரீரத்தைக் கவனியாமல் விட்டுவிடுவார்க ளென்பது இல்லை. அதற்கு வேண்டிய ஸர்வ தேவைகளையும் தந்துவிட்டு அதைப்பற்றி அதிகம் கருதாமல் இருந்துவிடுவர். அப்படி அவர்கள் இருப்பதானது, ஈசுவரனால் அமைக்கப்பட்டுள்ள இயற்கை விதிகள் இயல்பாக வேலைசெய்து அவ்வுடலைப் பொன்போலப் போற்ற இடங் கொடுத்ததுபோ லாகிறது. அதனால் சரீரம் நித்திய யௌவன நிலையைப் பெற்றதாகும். சரீரிக்கும் அதைப் பற்றிய கவலை வேண்டா தாகி

விடுகிறது. சரீரி தான் பிறனுடைய வீட்டில் குடியிருப்ப தாகவும் அவ் வீட்டைச் சுத்தஞ்செய்து தருவது வீட்டுச் சொந்தக்காரனது வேலைபோலவும் எண்ணுகிறான். இத ஞல் குடி வைத்தவனுக்கும் குடியிருப்பவனுக்கும் ஒற்றுமை ஏற்பட, எல்லாம் சௌகர்யமாக நடைபெறுகின்றன. இவ் வளவு விஷயங்களையும் மனதிற் கொண்டே நித்திய தேகம் பெற என்னும் தலைப்புக் கொடுத்தார்.] என்றும் இளமை யோடிருக்கும் சரீரத்தைப் பெற.

செய்யுள் :—வெற்றி பொருந்தியவனே (அல்லது ஜயப் பிரதனே!) இளமை வாய்ந்தவனே! (அல்லது பக்தர்களுக்கு நீங்கா இளமையைத் தருபவனே!) மயிலை வாஹனமாக வுடையவனே! (அல்லது விந்து தத்துவத்தின்மீது ஊர்ந்து செல்பவனே! அல்லது பற்றற்று வாஹனாதி சுகங்களை யநு பவிப்பவனே!) யோகியே (அல்லது சிவராஜ யோகமே சிறந்ததெனப் பக்தகோடிகள் அதனை அநுஷ்டிக்குமாறு காட்டுபவனே!) சிவஞானத்தை உபதேசிக்கும் குரு மூர்த் தமே! (எனது வாழ்நாளில் நமன் தனது காலப்பண்பு கொண்டு எனது சரீர தத்துவத்தை யழிக்க வரும்போ தெல்லாம் உனது யோகப்பண்பை நான் அநுஷ்டிப்பதனால் அம்ருதத்தைப் பெற்று) எனது கருவி கரணங்கள் சாக் காட்டு நிலையை யடையாதபடி அம்ருதமயமாய் நிற்குமாறு உனது பாதாரவிந்தங்களினிடத்துத் தங்கும் அச் சிவராஜ யோக நிலையை யளித்துக் காப்பாயாக; (கட்டாயமாகக் காப்பாயாக.)

## விசேடக் குறிப்புகள்

உடல் நித்தியப்படும் தன்மை தலைப்பின் பொழிப்பு ரைக் குறிப்பிற் சிறிது காட்டப்பட்டது. உலகத்து நோயின்றி வாழவும், தெய்வ வருள் எவ்வகை யோடுகின்ற

தென்பதை யறியவும், உலக வல்லல்களை யொழிக்கவும், அதனால் வச்சிரகாயம் பெற்றுப் பின்னர் இத் தூல உடலை ஒழிக்கும்போது காரண மகா காரண தேகங்களில் ஆவிர்ப்ப வித்து நிற்கவும் கற்றுக்கொள்ள வேண்டியது ஒரு மனித னுடைய கடமையாம். அதனை அவன் செய்யத் தவறு வானாயின் கால ரூபமாயுள்ள யமன் அவன் செய்யவேண் டிய வேலையைத் தான் செய்து அம் மனிதனுக்கு இம்மை மறுமைப்பயன் இரண்டுங் கிடைக்காதபடி செய்துவிடு வான். அதனால் ஸ்வதந்திரனாக விருக்கப் பழகவேண்டிய ஆத்மாவுக்குப் பாதந்திர நிலை வரவே ஜன்மங்கள் பல எடுக்கவேண்டி வருகிறது. ஆனால் எடுத்த பிறவியிலே பிறப்பின் பயனை யுணர்ந்த பெரியார், தமது சிறு வயதி லேயே, தமது வருகை, தமது முடிவிடம் இவற்றைக் கவ னிக்கத் தொடங்கி, அதற்குத் தகத், தம்மை நடத்திக்கொண் டொழுகுவர். மேனாட்டாசிரியர் ஒருவர் (Young) 'ஒருவன் நாற்பதில் தன்னை மூடனென் றுணர்கிறான்!' என்றார். ஆனால் நமது ஔவையோ,

" மூப்பதா மாண்டளவில் மூன்றற் றொருபொருளைத்
தப்பாமற் றன்னுட் பெறானாகில்—செப்புங்
கலையளவே யாகுமாங் காரிகையார் தங்கள்
முலையளவே யாகுமா மூப்பு."

என்று கூறிப்போந்தார். இவற்றால் அறியக்கிடப்ப தென்ன? கடைசிப் பட்சமாக முப்பது வயதுக்குள் ஒருவன் தனது உலக நிலையையும், தன் மட்டில் தெய்வ வருள் ஓடும் நெறி யையும் ஐயந் திரிபற வறிந்து, தனக்கு அருள் ஊட்டும் நிலையில் நின்று, பிசகாது ஒழுகப் பழகிக்கொள்ள வேண்டு மென்பது நிச்சயப்பட்டது. அதனால் ஒவ்வொருவனும் தனக்கு வினைத் தெரிந்த காலத்திலிருந்தே ஆத்ம விசாரம் செய்யப் பழகவேண்டும். பெற்றோர்களும், குருக்களும்

மற்றும் பெரியோரும் அச் சிறுவனுக்கு ஆத்ம விசாரம் செய்யும் நெறிகளைப் போதிக்கவேண்டும். இன்றேல், அப்படிப் போதிக்கத் தவறிய பெற்றோரும், குருக்களும், மற்றும் பெரியோரும் தாளுகவே ஆத்ம வுணர்ச்சி பெற்ற இளைஞனுல் உல்லங்கனஞ் செய்யத்தக்கவ ராவர். ஒரு சிலர் ஆத்ம விசாரஞ் செய்தால் உலக காரியங்களுக்கு இடையூறு வந்துவிடுமெனக் கருதித் தம் சிறுவர்களுக்குத் தெய்வ வழிகளைப் போதிப்பதேயில்லை. இவர்கள் ஒன்றும் அறியா மூடர்கள். உடல் ஏற்பட்ட காலம் தொடங்கி வேண்டிய விருப்புறு வெறுப்புறுக்கள் அவ் வுடலுக்குக் கிடைக்காமற் போகா. மேலும் உலக வாழ்க்கையானது செவ்வனே நடைபெறுவதற்கு ஒவ்வொருவனும் தனது சக்திகளையறிந்திருக்க வேண்டியது அவசிய மாகும். அச் சக்திகளை யறிவதற்கு உதவி செய்வது இவ் வாத்ம விசாரமானதுபற்றி, 'இவ் வாத்ம விசாரத்தைச் சிறுவர்களுக்குப் புகட்டுவதைப் போன்ற அறியாமை வேறொன்றுமில்லை' என்றுரைக்கும் மூடர்களைக் காட்டிலும் பெருத்த மூட சிகாமணிகள் உலகத்தில் இல்லை யென்னலாம். அதனுல் உடலெடுத்த பயனை இளவயதிலேயே அறிந்து அதற்கேற்ப ஒருவன் அவ்வுடலைத் தொழிற்படுத்துவதனுல் இவ்வுடலெடுத்ததனு லாய முழுப்பயனையும் ஒருவன் அநுபவித்தல் கூடும். 'எனக்கு இளமையில் இது தெரியாமற் போயிற்றே' என்று விசனப்படுபவர்களது குற்றம் யாரதென்று எண்ணுகிறீர்கள்? அவ்விளமையில் அச்சிறுவனைச் சூழ்ந்திருந்த பெற்றோர், பந்துக்கள், அயலாராகிய ஜன சமூகத்தினரதே. ஞானவான் தன்னறிவு வந்தபின் அத்தகைய ஜன சமூகத்தைப் பார்க்கும்போது அச் சமூகத்தினர் உண்மை நெறியைக் கைவிட்ட பாதகர்க ளென்பது அவனுக்கு நன்கு வெளிப்படும். எனினும் தான் அருள் பெற்றதன் பயனுக

அச் சமூகத்தினரைக் கோபியாமல் அச் சமூகத்தை விட்டுத் தனியாக நிற்கிறான். இந் நிலையைக் கைக்கொண்டே சாந்தலிங்கர் 'ஒன்றைவிட் டொன்று உயர்ந்த நெறியென்று, சென்றிடுவோனு முண் டுந்தீபற, சென்றாற் பழி யாதென் றுந்தீபற.' என்றார். அதனால் ஒருவன் தனது சூணிலைகளை மாற்றாதிருக்கப் பார்க்க விரும்பும் சமூகத்தினர், தாங்களும் உண்மை நெறியில் நடப்பதுடன் தங்கள் சமூகச் சிறுவர்களுக்கும் அவ் வுண்மைநெறியைக் கற்பிப்பாராக! அவ் வுண்மைநெறிதான் யாது? ஒவ்வொருவனிடத்தும் முப் பண்புகள் உள. அவை மிருகப்பண்பு, மனிதப்பண்பு, தெய்வப்பண்பு என்பவையாம். இவற்றுள் மிருகப்பண்பு என்பதே ஆதி பௌதிகம் எனப்படும் உடற்பண்பாம். இவ் வுடற் பண்புகளில் முக்கியமானவை பசி துயில் காமம் என்பன. 'அதிக பசிக் கொரு நேரமே உணு அரை காலாய்' என்ற முறைப்படியோ, அல்லது காலத்துக்குக் காலம் தவறாமல் அரைவயிறுணவும் கால்வயிறு ஜலமும் கால் வயிறு காலியாகவும் விட்டுப் பூனையைப்போல உண்டோ, உடலை வளர்ப்பதனால் அவ் வுடல் ஸத்துவ நெறிப்பட்டொழுகும். "அற்றால் அளவறிந்து உண்க, அஃதுடம்பு பெற்றான் நெடிது (அதனை) உய்க்குமாறு" என்றார் திருவள்ளுவர். மேலும் 'ஊனைத் தின்று ஊனைப் பெருக்காமை முன்னினிதே' என்பதும் பலரும் ஒப்புக்கொண்ட விஷயமாம். இவ்வகையாக ஆகாரத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டு வாழ்பவனுக்கு மனப்பண்புகள் கூர்மை பெறும். அன்றியும் காமாதிகள் இன்னானை மிகவும் வருத்தமாட்டா. மெய்வாட வேலை செய்யாத ஒருவனுக்குத் துயில் சொற்ப வளவினதாகவே யிருக்கும். அதற்கெனச் சரீர முயக்கை முற்றும் விட்டிருப்பதும் சரியல்ல. இத்தகைய சிறு விஷயங்களை ஒருவன் நாடோறும் கவனித்து வருவானாயின்

அவனது உடல் நித்திய யௌவனத்தன்மையை யிழவாது. இதனோடு மனப்பண்பாகிய மனிதப் பண்பையும் ஒவ்வொருவனும் கருதவேண்டியது அவசியம். ஏன்? இம் மனப் பண்பின் ஆட்சியே அவனது சரீர தத்துவங்களை மாற்றுவ தென்பது சரீர தத்துவ மனஸ்தத்துவ சாஸ்திரிகள் கண்டுணர்ந்தது. மனம் எவ்வளவுக் கெவ்வளவு ஒருவனது ஆற்றலை யுணர்ந்து அதற்குத் தக நினைக்கவல்ல தாகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அம் மனிதனுக்கு ஜரா மரணங்கள் நேருவதில்லை. அதனால் தனது சூனிலைகளையும், ஜீவசக்தியையும் உணர்ந்து அதற்குத் தகுதியான எண்ணங்களையே ஒவ்வொருவனும் மனங்கொள்வானாக. முற்காலத்து மாந்தர் நூறு வயது வாழ்ந்ததற்கும், அந் நூறு வயதளவும் மயிர் நரையாது அதிகம் திரையுண்டாகா திருந்ததற்கும், தற்கால மாந்தர் பால்யத்திலேயே நரைத்துத் திரைத்துப் பற் கழன்று பகர்ச்சி தாழ்ந்து நிற்பதற்கும், காரணம் இந் நினைப்பின் பேதமே யாகும். இதனுண்மையைத் தாயுமானார்,

"ஆசைக் கோ ரளவில்லை; அகில மெல்லாங் கட்டி
யாளினுங் கடல் மீதிலே
ஆணைசெலவே நினைவர்; அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்த பேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்;
நெடுநா ளிருந்த பேரும்
நிலையாகவே யினும் காயகல்பந் தேடி
நெஞ்சு புண்ணாவர்; எல்லாம்
யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும்
உறங்குவதும் ஆக முடியும்
உள்ளதே போதும்; நான் நான் எனக் குளறியே
ஒன்றை விட்டு ஒன்று பற்றிப்

பாசக் கடற்குளே வீழாமல் மனது அற்ற
பரிசுத்த நிலையை யருள்வாய் ;
பார்க்கு மிட மெங்கு மொரு நீக்க மற நிறைகின்ற
பரிபூரண னந்தமே.''

என்று விளக்கிப் போந்தார். அவர் ஆண்டு பசிதீர உண்பது என்று கூறியிருப்பது நன்கு கவனிக்கத்தக்கது. பசியென்பது நல்ல பதார்த்தங்களைக் காணும்போதும் நினைக்கும்போதும் உண்டாகும் வேட்கையாகிய பொய்ப்பசியல்ல. 'அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல துய்க்கத் துவரப் பசித்து' என்றபடி, துவரப் பசித்தலுக்குள்ள குணங்குறிகளை ஒருவன் கண்டாலன்றி, வாயில் உமிழ் நீர் ஊறும் போதெல்லாம் உண்ணத் தொடங்கலாகாது என்பது சொல்லப்பெற்றது. இனி இவ்வகை உடற்பண்பினை மனப்பண்பினால் பகுத்தறிந்து அடக்கி யொழுகுபவனுக்குத் தெய்வப் பண்பு தானே புலப்படும். அப் புலப்பாட்டால் அகப்பற்றும் புறப்பற்றும் நீங்கும். நீங்கவே, தன்னுடலில் அமைந்துள்ள தெய்வ சக்திகளை யவன் உணரவல்லவனாவான். அத் தெய்வ சக்திகளை நன்குணர்ந்து பின்பற்றி நடக்கு மளவுக்குத்தான், அவன் தானெடுத்த தேகம் விழு முன்னே முக்தி சித்திகளைப் பெற வல்லவனாவான். முக்தியினிடத்து மனம் நிலைத்தாலன்றி அவன்பெற்ற சித்திகள் அவனுடைய நல்வாழ்வுக்கு அநுகுணமானவைகளாகாவானது பற்றி முக்தி சித்திக ளென்ற தென்க. இவ்வளவு விஷயங்களையும் எந்த ஜனசமூகம் அநுஷ்டான நிலையில் வைத்துக்கொண் டிருக்கிறதோ அந்த ஜனசமூகம் ஜாதிச்சண்டை, மதச்சண்டை, தேசச்சண்டை முதலிய சண்டைகளில் களிகொள்ளாது. ஒவ்வொரு தனிமரமும் பலன் தந்து தோப்புக்குச் சிறப்பை யளிப்பதுபோல ஒவ்வொரு தனி மனிதனும் அருள் பழுத்தவனாய் நின்று சமூகத்துக்குப் பெரு

மையைத் தருவான். அதனால் மேலே கண்ட விஷயங்களையெல்லாம் செவ்வி தின் ஆராய்ந்து முப்பது வயதுக்குள்ளேயே ஒருவித பூரணநிலைக்கு வந்த ஒருவன், பின்னர்த் தான் கற்றநெறிகளை இடைவிடாது அநுஷ்டித்து வருவானாயின், அவனுக்கு நித்திய யௌவனத்தன்மை வாய்ந்த தேகம் வராமற் போகாதென் றறிக. அத் தேகமும் ஸ்தூல சூக்ஷும, காரண, மகாகாரண தேகங்களென நிற்பதால், இவற்றில் ஒன்றுக்கொன்று சிறந்துநிற்கும் தேகத்தில் தான் றங்கிக், காலனுக்கு யாதொரு வேலையுமில்லாமல் தன்மட்டில் செய்துகொள்ள வல்லவனாவான் என்பதைக் காட்டவே, 'யோகா, சிவஞான உபதேசிகனே' என்று விளித்தார். இம் மறை யுரையில் சாதாரண உரைகளான 'மயிலை ஏறி நடத்துபவனே! யோகத்தைச் செய்பவனே! சிவனுக்கு ஞானோபதேசஞ் செய்தவனே' என்னும் உரைகளைவிடுத்து விசேஷ உரைகளைக் கூறியதன் காரணம் உபாஸகர்கள் உண்மை யறிந்து தெளிவதற்கென வறிக. இனிச் "சாகாதெனையே சரணங்களிலே கா கா" என்பதன் பொருள் 'கார்மாமிசைக் காலன்வரிற் கலபத்து ஏர்மாமிசை வந்து எதிரப்படுவாய்' என்ற மறையின்கீழ் விஸ்தாரமாக விளக்கப்பெற்றது. 'மரணமுண்டென்பது ஸதா நிஷ்டர் நினைவதில்லை' என்று கூறியதின் உண்மைத் தத்துவம் இதுவே. மனிதன் ஸதா தெய்வ ஸந்நிதியிலே தான் நிற்பதாக எண்ணிக்கொண்டு பற்றற்று ஒழுகும்போது, கால தத்துவமான்து அவனது கருவி கரணங்களை பலாத்காரமாய் முறித்தெறிய இடமில்லாற் போவதனால், அவற்றைப்பெற்ற மனிதன் (Natural wear and tear) இயற்கையில் ஏற்படும் கழிவுகளுக்கே இடந்தந்து நிற்பதால், அவனுக்குக் காலத்தால் வெளிப்பட்டுத் தோன்றும் வாதைகளொன்றும் அறியக் கிடப்பதில்லை. அதனால் அவன் கொஞ்சம் கொஞ்ச

மாகப் பிரகிருதி தத்துவத்தினின்றும் கழன்று ஆன்ம தத்துவத்தை அடைந்துவிடுகிறு னென்பதை உணர்த்தவே "நமனுர் கலகஞ் செயும் நாள்........சரணங்களிலே கா கா" என்றுர்.

நின்ற நிலை நிற்க

குறியைக் குறியாது குறித் தறியும்
நெறியைத் தனிவேலன் நிகழ்த்திடலும்
செறிவற் றுலகோடுரை சிந்தையு மற்
றறிவற் றறியாமையு மற்றதுவே. 42

அந்வயம்

தனி வேலன் குறியாது குறித்துக் குறியை அறியும் நெறியை நிகழ்த்திடலும், உலகோடு செறிவு அற்று உரை (அற்று) சிந்தையும் அற்று அறிவு அற்று அறியாமையும் அற்றது. (ஏ, அசை) [மூலத்தில் தனி வேலை என்றுள்ள பாடம் பிழை என்பதைக் கருதாமலே உரைகாரர் பலரும் இடர்ப்பட்டுள்ளனர்.]

பொழிப்புரை

தலைப்பு :—['கற்கக் கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக'வென்றும், அப்படி நிற்கு நிலையில் நிற்றல் அருளாலன்றி நடவாதென்பதை யுணர்த்த 'நிற்கு நன்னிலை நிற்கப் பெற்றுர் அருள் வர்க்கமன்றி மனிதர் அன்றே ஐயா' என்றும் கூறியுள்ளபடி, முருகனது அருளானது உபாஸகன் அநுஷ்டித்து நிற்க வேண்டிய நிலையை நிறை வேற்றிக் கொடுத்த வழியை உபதேசித்த மறை இது.] ஒருவனுக்குக் குருநாதன் உண்மை நிலையைக் காட்டி அவனைத் திருத்தியபோது, அவன் தான் அப்போது நின்ற நிலையிலேயே மர்க்கடம்போல் விடாதுபற்றி நிற்க.

செய்யுள் :—ஒப்பற்ற வேலாயுதத்தை யுடைய குரு நாதன். (உலகைக்) குறியாமல் இலட்சிய நிலையையே மன

திற் குறித்து அவ் விலட்சியத்தைத் தெரிந்துணர்கின்ற மார்க்கத்தை (எனக்கு வெற்றுபதேசமாக மட்டும் சொல்லாமல் வேல் கொண்டு குண்டலினியை நிமிர்த்து இருவினையொப்பையும் மல பரிபாகத்தையும் தந்து அருள்பதிக்கவிட்டு) நடத்திக் காட்டவே, (எனக்கு) உலக சம்பந்தம் அற்றதோடு நில்லாமல், அவ்வுலகத்தாரோடு வாதாடுதலும், அப் போராட்ட வுலகத்தினரை நினைத்தலுங்கூட நின்று போனது மன்றி, அறிதல் அறியாமை யெனும் துவந்துவ நிலைகளும் விலகிப்போயின. (அதனால் நிர்விகல்ப ஸமாதியில் நிற்கலானேன் என்றபடி.)

## விசேடக் குறிப்புகள்

வேலை என்ற பாடம் தவறென்பது சற்று யோசித்துப் பார்க்கு மெவர்க்கும் தெள்ளிதின் விளங்கும். வேல் என்பது குண்டலினியை நிமிர்த்தி மூலாதாரத்தி னின்றும் ஸஹஸ்ராரம்வரை அச் சக்தி சென்று அச் சஹஸ்ராரத்தி லுள்ள அம்ருதத்தை ஒருவன் புசிக்க அவனுக்கு உதவுவதென்பதும், வேலன் ஓர்உபாஸகனை ஆட்கொள்ளுங்காலத்து முதல் முதல் செய்வது அவ் வேல் கொண்டு பிரஹ்மரந்திரப் பெருந்துளை திறப்பதே யென்பதும், முன்னர்ப் பல மறைகளின் விசேஷக் குறிப்புகளிலும் விஸ்தாரமாகக் கூறப்பட்டுள்ளன. இவ் யோக நெறியைத் திறந்து காட்டி ஞானாமிர்தத்தைப் புசிக்குமாறு செய்வது இக் குரு மூர்த்தத்தின் சிறப்பு நிலையாகும். யோகாப்பியாசம் செய்பவர்களும் இக் குருநாதனது அருளைப் பெறுவராயின்,

"நியம லக்ஷணமும் இமய லக்ஷணமும்
ஆஸன விதபேதமும்
நெடிதுணர்ந்து, இதய பத்ம பீடமிசை
நின்றிலங்கும் அஜபா (அ) நலத்து

இயல் அறிந்து, வளர்மூல குண்டலியை
இனிது இறைஞ்சி, அவள் அருளினால்
எல்லையற்று வளர் ஜோதி மூல அனல்
எங்கள் மோன மரு முறையிலே
வயம் மிகுந்து வரும் அமிர்த மண்டல
மதிக்குளே மதியை வைத்து, நான்
வாய் மடுத்து, அமிர்த வாரியைப் பருகி
மன்னும் ஆர் அம்ருத வடிவமாய்ச்
செயம் மிகுந்து வரு சித்த யோக நிலை
பெற்று, ஞான நெறி அடைவனோ ?
தெரிவதற்கு அரிய பிரமமே அமல
சித்ஸுக உதய விலாசமே !"

என்றபடி, இயம, நியம, ஆசன, பிராணாயாம, பிரத்தியா கார, தாரணை, தியான, ஸமாதி என்னும் எட்டங்கங்களின் உண்மைகளையும் உடனே நன்றாக வறிந்து, இதயத்தில் சுவாஸ ரூபமாக விளங்கி ஜபியாமல் ஜபிக்கப்படும் (அஜபா) மந்த்ர ஜபமாகிய 'ஹம்ஸஸ் ஸோஹம் ஹம்ஸோஹம்' என்பதன் உண்மையையும் கண்டு, ஆறு ஆதாரங்களில் அக்கினி கண்டத்திலுள்ள மூலாதாரத்தில் வாலும் சூரிய கண்டத்தில் மணி பூரகத்தில் தலையுமாக வாலது கீழ் மேல் மண்டலமிட்டுப் படந்தனைச் சுருக்கிப் படுத்துறங்குவதாகிய குண்டலினி சக்தியை வணங்கி எழுப்பிச் சந்திர கண்டத்திலுள்ள ஆக்ஞைக்குக் கொண்டுபோய், வேலனது வேல் நிமிர்த்தித் தந்த பிரமரந்திரத்தூடு மனோ மண்டலத்தைக் கடந்து, சந்திரகலா மண்டலமாகிய ஸஹஸ்ராரத்தில் பிரஹ்ம நாடி வழியாகப் புகவிட்டு, அங்கு அம்ருத மயமாய்ச் சோடசகலை என்றும் நிரம்பியுள்ள சந்திர னிடத்தே மௌனத்தில் ஊன்றி, மதியைப் (புத்தியைப்) புகவிட்டு, அங்குள்ள அம்ருதத்தைக் கடைந்து உண்டு, தான் அம்ருத மயமாக மாறி, யோக ஸித்தியைப் பெற்று, ஞானத்தை, எல்லாக் காலத்தி

லும் வற்ருத ஊற்று நீரைப்போலப் பெற்று விளங்குவா ரென்பதற்கு யாதொரு ஐயமுமில்லை. இவ்விஷயத்தின் விரிவை எனது உபதேச பஞ்சரத்நம் என்ற நூலிற் காண்க. நிகழ்த்துதல் என்னலால் அநுபவப்படுத்திக் காட்டினமை வெளியாகும். இது, வேறு சில குருக்கண்மாரது உப தேசம் போன்ற வெற்றுபதேச மன்றென வறிக.

இனி ஒரு சாரார் கந்தர் அநுபூதிக்கண் பிரஹ்ம உபா ஸனுமார்க்கம், சக்தி உபாஸனை நெறி, சிவஞான நெறி, யோக மார்க்கம் எல்லாவற்றையும் கலந்துரைத்தல் முறை யன்றென உரைப்பர். அவர்க்கு என் அநுபூதி உரை யொன்றைக் கூறுவல்:

“ நாளொடு கோளெனே நண்ணக் கலங்கிய நானிலத்தோர்
வேளென மூத்த பெருமாள் சிவம்சக்தி வேறு பல
ஆளென முன்மொழிந் தோது மெலாமொன்றி னம்சமெனக்
காள மறைந்தென நீ கூறிய பினர்க் கண்மணியே.”

—கண்மணிமாலை.

இக் கருத்தை ஏற்புறுத்தியே தாயுமானுரும், ‘மெய் விடா நாவுள்ள’ என்ற பாட்டில்,

மைவிடாதெழு நீலகண்ட குருவே, விஷ்ணு
வடிவான ஞான குருவே,
மலர்மேவி மறை யோது நான் முகக் குருவே,
மதங்கள் தொறும் நின்ற குருவே,
கைவிடாதே என்ற அன்பருக்கு அன்பாய்க்
கருத்தூடு உணர்த்து குருவே,
கருதரிய சித்ஸபையில் ஆனந்த நிர்த்தம் இடு
கருணுகரக் கடவுளே.

என்று கூறினர் என்க. பேத புத்தியை விட்டுப் பார்க்கில்,

“ திறமாண்ட வடியவர்கள் சாதிகுல மதத்தைச்
சேதித்துக் காட்டுவரோ செம்மை சேர் மனத்தின்
அறமாண்ட அடியருனக் கிலமெலா முளரொன்று
அடிமை மனம் அறியாதோ அங்குளார் இங்கின்று

இறைமாண்ட தன்மையரென் றிளிவந்த பேசி
இறையளவு நின்பாத மேத்தாத பேரின்
உறவீண்டு நான் கொள்ளேன் உன்னடியைச் சேர்ந்தேன்
உண்மையிது வினை தீர்க்க இது தருணம் உவந்தே"

—திருநான்மணிமாலை.

என்பதன் உண்மை நன்கு வெளியாகும். பின்னர் உலகைப் பார்ப்பதும், உலகத்தோடு பேதபுத்திகளோடு அளவளாவுதலும், நன்மை தீமைகளைப் பகுத்தறிய நுழையும் குபுத்தியும், எல்லாம் இவ் வகண்டத் தியானிக்கு விலகிப்போக, அவன் நிர்விகல்ப ஸமாதி நிலையைப் பெற்று எல்லா மாந்தராலும் ஒரே விதமாக எண்ணப்படும் நிலையை யடைவன் என்க.

ஆசாறுகி அநுக்கிரகிக்க

தூசா மணியுந் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளம் துகளாயின பின்
பேசா அநுபூதி பிறந்ததுவே 43

அந்வயம்

தூசு ஆம் மணியும் துகிலும் புனைவாளது நேசா! முருகா! நினது அன்பினாலும் அருளாலும் ஆசையாகிய நிகளம் துகளாக ஆயின. பின் பேசா அநுபூதி பிறந்தது. (ஏ, ஆசை) (நிகளம், நிகடம் என்பதன் திரிபு.)

பொழிப்புரை

தலைப்பு :—[தான் கற்ற விஷயங்களையும் அநுபவித்த பர இன்பங்களையும் பிறருக்கும் கிடைக்குமாறு செய்வதே தான் அவற்றைப் பெற்றதன் பயனாதுபற்றி, ஒருவன் அநுபூதி பெற்ற பின்னர், பிறருக்கு அதனை யுணர்த்தும் வகையைப் போதிக்கும் மறை இது.] தான் ஓர் ஆசிரிய

னாக நின்று இது வழியென்பதைத் தான்கண்ட வண்ணம் பிறருக்கு அருள.

செய்யுள் :—பரிசுத்தமான அரதனங்களையும் ஆடையையும் தரிப்பவளாகிய வள்ளி நாச்சியாரிடத்து நேசம் வாய்ந்தவனே! இளமையை நித்தியப் பேறாக உடையவனே! உனது அன்பு என்னைச் சார்ந்த காரணத்தாலும், உனது அருள் எனக்குக் கிடைத்த காரணத்தாலும், என்னிடத்துப்பற்றி என்னைப் பிணித்து நின்ற ஆசாபாசங்களாகிய சங்கிலிகள் (விலங்குகள்) பொடிப் பொடியாய்ப்போயின. அதன் பின்னர் மௌனத்திருந்து யான் அடையக்கூடிய சுவாநுபூதியானது என்னிடத்துத் தோன்றியது.

## விசேடக் குறிப்புகள்

ஒரு வஸ்துவைப் பெற்றுத் தான் இன்புறும் போது அதனைத் தன்னொத்த பிறரும் அநுபவிக்க வேண்டுமென்றெண்ணுவது உயர்ந்தோர் பண்பு. அருணகிரி நாதரே, 'தடுங்கோள் மனத்தை........தானே யுமக்குவெளிப்படுமே.' என்று சொல்லிப் போந்தார்.

"காகம் உறவு கலந்துண்ணக் கண்டீ ரகண்டாகார சிவ [மாய்
போக மெனும் பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரண
ஏகவுருவாய்க் கிடக்கு தையோ இன்புற்றிட நாம் இனியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாருஞ் செகத்தீரே."

என்றார் தாயுமானாரும்.

"அன்றே அருள்பழுத் தனுபவம் முதிர்ந்து
கன்றிய பவத்தைக் கழித்தோர் யாரும்,
ஏகவுரு வாய் இன்ப வெள்ளப்
போகந் ததும்பிப் பொங்கு முறையைக்,
'காகம் உறவு கலந்தே யுண்ண
வோகையிற் கண்டீர் உண்பான் வம்மின்;'
'ஊரீர் போரீர் ஏரார் நீற்றை;'

" தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியை
இடுங்கோள் தானம் ' எனநனி யியம்பலும்,
இல்லார் இரப்ப உள்ளார் இரங்கிச்
சொல்லார் பொருளைப் பாத்துணச் சொல்லலும்,
ஈயா உலோபியர் எரிவாய் நரகம்
வாயா வாழ்வு மதிவலி மெலிந்து
சாய்வா ரென்னச் சாற்றலும் ஓர்ந்தேன் ;
கண்டார் விள்ளார் எண்தப வென்னும்
பண்டையோர் கூற்றும் பகர்ச்சி யருமையைக்
காட்டிய தன்றி நாட்டிற் பிறிது
கூட்டிய வந்த குறியன் றாதலின்
இவ்வயின் அநுபவத் தியைந்தவை யுணர்த்தச்
செவ்விதிற் றுணிந்தேன் தேசிக னருளால்
ஆரிய மக்காள், அமைதியிற் கேண்மின் !
கூற்றழிக் கும்மறை யாகுங் குடிலை
தோற்றுமது உணர்மின் ! துகளறு நாதமும்
நாத விந்துவும் நவிலும் உள்ளுயிரும்
இடை பிங்கலை எனும் வல்லியேறத்
தடையற வமைந்த வீணை தண்டும்
குகப் பெருமான் கரக்கூர் வேல் இலைமுகத்து
அகக் குண்டலி நிமிர்ந்து அமர வாய்ந்ததும்
பிரம ரந்திரப் பெருவழி திறப்பதும்
சுழுனை வார் தோற்றும் துளைஅமை தருவும்
தழுவு மகாரிலார் தாமவர்ப் பெறுவான்
நாக உருவில் நாட்டி யமைப்பதும்
ஐந்தலை அரவின் அமைந்து நிற்பதும்
ஆறுதலைக்கு இடமாக வந்ததும்
மாறில் வகை இனும் அநந்த மாகும் ;
மூல விநாயகன் மொழிகுவன் முன்னுவீர் !
உந்திக் கமலத் துதித்த பிரமனும்
அந்தமாப் பூரகத் தாலிலைப் பாயற்
புருடோத்தமனும் பூவை நாயகனும்

தம்மின் முரணித் தலைகீழ்ச் சாரின்
விண் வீழ் கொள்ளி யெனவில் வீசி
அண்ணிய பொழுதே ஆறழிந்தொழுகும்
மயிர்ப்பாலத்தையும் மகேசுரத் தீயையும்
அயிர்ப்பற அணைந்து நாதாதீதக்
கலையிகந் தோங்கும் கவின் ஆர் ஸதாசிவத்(து)
அலைசூழ் காடும் அணியார் பாதமும்
காண இயலுதல் கழியாது அன்றே ;
மூல பூரத்தும் முக்கண் இடத்தும்
கோலத்து அமர்ந்து குழைந்த இலிங்க
தியானத் தமர்ந்து சித்தி அடைந்தவர்
ஞான வாளால் ஈன சூலத்தைக்
காதுதல் அரிதோ ? மாது பாகர்
ஓதும் பன்னீ ரங்குலத் தும்பர்
தீதற வமர்ந்து சிறந்துளா ரெனினும்,
ஞானு கலர்க்கிங் கானுமல மொழித்(து)
இருவினை யொப்பு மலபரி பாகம்
ஒத்து வருங்காற் சத்தி பதிக்க
நித்திய மலனை நிமிர்புன் தலையினும்
வைக்கும் அளித்தகை வகுக்கலும் அரிதே ;
குமரக் கடவுளைக் கூப்பி னன்றி
அமரர் நாட்டும் அறிவார் இலையாற்
சத்திய மிதனை மெத்திய வுணர்வால்
இத்தரை உணர்தல் இயலா தன்றே ! அதனால்,
பஞ்ச சக்திகளும் பஞ்ச மூர்த்திகளும்
விஞ்சைபோல் நும்பணி விளைக்க வேண்டின்
ஆதி நாதனை அநாதி மூலத்தை
வாதமாங் கரண வல்லபம் நீக்கி
ஓதுவீர்! உண்மை உதவலும் ஆமே."

—திருநான்மணிமாலை.

என்று எனது தோத்திரப்பிரபந்தத் திரட்டில் கூறியுள்ள தையும் கவனிக்க. இனி இம்மறையின் தலைப்புக்கும் முப்ப

தாவது மறையின் தலைப்புக்கும் முரண் ஏற்பாடாதோ வெனக் கேட்போர்க்கு யான் கூறுவது இது: உண்மை நெறியை யநுபவித்த பெரியார் பிறனொரு உபாஸகனை ஆற்றுப் படுத்தற்கும், யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவரைப்போல் தம்மையே பிறர் குருமூர்த்தமாக வணங்கித் தமக்குப் பாத காணிக்கைகளை யளித்துத் தம்மைச் சூழ்ந்து தமது மடத்தைக் காத்திட்ட சுவானங்களுக்கு மரியாதை பண்ணச் சொல்லும் மடாதிபதிகளின் செய்கைக்கும், அஜகஜாந்தர பேத முண்மையை யோசித்தறிந்து மௌனப்படுவார்களாக வென்பதே. அருளைப் பெற்ற வொருவன் தனக்கு ஈசுவரனிடத்திருந்து அல்லது உபாஸன குருவினிடமிருந்து கிடைத்த வேதிப் பண்பினைக், காந்தத்தின் முன்னிலையில் இழுக்கப்படும் கருந்தாதினைப் போல வரும் அப்பியாசிகளுக்கு அருளி, அவ் வப்பியாசிகளையும் ஆரூட நிலைக்குத் தெய்வ வருளொத் தொழுகின் வருமாறு செய்வதற்கும், உலக ஆடம்பரங்களில் மூழ்கித் தம்மை மறந்து, தாம் செய்வது இன்னதென்று அறியாது, ஏழை ஜனங்களையும் மூட ஜனங்களையும் ஏமாற்றிப் பொருள் பறிப்பதையே தொழிலாகக் கொள்ளும் மடாதிபதிகட்கும் எவ்வளவு பேத முண்டென்பதை யோசித்துப் பார்க்கவும். அதனால் முப்பதாவது மறையின் தலைப்பிற்கும் இம்மறையின் தலைப்புக்கும் முரண் ஏற்படாமை யறிக. இனி ஒரு சாரார் 'இம்மறையே அருணகிரி நாதர் பாடிய கடைசி மறையாகும். இதற்குமேல் அருணகிரிவாக்கல்ல' என்று சாதிப்பார் உளர். அவர் மதத்தை முன்பே தொடக்கத்தில் மறுத்துச் சமாதானம் கூறி யாயிற்று. இந் நாற்பத்து மூன்று செய்யுட்களினிடையிலும் ஒன்றிரண்டு (22-ம், 29-ம்) அருணகிரி வாக்கோ வென்பதை அவ்வம் மறைகளின் விசேடக் குறிப்புக்களில் எடுத்துக் காட்டி உண்மை ஊகித்தறிந்து கொள்ளு

மாறு விடப்பெற்றது. அதனால் இப் பிரபந்தம் நூறு மறைகளுள்ள பிரபந்தமெனக் கொள்ளுதலில் தவறொன்று மில்லை யென வறிக. ஏட்டுக் கல்வி யளவில் நின்ற பெரியார் அநுபூதிபெற்ற முனிவரது நூல்களிடத்துக் குண தோஷங்க ளிரண்டையும் அறிந்து சொல்ல வல்லவ ராகார் என்க. நிற்க. இம் மறையில், ஒருவன் தனது உபாஸனா மூர்த்தி தன்னை விரைவில் தேடிப் பிடித்து ஆட்கொள்ளு மாற்றுக்கு வேண்டிய அன்பு மேலீட்டைக் கைக்கொள்ள வேண்டுமென்பதும், அப்படிக் கைக்கொள்வதனால் தப்பாமல் அக் குருமூர்த்தத்தின் அருள் அவ் வுபாஸகனுக்குக் கிட்டு மென்பதும், அப்படிக் கிட்டுங்கால் அவனுடைய ஆசாபாச உணர்ச்சிகளெல்லாம் விலங்கு தெறித்ததுபோல முற்றும் அற்றுப் போகுமென்பதும், அப்படி அற்றுப் போகவே அவனுக்கு அருளை யாளும் சுயேச்சை ஏற்பட அவன் ஒருவரோடும் ஒன்றும் பேசாதிருக்கும் நிலையாகிய மகாமௌனத்தைப் பெற்று நிர்விகல்ப சமாதியி லமர்ந்து ஸதேஹ முக்தி யடைதல் கூடுமென்பதும், தெள்ளிதின் விளக்கப்பெற்றன.

### குரு மந்திரம் பெற

சாடும் தனிவேல் முருகன் சரணம்
சூடும்படி தந்தது சொல்லு மதோ,
வீடும் சுரர்மா முடிவேதமும் வெம்
காடும் புனமும் கமழும் கழலே. 44

### அந்வயம்

வீடும், சுரர் மா முடி(யும்), வேதமும், வெம் காடும், புனமும், கமழும் கழல் (ஆனது) சாடும் தனி வேல் முருகன் சரணத்தைச் சூடும்படி தந்தது சொல்லும் (தரத்து) அதோ ? (ஏ, அசை.)

## பொழிப்புரை

**தலைப்பு** :—[தன்னைக் கருதுபவனைக் காப்பாற்றும் தன்மையை யுடைய மொழிக்கு மந்திரம் என்று பெயர். 'உண்மை யறிவித்த விடம் (தான்) குரு' வென்பது பெரியார் மொழி.] அறிவின்மையைப் போக்கு வோனது காப்பாற்று மொழியைப் பெற.

**செய்யுள்** :—விடுதலை (மோட்சம்) என்ற நிலையிலும், தேவர்களது பெரிய சிர(கிரீட)ங்களிலும், வேத சிரசிலும், கொடிய பரற் கற்கள் நிறைந்த காட்டிலும், தினைப்புனத்திலும், மணத்தை வீசுகின்ற வீரகண்டை யணிந்த பாதங்கள், (எனக்குக் குரு மூர்த்தமாக நின்று) பகைமைகளை அடித்து ஓட்ட வல்ல ஒப்பற்ற வேலைத் தன் கருவியாகக் கொண்ட முருகனது சரணங்களை (கால்களை) மலர்போலச் சதா எனது சிரத்தின்மீது சூட்டிக் கொண்டிருக்குமாறு செய்த உபதேசத்தை(யும் அதனால் யான் அடைந்த லாபத்தையும்) எடுத்து விஸ்தாரமாகக் கூறும் தன்மை எனக்கு உண்டோ? (அது சொல்லச் சொல்லப் பின்னும் பெரிதாய் விரியுமானதுபற்றி அவ்வாறு அறிவார் அறியும் தரத்ததே யன்றிச் சொல்லும் தரத்த தன்று என்று கூறியபடி.)

## விசேடக் குறிப்புகள்

'கழலே குரு; அக் கழல் சரணம் சூடும்படி தந்ததே உபதேசம்; அப் புதுமை சொல்லும் தரத்ததல்ல' என்றார், ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு விதமாக அவரவரது பிராரப்த பேதத்துக்குத் தக்கபடி சிறிது மாறுபட்டுக் காணுதலு முண்டாதலின். விதேஹ முக்தியைப்பற்றிய கேள்வி இறைவனதே யன்றி நம்மதல்ல. ஏனெனில் மாகாகாரண சரீரத்தையும் விட்டுச் சமுத்திர நீரிற் கலந்த நன்னீரைப் போல இவ் வான்மா தனது உருத்தெரிய முடியாதபடி யழி

யினும், நீரினின்று பாலைப் பிரித்தெடுக்கவல்ல குருகைப் போல அவ் வான்மாவைத் தனிப்படுத்தித் தோற்றவல்ல சக்தி இறைவனுக் குள்ளதாதலின் விதேக முக்தியில் தன்னிழப்பொன்று தவிர மற்றெதற்கும் ஆன்மாவிற்கு ஸ்வதந்திரமில்லாமற் போனதை யுணர்க. இனி ஸதேஹ முக்தி ஒன்றுதான் ஆன்ம வசப்பட்டது. அது ஸ்தூலதேஹ முக்தியாயினும் ஸரி, ஸூக்ஷ்மதேஹ முக்தியாயினும் ஸரி, காரணதேஹ முக்தியாயினும் ஸரி, மஹாகாரணதேஹ முக்தியாயினும் ஸரி, இவற்றுள் ஒன்றில் ஆன்மாவிருக்கும் வரை இக் கழல் குருவாக நில்லாமல் தீராது. இறைவனது பாதம் ஞான சக்திக் கறிகுறியாம். இந்த ஞான சக்தி மோட்ச நிலையிலும் விளங்குவ தெவ்வாறெனின், ஆன்மாவானது தான் ஒன்றை விரும்பாமல் நிற்கினும், சந்நிதி முத் தொழிலியற்ற வென்னும் முறைப்படி, அதனிடத்து அணிமாதி அஷ்ட ஸித்திகள் வந்துகூடும். அப்படிக் கூடும்போது இந்த ஞானசக்தியாகிய கழலே அவ் வணிமாதிகள் தானல்ல வென்று ஆத்மாவுக்கு உணர்த்தி நிற்பது. அதனால் குருநாதனது கழல் வீரசக்தி வாய்ந்தது என்பதும் புலனாகும். இனி, பிரமபதம், விஷ்ணுபதம், ருத்திரபதம், இந்திர பதம் முதலிய பதவிகளைத் தங்களுக்கு ஆஸ்தானங்களாகக் கொண்டு அங்கிருந்து ஒரு அளவுக்கு மேல் விலக முடியாது விவகரிக்கும் பல தேவதைகளுக்கும் அப் பதம் தங்களுக்கு அழிவில்லாம லிருக்குமாறு செய்வது, இந்த ஞான சக்தியாகிய கழலே யாகும். இந்த ஞான சக்தியைக் கை விடுவார்களாயின் அவ்வத் தேவர்கள் தங்கள் ஆஸ்தான மகிமைகளை யிழந்து தட்டழிபவ ராவர்.

“ நூறு கோடி பிரமர்கள் நுங்கினார்
ஆறு கோடி நாராயணர் அங்ஙனே

ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறிலா தவன் ஈசனொரு வனே."—அப்பர்.

ஆனதுபற்றிப் பத மகிமையைப் பெற்ற தேவரிடத்தும் இக்கழல் கமழ்வதாயிற்று. இனி ஞானப் பொக்கிஷமெனக் கூறப்படும் வேதத்தின் சிரத்தில் இஞ் ஞானசக்தி கமழ்வதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? அதுவன்றி, இனிப் பொருட்டுறைகளிலும் இக்கழலே கமழ்ந்து நிற்பதென்பதையும், அக் கழலாகிய ஞானசக்தி விளங்காதவிடத்தில் அப் பொருளாட்சி ஒருவனுக்கு இல்லாத தாகிவிடுமென்பதையும் உலகினர்க்கு அறிவிக்கக்,காட்டிலும் புனத்திலும் அகப்பொருள் ஒழுக்கத்தி னின்றபோது கமழ்ந்ததெனக் காட்டினார். 'அற்றேல், புறப்பொருளை யநுபவிப்பதற்கும் இக் கழல் வேண்டிய தல்லவா? அதனைக் கூறாது விடுத்த தென்னை ?' என்று கேட்போர்க்குக், கழல் என்ற சொல்லுக்குள்ளேயே அப் பொருண்மை யுள்ளதை உய்த்துணர்ந்து அறியுமாறு கூறுவேன். இனி இக் கழலைக் குருவாக்கினவர், சரணங்களைச் சூடுதலை வேண்டாதது கூறல் அல்லது கூறியது கூறல்போலச் சொல்லுவானேன் எனின், அது வேண்டாதது கூறியதன்று. கழல் பொதுவும், முருகன் சரணம் சிறப்புமென வறிக. குருவாக ஒருவனுக்குத் தோன்றும் காலத்து நீலகண்டகுரு, விஷ்ணு வடிவான குரு, நான்முகக் குரு, மதங்கள் தோறும் நின்ற குரு, இவர்கள் எல்லாருக்கும் மேலாகக் கருத்தூ டுணர்த்து குரு, இவருள் எக் குருவாகவும் வெளிப்பட்டு நிற்கலாம். ஆனால் அப்படி வெளிப்பட்ட குரு சூடச்சொன்ன சரணங்கள் ஒருவரதே. அவர் யார் எனின், 'சாடும் தனிவேல் முருகன்' என்ப. மற்றெல்லாக் குருக்களினும் இக் குருவே சுபாவ குருவென்பதைத் தோற்றுவிக்க இவ்வகைக் கூறினாரென்க. நமது தேகத்திலுள்ள சக்திகளைப் புலப்படுத்தி

நமது ஆற்றலை நாம் உணருமாறு செய்யும் குருவல்லவோ நமக்குச் சிறப்புக் குருவென நம்மால் விசேடித்துப் பாராட்டப்படுபவர்? அத்தகைய குருதான் முருகன் என்பது தோற்றவே அவனது சரணங்களைச் சிரத்தில் 'சூடும்படி தந்தது' என்றார். மேலும், எல்லாக் குருக்களும், இம்முருகனாகிய ஆறுதார முகங்களை யுடைய குருவினது சரணங்களையே சூடச் சொல்லுவரென வுணர்க. இதனால் இம்முருக சக்தியும் குருவும் ஒருவனுக்குத் தன்னிற் புறம்பானதல்லவென்பது வெளியாகும். இவ்வகைச் சூடச் சொன்னது உடல்கள் தோறும் அவ் வுடல்களினது சூணிலைகளுக்குத் தக்கவாறு மாறுபடும். ஒவ்வொரு மதசமூகத்திலுள்ள குருவும் ஒவ்வொரு விதமாக இவ் விஷயத்தையே போதிப்பது. அதனை நாம் கால பேதத்தாலும், தேச பேதத்தாலும், பாஷா பேதத்தாலும், அறியாமல் தியங்குகின்றோமே யன்றி வேறில்லை என்பதை விளக்கவந்தவர் "சொல்லுமதோ?" என்றார். பிறர் கூறியுள்ள சாமானிய உரைகளில் இவ்வளவு உண்மைகளும் தெளிவுறப் புலனுகாமை பற்றி இவ்வளவு இங்கு விரிக்கவேண்டி வந்ததென்க.

## கல்வியில் சம்பாஷிக்க

கரவாகிய கல்வி யுளார் கடைசென்(று)
இரவா வகை மெய்ப்பொரு ளீகுவையோ
குரவா குமரா குலிசாயுத குஞ்
சரவா சிவயோக தயா பரனே. 45

## அந்வயம்

குரவா! குமரா! குலிசாயுத குஞ்சரவா! சிவயோக தயாபரனே! கரவு ஆகிய கல்வி உ(ள்)ளார் கடைசென்று இரவா வகை மெய்ப்பொருள் ஈகுவையோ? (நான் அது

ஞல் கல்வியுளாரோடு பேசும் வன்மை பெற்றவ ஞவேஞ? என்றபடி.)

## பொழிப்புரை

தலைப்பு:—[கல்விச் செருக்குள்ளவர்களுக்குத் தெய்வ வருளால் ஞானம் பெற்றவர்களைக் காணின் ஒருவித இகழ்ச்சி ஏற்படுவ துண்டு. அஃதேனெனில், அருள்பெற்றுப் பாடுவோர் இலக்கணவமைதி யில்லாதவரென்றும், கல்வியினிடத்துத் தம்மைப்போல உழையாதவர் என்றும் அவர்கள் எண்ணுவதேயாகும். உண்மையில் சுவாநுபவமும் அருள் வரமும் இல்லாதவர் கடபட வாதிகளாகமட்டும் இருப்பரேயன்றி முற்றும் உணர்ந்தவர்களாக இரார். அருள் பெற்றவர் இக் கடபடவாதிகள் நீண்டகாலம் உழைத்துப் படித்த கல்வியை யெல்லாம் ஒரே திருஷ்டியில் தமது மனத்தின்கண் அமைத்து அதனைப் பலரும் வியக்குமாறு கையாளும் ஆற்றலைப் படைத்தவர்களென்பதை இவ் வேட்டுக் கல்வியாளர் உணர்வதில்லை. அதனுல் அருளாளர் தமது அருள் யாசகத்தை இறைவனிடத்துச் செய்து பெறும்போதே உலகக் கல்வியையும் பெற்றுவிடுகிருர்கள் என்ப தறியவும். இவ்வித அருளைப் பெற்ருேரிடத்து உலகக் கல்வியாளரது பிதற்றுக்கள் நீடித்து நிலை நிற்பதில்லை. இவ் வுண்மையையறிந்து, உபாஸகன் இப் பிதற்ருளர்களது தலைவாயிலில் நில்லாது, தனது உபாஸனு மூர்த்தியி னிடத்திலேயே அக் கல்வியையும் பெறுமாறு தூண்டும் மறை இது.] கற்ருேரது கல்வியில் அவர் மதிக்கும்படி பேச.

செய்யுள்:—குருநாதனே! நித்திய யௌவனம் வாய்ந்தவனே! வச்சிராயுதனு லளிக்கப்பட்ட குஞ்சரமாகிய தெய்வயானை மணுளனே! சிவயோகத்தைப் பக்தர்களுக்குத் தரும் தயை நிறைந்தவனே! (தங்களது அறியாமையை

வெளிக்காட்ட அஞ்சியோ, தாங்கள் கல்வியினுல் பெறும் உலகப் பயன்களைப் பிறரும் அடைய வேற்படின் தங்களது பெருமை குறையுமென வெண்ணியோ, தம்மை வந்து அடுத்து நின்று கேட்பவர்களுக்குக் கொடாமல்) வஞ்சனையாகத் தங்களுக்குள்ளேயே வைத்துக்கொண்டிருப்பதாக வேஷங் காட்டும் கல்வியாளரிடத்துச் சென்று ஞானத்தை யாசிக்காமல், ஸர்வக்ஞனுகிய நீயே என் முன் தோன்றி உண்மைப் பொருளை எனக்குக் கொடுப்பாயோ ? (யான் அதன் பலத்தினுல் கல்வியாளர்களோடு வார்த்தையாடி அவர்களது நன்குமதிப்பைப் பெறுவேனே நீ சொல்வாயாக என்றபடி.)

## விசேடக் குறிப்புகள்

குமாரகுருபர தேசிகர் தமக்கு இலக்கணப் பயில்வுமுண்டு என்பதைக் காட்டச் 'சிதம்பரச் செய்யுட்கோவை' பாடியது உலக மறிந்ததே. இவ் வருணகிரி நாதரே கந்தரந்தாதி பாடி வில்லிபுத்தூராரைத் தோற்கடித்ததை அவர் சரிதம் கூறும். இவரே முன்னமும் 'யாமோதிய கல்வியும் எம்மறிவும் தாமேபெற வேலவர் தந்ததனுல்' எனக் கூறியுள்ளார். அத்தகைய துணிவுடன் கூறியுள்ளவர் இச்செய்யுளையும் பாடியிருத்தல் கூடுமோ வென்பது ஐயுறத் தகுந்தது. குலிசாயுதகுஞ்சரவா' என்பதனை 'குலிசாயுத, குஞ்சரவா' என இரண்டு விளியாகப் பிரித்து வச்சிராயுதத்தை யுடையவனே! பிணிமுகம் என்னும் யானையை யூர்பவனே! என்று பொருள் கூறுவதிற் பயனென்றுமில்லை. ஆனுல் ஒரு காலத்து உனது அறிவின் ஆற்றலைக் கண்ட தேவர் கோமானும் உனக்குத் தோட்டுணையாகத் தான் வளர்த்த தேவகுஞ்சரி யென்னும் சக்தியை புணர்த்தானுதலின், அத்தகைய பெருஞானம் வாய்ந்த உன்னை யானடுத்து எனது ஞானத்தைப் பெறவேண்டுமேயன்றி, என்போலவே

முக்குண வயத்தராய்க் காமக்குரோதாதிகளுள்ளவர்களும், "கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு, செல்வமும் செல்வமெனப்படும்—இல்லார், குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் றுமும், தலை வணங்கித் தாழப்பெறின்." என்பதை யறியாதவருமான மூர்க்கர்களிடத்து, 'நாய் பெற்ற தெங்கம்பழம்' போலவுள்ள கல்வியைக் கேட்டு இரந்து நிற்பேனோ என்று பொருள்பட 'குலிசாயுத குஞ் சரவா' எனக் கூறினா ரென்பது எவ்வளவு சிறப்புடைத் தென்பதை யோசிக்கவும். அதுபோலவே, 'குருத்தியெனும் படி' என்றற் றொடக்கத்துக் கந்தரலங்காரச் செய்யுளில் 'சிவயோக மெனும் குருத்தை யறிந்து முகமாறுடைக் குரு நாதன் சொன்ன கருத்தை மனத்திலிருத்துங் கண்டீர்' என்றபடி, இக் குருநாதன் சிவயோகத்தை யருளுந் தயாபர னென்று கூறுவது சிறப்புடைத்தே யன்றிச் சிவயோக, தயாபர என இரண்டு தனிப்பட்ட விளிகளாகக் கூறிப் பொருள் உரைப்பதில் பயனில்லை யென்க. இம் மெய்ப் பொருளே, உலகவர் கற்ற கல்வியை யெல்லாம் நன்றாக்கிப், பின்னர் அவ் வொன்றுபட்ட கல்வியை ஒரு நல்லாற்றிற் செலுத்தவல்ல தானதுபற்றி 'மெய்ப்பொருளீகுவையோ' என்றார். இம் மெய்ப்பொருளொன்றைப் பெற்ற அக் கணமே உலக கல்வி முற்றிலும் அதற்குள் அடங்கி விடுவதை உய்த்துணர்ந் தறிக. ஒருவன் பல வருஷங்களாகக் கற்றுப் பெற்ற வித்தையை இவ் வுண்மைஞான முள்ளவன் அவனிடத்துச் சில நிமிஷங்கள் ஸம்பாஷிப்பதனால் அறிந்து கொண்டு அவ் வித்தையைத் தன்ன தாக்கிக்கொண்டுவிட முடியுமென்பதைச் சூசிப்பித்தே, 'கல்வியில் ஸம்பாஷிக்க' என்ற தலைப்புக் கொடுத்தார். இவ்வகை மேதாவிகளைக் கண்டு அழுக்காறடையும் சிறு குணமுள்ளவர்களையே 'கரவாகிய கல்வியுளார்' என்றார். இச் சிறு குணமுள்ளவர்க

ளிடத்துப்பயில்வதற்கு ஒன்றுமில்லை யென்பதைத்தோற்று விக்கவும் 'மெய்ப்பொருள்' என்ற சொற்றொடர் உபயோ கிக்கப்பட்டது.

### மனவருத்தம் தீர

எந்தாயு மெனக்கருள் தந்தையும் நீ
சிந்தாகுல மானவை தீர்த் தெனையாள்
கந்தா கதிர்வேலவனே உமையாள்
மைந்தா குமரா மறை நாயகனே. 46

### அந்வயம்

கந்தா! கதிர் வேலவனே! உமையாள் மைந்தா! குமரா! மறை நாயகனே! நீ எம் தாயும் எனக்கு அருள் தந்தையும் (ஆவாய்); சிந்தா ஆகுலம் ஆனவற்றைத் தீர்த்து எனை ஆள்வாயாக.

### பொழிப்புரை

தலைப்பு:—[ஒருவனது மனவருத்தந் தீர்வது இறைவன் ஆட்கொண்ட பின்னரே ஆனதுபற்றி, அம் மனவருத்தந் தீரும் நெறியை இம் மறையிற் காட்டினார்.] மனத்தினுள்ள வருத்தங்களெல்லாம் நீங்க.

செய்யுள்:—கந்தனே! ஒளி வீசும் வேலைத் தாங்கியவனே! உமையாளுக்குப் புத்திர ஸ்தானீயனே! கட்டிளமை வாய்ந்தவனே! இரகஸ்யங்களைத் தனக்குள் நிறைந்து வைத்துள்ள மந்திரப் பொக்கிஷமாகிய வேதத்துக்கு மூல நாயக மானவனே! நீ எனது தாயும் எனக்கு அருளைத் தரும் தந்தையும் ஆவாய். (எனது) மனத்தின்கணுள்ள துக்கங்களை நீக்கி என்னை ஆட்கொள்வாயாக.

### விசேடக் குறிப்புகள்

சைவ மதப்படி, அம்மை, அப்பன், மகவு என்னும் உறவுகளெல்லாம் உபசார மொழிகளே. உறவை யுணர்த்

தும் பதங்களை நோக்கின் ஆண்பால் உறவுகள் அத்தனையை யும் அண்ணன் தம்பி எனும் இரு பதங்களுக்குள்ளும் பெண் பால் உறவத்தனையையும் அக்காள் தங்கை என்னும் இரு பதங்களுக்குள்ளேயும் அடக்கிவிடலாம் என்பது பெரியோர் மதம். மற்றவை மாயா மயக்கி னுட்பட்டவர்களுக்காக ஏற்பட்ட உறவுப் பெயர்களே யன்றி அம் மயக்கம் நீங்கின வர்களுக் கில்லை யென்றறிக. அதனால் புத்திரஸ்தானமெனக் கூறப் பெறுபவ னென்ன உபசாரமாக முருகனை உமைக்குக் கூறினார். இவ் வுண்மையைத் திருவாசகத்தில் திருப்பொற் சுண்ணம் 31-வது செய்யுளாலும் (மின்னிடைச் செந்துவர்) திருக்கோவையார் 142-வது கலித்துறையாலும் (தவளத்த நீறணியும்) அறியலாமென்பது முன்னரே சொல்லப்பெற் றது. இம் மறையில் முருகனைத் தெய்வமாகப் பல வழியி லும் கூறி யுணர்த்தலானார். தெய்வம், ஊழ், விதி என்பன ஒரு பொருட்கிளவிகள். தாய், செயலற்றுக் கிடக்கும் சிசு வுக்கு, விதி அல்லது ஊழைப்போலச் சரீரத்துக்கு வேண் டிய உணவைப் பரிந்து எடுத்துக் காலநோக்கி வலிந்தூட்டும் தெய்வ மாவள். அதுபோலவே தந்தை அம் மகவுக்குத் தக்க கால நோக்கி அறிவை யூட்டும் விதியாகிய தெய்வமாம். இவ் விருவித முன்னறி தெய்வங்களும் ஊட்டத் தவறின வற்றை மனிதனுக்குக் காலமறிந்து ஊட்டுபவர் குருவாகிய தெய்வமாம். அக் குருவே, முன்னிலையாக நில்லாது ஒருவ னது கருவி கரணங்களிலேயே அமைந்து வினைப் பயனை ஊட்டுவிக்கும்போது, தாய், தந்தை, குரு எனப் பெயர் தரா முடியாத அருவத் தெய்வ மாகிறதென்பதுதான் அத்து வித மதம். இந்நெறியில் முருகனை இம்மறையால் தெய்வ மென உணர்த்தி, அத்தெய்வத்தைப் பிரார்த்திப்பதே உபாஸகனது மனோதுக்கம் நீங்குதற்கான கழுவாயாகவும் கூறினார். எந்தாய், எம் தாய் அல்லது என்போலியர் பலர்க்

கும் தாயெனக் கொள்ளுக. தாயும் தந்தையும் எவ்வண்ணம் ஒரு மகவினது துன்ப நீக்கத்திற்கு ஏதுவாக உலகத்து நிற்கின்றனரோ, அதுபோல, முருகனே, நீயும் எனக்கு இவ் வுலகத்து நிற்பாயாக வெனப் பிரார்த்தித்துத் தன் மனக்கவலை தீர்ந்து நின்றபடி.

### ஆனந்த நடனங்காண

ஆறா றையு நீத் ததன்மே னிலையைப்
பேறா வடியேன் பெறுமா றுளதோ
சீறா வருசூர் சிதைவித் திமையோர்
கூறா வுலகங் குளிர்வித் தவனே. 47

### அந்வயம்

சீறு(றி) வரு சூரைச் சிதைவித்து இமையோர் கூறு(க) உலகத்தைக் குளிர்வித்தவனே! ஆறு (மடங்குள) ஆறையும் நீத்து அதன்மேல் (உள்ள) நிலையைப் பேறு ஆக அடியேன் பெறும் ஆறு உளதோ? (சொல்க என முடிக்க.)

### பொழிப்புரை

தலைப்பு:—[பரப்பிரஹ்மத்தின் அம்சமாயுள்ள கூடஸ்தன் ஸதேஹ முத்தி நிலை காணுவதில் ஆனந்தம் ஒன்றே ஆகலானும், அவ் வானந்தமும் சிவனோடு இரண்டறக்கலத்தலா லுண்டாவ தாதலாலும், அப் பதிவே உயிர்கள் வாழ அச் சிவன் செய்யும் கூத்து ஆதலானும், சிவஸாயுஜ்யத்தைப் பெறவென்று கூறவந்தவர் ஆநந்த நடனம் காண எனக் கூறினர் என்க. இவ்வகையாகச் சீவ ஈசுர ஐக்கியத்தை ஸ்வாநுபவத்தில் உணர்த்தும் மறையாகும் இது.] இறைவனது இன்பந் தரும் கூத்தை அநுபூதி வாயிலாக உணர்ந்து அநுபவிக்க.

செய்யுள்:—சீறிக்கொண்டு மேல்வருகின்ற கோபத்தை (அல்லது சூரபதுமனை)க் கெடுத்துத் தெய்வத்தன்மையோடு பொருந்துமாறு (அல்லது தேவர்களது பாதத்தில் உலகம் சேருமாறு) (கொதிப்பை யடக்கி) உலகங்களைச் சாந்த நிலையி லிருத்தியவனே! முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து அவற்றிற்கு மேலாகவுள்ள இறை நிலைமையைப் பிறவிப்பயனாக உனது பக்தனாகிய நான் அடையும் வகையுள்ளதா? (இல்லையா?) (நீ சொல்வாயாக.)

## விசேடக் குறிப்புகள்

முப்பத்தாறு தத்துவங்களைப்பற்றி ஸ்ரீ ரேசுவராசாரியாரது மானஸோல்லாஸம் கூறுவதிது: (2-வது உல்லாஸம்.)

1 மாயை ஈசன்றன் அறிவு எதிர் உரு அணைந்ததனால்
ஏயும் காலமும் புருடனும் மகத்தெனும் பொருளும்;
தோயும் மானில் ஆங்காரம்; ஐம்பூதமும் தமவின்
ஏயும் ஆணவத் துதித்தன; வான், வளி, தீ, நீர்,

2 பூமி இன்னவை; ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்
ஓமெனு உதித் திந்தியம் உணர உற்றனவால்
தாமும் பூதத்தின் றன்மையாச் சாற்றுற நின்றே;
ஏம தேவதை ஸதாசிவன் ஈசனோடு இயம்பும்

3 உருத்திரன் திரு மாலோடு மலரயன் உரைப்பர்.
அருத்தியோ டகக் கரணமும் ஞான ஐம்பொறியும்
பெருத்த ஸாத்விக வாணவத் தினின்வெளிப் பிறங்கும்;
திருத்தமார் அகக்கரணம், எண் மதி அகங் காரம்

4 சித்தம் என்பன; ஐயம் நிச்சயத் தொடு செருக்கும்;
ஒத்த எண்ணமும் விஷயமாம்; உவற்றின் தேவதைகள்
சுத்த வெண்மதி, பிரசைகள் நாயகன், உருத்ரன்,
இத்தரைக் கண் ஓர் இடம்அறி கேத்ரஞன் என்ப;

5 காது மெய் கண் நா மூக்கு இவை கருதிடின் ஞானம்
ஓதும் ஐம்பொறி; திசையொடு, வாதம், என்றூழும்

மோது பாவங்கள் நீக்கிடும் வருணனும், முழுதும்
ஓதுகின்ற மெய் அசுவினித் தேவரும் இறைவர்.

6 கன்ம ஐம்பொறி யோடுகோல் இராஜ ஸாங்கார
சென்ம முற்றன ; வாய், கை, கால், பாயு, சேர் குறிகள் ;
தன்மமாகும் பேச்சு எடுப்பொடு செலவொடு விடுப்பும்
இன்பம் ஆர்தலும் ; தேவதை வன்னி, இந்திரனும்,

7 குறளெனும் உபேந்திரனொடு, மிருத்தியு, பிரமன் ;
அறைவர்கா லினைப்பிராணனோ டபானனும் ஸமானன்
நிறு(வு) உதானனும் வியானனும் என்ன. ஸாங்கியர்கள்
அறிவர் நாலறு தத்துவம், பூதங்கள் ஐந்தும்,

8 பொறிகள் பத்தொடு வாயு ஐந்(து) அகக் கரணங்கள்
நெறியின் நான்கு இவை ; நிரீசுர ஸாங்கியர், மூலம்
உறை பகுதியும், மகத்(து) அகங்காரமும், தமஸின்
உறைந்து நேர்வரு மாத்திரை பூதங்கள் பத்தும்,

9 ஸத்து வத்தின்ஆம் ஆணவம், ஜனித்ததோர் கரணம்,
மற்றும் அங்கு எழும் ஐம்பொறி, இராஜ ஸாங்காரத்
துற்ற ஐங்கரு மேந்திரி யங்களும் இருபான்
ஒத்த நான்கெனப், புருடனும் கூட்டுவர் உணர்க.

10 முப்பதாப் புராணிகர் சொலும் தத்துவம் மொழிவாம் ;
செப்புமீசுர ஸாங்கியர் தொகையின், மான், காலம்,
ஒப்பும் *முக்கியம், மாயை, பின் அவித்தை, நற் புருடன்.
செப்பிற் றத்துவம் ஆறொடு முப்பதாச் சைவர்

11 சொல்லு மாறுகேள் ; புராணிகர் சொல்லும் முப்பதனோ(டு)
ஒல்லும் பிந்துவும், நாதமும், சத்தியும், சிவனும்
வெல்லும் சாந்தமும், அதீதமும் விளம்புவர் சேர்த்தே.
நல்ல †கேள்வியின் கொள்கையை நவிலுவம் இனியே.

12 விகற்பம் யாவையும் வித்தினுள் முளைஎன முதலில்
உகப்பின் ஆத்துமத் துறைந்தன ; உவை இச்சை அறிவு
செகத்தின் ஆம் தொழில் வடிவுள மாயையிற் சிறக்க
இகத்து எதிர்ப்படல் ஆயின ; காரியம் யாவும்,

---

* முக்கியம்=பிரதானம். † கேள்வி=வேதம்.

13 இச்சை ஞானமும் முயற்சியும் என்று இவை மூன்றும்
நச்சி முற்றுவிக் கின்றன ; ஆதலின் நலக்க
மெச்சும் ஆர்உயிர் யாவும்ஈச் சுரரென மேவல்
நிச்சயம்பெற நின்றதால் ; பவஞ்சமே கார்யம்.

14 வித்தினின்று நல் விருட்சமும் விருட்சத்தின் வித்தும்
ஒத்து மாறியே வருகின்ற என்பவர் உணர
உத்தமத் தவயோகியின் உதாரணம் உரைப்பார் ;
சுத்தர், முன்னையோர், ஸமாதியிற் பக்குவந் தோய்ந்தோர்,

15 கோசிகப் பெரு முனிவரர் ஆதியர், கூறின்,
ஆசின் இச்சையின் முதற்றுணை ஆதிய இன்றிப்
பேசும் ஓர் பயன் கருதிடார், போகங்கள் பிறங்கும்
காசில் நற்றலம் விண்ணினிற் கண்டனர் ; பிறவார்.

16 மட்டிலா வலி படைத்தவன் இறைவன் ; ஆதலினுல்
ஒட்டி ஒன்றையும் விரும்புறுன் உற்ற தன்வயனுய்
எட்டி ரண்டுதிக் குள்ளன யாவையும் படைத்துத்
தட்டற அவை காத்துப் பின் தட்டழித் திடுவான்.

—மானஸோல்லாஸம்.

ஈண்டு முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மேற்போந்த ஈசனும் அவனது அம்சமாக உள்ள ஆன்மாவும் ஸிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம், திரோபவம், அநுக்கிரஹம் என்னும் பஞ்ச கிருத்தியங்களையும் செய்ய முடியும் என்பது பெறப் படுதல் காண்க. ஸாயுஜ்யம் பெற்ற ஆன்மாவுக்கு ஆநந்தமே அளவாக எல்லைகட்டிக் கூறும் தென்னாட்டு விசிஷ்டாத் துவைத வாத சைவத்துக்கு மேற் போந்தது வடநாட்டு வைதிக சைவமென்பது இதனுல் வெளியாகும்.

வைதிக சைவ மென்பதற்கு ஆதாரமென்னை யென் பார்க்கு, இது தட்சிணாமூர்த்தி ஸ்தவத்தின் வியாக்கியானம் என்பதை மறந்துவிடலாகாதென்பதை ஞாபகப் படுத்து கிறேன். இதைக் கருதியே தாயுமானுரும் 'வைதிக சைவ மழகி தந்தோ' என்று ஆகாச புவனம் சிதம்பர ரகசியத்திற்

கூறினார். இப்படித் தென்னாட்டவர் மாறினதற்குக் காரணம், தாஸ மார்க்கமாகிய வைஷ்ணவ விசிஷ்டாத்துவித சித்தாந்தத்துக் கொத்ததாகத் தம் சித்தாந்தத்தையும் அமைத்துக் கொள்ள முயன்றதே என்க. திருப்பள்ளி எழுச்சி, திருவெம்பாவை முதலியவை அமைத்தது போன்ற பல ஒற்றுமைகளில் இக்கோட்பாட்டொற்றுமையும் ஒன்று. பரமான்ம சக்தியைப் பெற்ற ஜீவான்மா தானும் அப் பஞ்சகிருத்தியத்தையும் செய்யும் சக்தியைப் பெற்று ஆநந்திப்பதே ஆநந்தம் என்க. புராண சைவர் ஒருவகையாகக் கூறினும் சிவஞான போதம், சிவஞான ஸித்தியார் இவற்றின் மதமும் இதுவே எனக் கூறுவாரோடு எனக்கு ஒரு வாதமும் இல்லை என்க. இது சுகதுக்கமற்றுத், தன் சிருஷ்டியிற் றான் பிறவாது நிற்கும் நிலை என்பதை மேல் 15-வது மேற்கோட் செய்யுளின் இறுதி மொழியாற் கூறினார். அதனால் ஜீவன் முக்தியடைந்த ஆத்துமாவுக்குப் பின்னர் பிறவியே யில்லாது போவது வெளியாகும். இத்தகைய ஆநந்த நடனத்தைக் காணத்தான் குருநாதனைப் பிரார்த்தித்தார். 'பெறுமாறுளதோ' என்று வினவிய காரணத்தானே, அத்தகைய ஆறு வினவியாரது மனக்கண்ணில் தோன்றியது வெளியாகும். இனி அதைத் தாரணையில் நிறுத்தி நிச்சய புத்தி கொள்வதற்கான நிதித்தியாஸனத்திற் பழகவே அவ் வினா எழுந்தது என அறிக. இதற்குக், கோபமாதிய அசுரப் பண்பெல்லாம் நீங்கித் தேவப் பண்பு முற்றவும் பெற வேண்டுமென்பதை ஸூசிப்பித்தே 'சீறு வரு சூர் குளிர் வித்தவனே!' என்றார். தன்னிடத்தும் கேவலப் பண்புகளை யொழித்துத் தெய்வப் பண்புகளை முற்றுந் தரவேண்டுமெனப் பிரார்த்தித்தபடி அது.

## தற்சொரூபம் காண

அறிவொன் றறநின் றறிவா ரறிவிற்
பிரிவொன் றறநின்ற பிரான் அலையோ?
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும் வேலவனே. 48

### அந்வயம்

செறிவு ஒன்று அற வந்து, இருள் (ஏ) சிதைய, வெறி வென்றவரோடு உறும் வேல் அவனே! அறிவு ஒன்று அற நின்று அறிவார் (அது) அறிவில் பிரிவு ஒன்று அற நின்ற பிரான் (நீ) அலையோ?

[பிரிவு-ஒலி யெதுகையாக வந்ததெனவுணர்க. இது ஆங்கிலத்தில் (Printer's Rhyme) என்பது போன்றது.]

### பொழிப்புரை

தலைப்பு :—[உபாஸனை செய்யப் புகுந்தவர் உபாஸ்ய மாகிய தெய்வம் தனது ஆத்ம ஸ்வரூபமே என்பதை யுணரும் அத்வைத நிலையைக் காட்டுவதானதுபற்றி இம்மறைக்குத் 'தற்சொரூபங்காண' எனத் தலைப்புப் பெய்தார்.] தனது ஸ்வரூபமே பரப்பிரஹ்ம ஸ்வரூபமென்பதை அநுபூதி நிலையிற் காண.

செய்யுள் :—ஒருவிதமான உலகப்பற்றும் பக்தர்களைப் பற்றிக்கொள்ளாதபடி எதிர்ப்பட்டுத் தரிசனமளித்து, (அப்படி உன்னைக் காணப் பெற்றதனால்) அஞ்ஞான இருளானது சிதறியோடும் வண்ணம், (தங்களது) உலக மயக்கத்தை ஜயித்தவர்களோடு (ஸதா) கூடியிருக்கின்ற வேலாயுதக் கடவுளே! ஞானமென்னும் முப்பொருளிலொன்று தெரியாதபடி நின்று, அருளே புணர்த்த அநுபூதியினால் அறிவார்களது அறிவினுள்ளே பிரிவென்ற ஒன்று (என்றும்) இல்லாமற்போகுமாறு நின்று (அவர்களுக்கு) அருளை யூட்டும்

பிரான் நீ அல்லவா? (அதனால் உபாஸகனே உபாஸ்யனும் உபாஸ்யன் உபாஸகனுக்குள்ளாக விளங்கும் எனது சொரூபத்தை யான் இன்று அறிந்தேன் என்று கூறியபடி.)

## விசேடக் குறிப்புகள்

அத்வைத நிலையைக் கைவல்யமாகப் பெற இரண்டு நெறி யுலகத்தில் கையாளப்பெற்று வருகின்றன. ஒன்று குரு சீட பாவ சிச்ருஷை; மற்றொன்று உபாஸனை. இவ்விரண்டனுள் சிறந்தது உபாஸனையே என்பது அறிவாளிகளின் துணிவான கொள்கை. இதுவே அருணகிரிநாதரின் மதமென்பதை 'வழக்குப் பேச' என்னும் 30-வது மறையின்கண் விளக்கியுள்ளேன். இக் கொள்கையை வற்புறுத்தவே இம் மறையிலும் அத்வைத ஸ்வாநுபூதியைத் தெளிவுபடுத்த உபாஸனா முறையை விளக்கினார். இதனையே "எப்படியும், தேறிற் றுவிதம் சிவாகமமே சொல்லு நிஷ்டை, யாருமிடத் தத்துவிதமாம்." என்று தாயுமானார் வற்புறுத்தியுள்ளா ரென்க. இவ் வுபாஸனை நிஷ்டையான முறையை அம் மறைக்கண் தெளிவுபடுத்தினார் இந் நூலாசிரியர். அருள் தாகம் வாய்ந்த ஒருவன் ஞான நூல்களைக் கற்கிறான். கைவல்யம் போன்ற ஞான நூல்களைக் கற்ற போது நித்தியா நித்திய வஸ்துக்களின் விவேகம் ஒருவனுக்கு ஏற்படுகிறது. எனினும் மனமானது சலனமற்று நிற்பதில்லை. அம் மனச் சலனம் அறுவதற்குக் குருவாகிய ஒரு மனித ரூப ஞானியைப் பற்றிநிற்கப் பார்க்கிறான். அப்படிப் பார்த்துச் சில நாள் அந் நெறியில் ஒழுகினபின்னர் அத் தூல குருவும் தன்னைப்போலக் கால பந்தனும் தேகபந்தனுய்ப் பலவிதக்கட்டுப்பாடுகளுக்குள்ளும் நின்று, அவற்றினின்றும் விலக முடியாதவனாய்த், தனது நடத்தைக்கு ஒப்புரவு, ஆசாரம், ஒழுக்கம் முதலிய பல போலிப்

பெயர்களையிட்டு நடப்பதைக் கண்டு, அத் தூலகுரு தனது மேல்நிலையை யனுபவிப்பதற்குப் பயன் படுவதில்லை யென்பதை யுணர்ந்து, தன் து மனச் சலனத்தை மாற்ற உபாஸனையாகிய மற்றொரு வழியில் நடக்கத் தொடங்குகிறான். உடனே, சின்மயானந்த குருவாக நிற்கவல்ல, உபாஸ்ய தேவதைகளிற் சிறந்த தெய்வத்தைத் தன் மனதில் ஆராயத் தொடங்குகிறான். அதுவே ஸமயமென எங்கும் நிறைந்து நிற்கும் பொருளாகிய அத் தெய்வம் வலிய வந்து இவனது மனதைப் பற்றிக்கொள்கிறது. அப்படிப் பற்றிக்கொள்ளவே, அதற்குள் தானாய், தனக்குள் அதுவாய் நிற்கும் நிஷ்டை உபாஸனுக்குக் கைகூடுகிறது. அப்பொழுது அவன் தன் உண்மை ஸ்வரூபத்தைக் காண்கிறான். இவ் வுண்மையை இம்மறையில் நன்கு அறிவிக்க வந்தவர், வெறி வெல்லுதற்குச் செறிவு (பந்தம்) ஒன்றும் இருக்கப்படாதென்பதை உபாஸனுக்கு எடுத்துக் காட்டுதற்கு முருகன் எதிர்வந்து நிற்கிறானென்பதை விளக்கச் 'செறிவு ஒன்று அற வந்து' என்றும், உலகச் செறிவு அற்றதும் அறிவின்மை ஒழியவும், உபாஸ்ய தெய்வத்திணிடத்துப் பற்று உறவும் உதவியேற்படுகிறதென்பதைக் காட்ட 'இருளை சிதைய' என்றும், அப்படி உபாஸனை ஸித்தி பெற்றவர் ஸ்திரமாக மயக்கங்களை ஒழித்து நிற்க வல்லவராகிறாரென்பதை வெளிப்படுத்த 'வெறி வென்றவர்' என்றும், அவரும் தானும் ஏகீபாவப் பட்டு, 'எனக்குள்ளே நீயிருக்க உனக்குள்ளே நானிருக்க, மனக்கவலை தீர வாமருள்வாய் பூரணமே' என்றபடி, சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றும் அத்வைத நிலையை யநுபவிக்கிறானென்பதைத் தெரிவிக்க, 'வென்றவரோடுறும் வேலவனே' என்றும் கூறினார். மேலும் அப் பிராணேடு தாம் அநுபவித்த ஆநந்த நெறியை விளக்கவந்தவர்,

ஞாதுரு ஞானம் ஞேயம் என்னும் மூன்றி லொன்றான ஞானம் என்னும் நிலை ஒன்று இருப்பதையே மறந்து, பக்திபாவசத்தில் உபாஸகன் நிற்கிறான் என்பதைக் காட்ட 'அறிவொன்று அறநின்று' என்றும், அந்நிலையிலும் ஈசுவர சைதன்யம் ஒழுகும் நெறி காணப்படுவதால் அப்படிக் காணப்படுவது அருளாலென்பதைத் தோற்றுவிக்க 'அறி வொன்றற நின்றறிவார் அறிவில்' என்றும், அவ்வருள் தோன்றிய பின்னர் ஆத்மாவுக்கும் இறைவனுக்கும் பிரிவில் லாமற் போகிறதென்பதைத் தோற்றுவிக்கப் 'பிரிவொன் றற நின்றபிரா' னென்றும் கூறினார். இவ் வத்துவித வேதாந்த உண்மையே வேதக்கொள்கை என்பது மேல் 47-ம் செய்யுளின் விசேடக் குறிப்பில் காட்டப்பெற்றது. இதுவே ஆகமத்துணிபும் என்பதையே இம்மறையாசிரிய ரும் பல விடங்களில் விளக்கியுள்ளாரென அறிக. 'வேத முடனாகம புராண இதிகாசமுதல்' என்னும் தாயுமானார் வாக்கையும் கருதுக.

### தன்னை அறிந்துகொள்ள

தன்னந் தனி நின்றது தானறிய
இன்னும் ஒருவர்க் கிசைவிப்பதுவோ?
மின்னும் கதிர்வேல் விகிர்தா! நினைவார்
கின்னம் களையும் க்ருபைசூழ் சுடரே! 49

### அந்வயம்

மின்னும் கதிர்வேல் விகிர்தா! நினைவாரது கின்னம் களையும் க்ருபை சூழ் சுடரே! தன்னந்தனி நின்றதை இன் னும் ஒருவர்க்கு அறிய இசைவிப்பதுவோ? (அதனை அநு பூதியினால் அவரவரே காண்பதன்றி வேறு வகையில்லையே என்று அநுதாபப் பட்டபடி.) (தான், அசை.)

## பொழிப்புரை

தலைப்பு :—[தத்துவம் 96-ஐயும் தானல்லவென்று உணர்ந்து, தனது நிஜஸ்வரூபத்தை அநுபூதியி லுணர்வதற்கான மறை இது.] தன் ஸ்வரூபத்தைத் தானே அறிந்து அநுபவிக்க.

செய்யுள் :—பிரகாசிக்கின்ற கிரணங்களோடு கூடிய வேலாயுதத்தை யுடைய விளையாட்டுக்காரனே ! நினைப்பவர்களது இன்பங்களை நீக்குகின்ற அருட்சோதியே! (தொண்ணூற்றாறு தத்துவங்களையும் கடந்து) தனிப்பட நின்ற எனது ஸ்வரூபத்தை வேறொருவருக்கு (அவருடைய ஸ்வாநுபூதியில்லாமல்) அவர் அறியுமாறு எடுத்துச் சொல்லுதல் சாத்திய மாகுமா ?

## விசேடக் குறிப்புகள்

ஒரு உரைகாரர், 'தான் தன்னந்தனி நின்றதை' யென்று மாற்றிக் கூறினார். ஆண்டு, தான், பிரத்யகாத்மப் பொருள் என்றார். இவ் வநுபூதி நூலில் ஜீவான்மா பரமான்மாக்கள் இரண்டல்ல வொன்றே யென அநுபூதி வாயிலாக வுணர்வதுதான் உபாஸகனுக்கு முக்கிய விஷயமானதுபற்றி அப்படிப் பிரித்து வேறுபடுத்தியது முறையன்று. அதனால்'நான்' என்பதை அசையாகக் கொள்வதே சிறப்புடைத்து. மற்றொருவர் 'இன்னம் ஒருவர்க்கு இசைவிப்பதுவோ என்பதற்கு, பிரமன், ஹரன், பராசரன் புத்திரர் அறுவர், அகஸ்தியர் முதலியோர்க்கன்றி இன்னும் எம்போலிய ஒருவருக்கும் உரைக்கும் பான்மையதோ' என்று உரைகூறினதுமன்றி, 'என்னைப் போலப் பிறர் அறிய இன்னமும் எவரேனும் ஒருவர்க்குப் பொருந்தக் கூறியருளுவதாமோ' என்ற பிறருரையை, ஆசிரியர் தம் பெருமிதத்தைக் கூறிக்கொண்டதாகு மாகலின், அது பொருந்தா உரையெனவும்

கண்டித்துப்போந்தார். எளிதாயுள்ள பதப்பிரயோகங்களுக்குக் கவியுள்ளம் அறியாது உரை கூறப் புகுந்ததனால் வருந் தோஷங்கள் இவை. ஒருவர்க்கு உபாஸனையில் நம்பிக்கையில்லை. மற்றொருவருக்குப் பிரத்தியட்ச ஞானமில்லை. இம் மறையின் உரை சம்பந்தப்பட்ட மட்டில், குருடர் குருடருக்கு வழி காட்டி இருவரும் குழியில் விழுந்த கணக்காக இருவருமே தவறியுள்ளாரென அறிக. 'தான்' என்பதை அசையாகக்கொண்டு, 'அடையல்ல அப்பமல்ல அவனியோர்க்கு விண்டு காட்டத், தடையின்றித் தன் மனமே தானடங்கிப் பார்க்கவேண்டும்' என்ற அநுபூதி மொழிப்படி அறிவைக் கருவியாகக்கொண்டு உண்மையை யுணர்ந்த பின், அவ் வறிவை அருளெனும் பூமியிற் செலுத்தி, அவனருளே கண்ணாகக் காணவேண்டுமென்பதை இம்மறையாசிரியர் தெளிவாகக் கூறியுள்ளதை உணர்ந்திருப்பின், இவ் வளவு இடர்ப்பாடு ஏற்பட்டிராதென்க. முன்னொரு மறையில் (47 காண்க) 'ஆறுறையும் நீத்து அதன்மேல் நிலையைப் பெறுமாறு கூறியவர், ஈண்டு தத்துவ சமுதாயத்தையே கடந்து, வஸ்து நிச்சயங்கண்டு, அவ் வஸ்து தானேயென அறியப் புகட்ட வந்து, 'தன்னந்தனி நின்றது (தான்) அறிய' என்று கூறினார். தத்துவம் 96 ஆவன: ஆன்ம தத்துவம் 24, நாடி 10 அவஸ்தை 5, மலம் 3, குணம் 3, மண்டலம் 3, பிணி 3, விகாரம் 8, ஆதாரம் 6, தாது 7, வாயு 10, கோசம் 5, வாயில் 9 ஆக 96 ஆம். இந்நிலையிற் சுத்த சைதன்னியம் ஒன்றுமே விளங்குகின்றதாதலாலும், அச் சைதன்னியமும் சோதி ஸ்வரூபமாயிருப்பதாலும், உபாஸகன் அந் நிலையைப் பெற வேண்டுமெனச் சூசிப்பித்து 'க்ருபை சூழ் சுடரே' என்று விளித்துக் காட்டினார். 'விஹ்ருதா' என்பதற்கு விஹாரம் செய்பவனே, லீலா விளையாட்டாக எதையும் செய்பவனே என்பது

பொருள். ஒருவன் தான் அறிந்தபடியே நடித்துக் காட்டும்போது மற்றொருவன் அதனை ஏளனமாகக் கருதுவது ஸஹஜம். ஆனால் அந் நடிப்பாளி உண்மையாக நடிக்கும் பட்சத்தில் அந் நடிப்பின்கண் மற்றவர்கட் கிருந்த ஏளன புத்தி வெகு சீக்கிரத்தில் விலகிவிடும். அப்படி விலகத் தொடங்கினவுடனே அவ்வகை ஏளன புத்தி நீங்கினவர்கள் அந் நடிப்பின் தத்துவத்தைப் பரிசீலிக்கத் தொடங்குவர். அத் தத்துவ ஆராய்ச்சியை அவர் செய்துகொண்டிருக்கும் போதே திடீரென அந் நடிப்பானது அவர்களையும் கவ்விக் கொள்ளும். தொத்து வியாதிபோல் கவ்விக்கொண்ட அந் நடிப்பின் முழுத் தத்துவங்களையும் இதற்குள்ளே அவர்கள் அறியா திருந்திருப்பார்களாயின், சிற்சில ஸந்தர்ப்பங்களில், அது அவர்களுக்கு மருள்போலவும் படும். அதிகம் குடிக் கப் பழகிக் கொண்டவனுக்கு அக் குடியி னிடத்துள்ள வெறி நீங்குவது போல, நாளாவட்டத்தில் அம் மருள் ஒழிந்து அதுவே தெளிவுக்கு ஆதாரமாகும். அத் தெளிவு வந்தபின் பல பெரியாருடைய ஸன்மார்க்க நடையும் அவர் களுக்கு நன்கு விளக்க முறும். அவர்களும் அப் பெரியார நடைகளை யெல்லாம் ஒவ்வொன்றாகக் கைப்பற்றி அரு ளாட்சி பெற்றவ ராவர். இவ் வுண்மை என் அநுபவத்தி லும் யான் கண்டுளேன். எனது இருபத்தாறாவது இருபத் தேழாவது வயதில் இம் முருக மருள் எனக்கு ஏற்பட்டது. அம் மருட் காலத்து யான் நடித்த நடிப்பை யெல்லாம் போலியென்று எண்ணிய இருவர் என்னொடு பழகிய ஒரு மாதத்துக் கெல்லாம் அம் மருள் தம் மேலும் ஊர்வதை யறிந்தனர். பின்னர் அவர் தெளிவு பெற்று உலகப் பெரி யாராகவும் விளங்கினர். அதனால் இவ் வறிவைத் தான் அறிந்து அநுபவிக்கும்போது, அவ் வநுபவமானது, அம் மாதிரி ஆதாரம் உள்ள மற்றவர்களைப் பற்றுவது நெறியே

யல்லாது, ஒருவர் ஒருவருக்கு இசைவிப்ப தல்லவென்பதை இம் மறையாசிரியர் பல முறைகளிலும் வற்புறுத்திக் கூறி யுள்ளார். அதனையே ஈண்டும் 'இன்னும் ஒருவர்க்கு இசை விப்பதுவோ' என்ற வாக்கியத்தால் விளக்கினார். 'இசை விப்பதுவோ' என்பதினாலேயே, அது முடியும் காரியமென் றும், ஆனால், அதைப் பெற விரும்புகிறவனுக்கு உழைப்பு அவசிய மென்றும் உணர்த்தியபடி யாகுமென வறிக.

## அவா வறுக்க

மதிகெட் டறவாடி மயங்கி யறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்
நதிபுத்திர ஞான சுகாதிப அத்
திதிபுத்திரர் வீறடு சேவகனே. 50

## அந்வயம்

நதி புத்திர! ஞான சுக அதிப! அ(ந்த)த் திதி புத்திரர் வீறு அடு சேவகனே! மதி கெட்டு அற வாடி மயங்கிக் கதி அறக் கெட்டு அவமே கெடக் கடவேனோ?

## பொழிப்புரை

தலைப்பு:—[தவாப் பிறப்பு ஈனும் வித்து என்று கூறினார் அவாவினை, பிறவாமை என்னும் நிலையை யடைய வேண்டுவதே ஒவ்வொருவருக்கும் இலட்சியமாக விருத்தல்வேண்டு மாதலின். அவ் இலக்காகிய வீட்டை யடைவதற்கு இவ் வவா நீங்காத்தடையா யிருத்தலின், அதனைக் குருவருளாகிய ஞானத்தால் சுட்டுப் பின் முளையாத படி வறுத்துவிட வேண்டியது அவசியமாதலின், அவா வறுக்க என்னும் தலைப்புப் பெய்யப்பெற்றது] நாளும் டாது, உள்ளத்தையும் தன்னோடு ஈர்த்துக்கொண்டு

எழும் பேராசையைப் பின்னர் ஒருபோதும் தோன்ருதபடி வறுத்து ஒழிக்க.

செய்யுள்:—கங்கா நதியானது, தனது தீரத்தில் உற்பவித்த கடவுளென மகிழ்ந்து, தன் புத்திரனிடத்துப் பிரேமை கொள்ளுவது போலப் பிரேமிக்கும் குமாரனே! ஞானத்தால் வரும் அழியாத சுகங்களுக்கெல்லாம் அதிபனே! (ஞானத்தையும் திவ்ய ஒளியையும் தங்களது அநுபவ ஆநந்தங்களுக்குக் கருவிகளாகக் கொள்ளாமல், பலத்தையே கருவியாகக் கொண்டு நன்மை தீமைகளைப் பகுத்துத் தங்களுக்குத் தோன்றிய நன்மையையே உருவகித்து ஒரு கடவுளாக்கி அந் நன்மைக் கடவுளைப் பூஜிப்போராகிய திதி புத்திரரின் அல்லது அசுரரின் (அதாவது அஹுர் மதத்தவர்களின்) கர்வத்தை ஒழித்த வீரனே! (ஆசை வயத்தனாய்) எனது புத்தியானது கெட, அதனால் மிகவும் மனவாட்டத்தை யடைந்து சித்தம் பேதிக்க, எனக்குக் கிடைக்கவேண்டிய வீட்டுக்கதியை (மோட்சத்தை) முற்றவும் இழந்து வீணுகக் கெட்டுப் போகத் தகுந்தவனோ யான்? (உனது பக்தனல்லவோ? என்றபடி).

## விசேடக் குறிப்புகள்

தேவரும் அசுரரும் ஒரு குலைக் காய்கள். தக்கன் நனி வயிற்று உதித்தோர் ஐம்பதின்மர் தடங் கொங்கைத் தையலாருள் அதிதி மூத்தவளென்றும் திதி இளையவளென்றும் புராணம் கூறும். இவருள் அதிதியின் மக்கள் இந்திராதி தேவர்களென்றும், திதியின் மக்கள் ஆதியில் தைத்தியரெனறு அழைக்கப் பெற்றவராய்ப் பின்னர் தமது கொள்கைகளின் காரணமாக அசுரர் ஆனவரும் ஆவர். இவ் வதிதி புத்திரர்கள் ஞானத்தையும் தெய்வ ஒளியையும் துணையாகக் கொண்டு விஷயங்களை அறியும் தன்மை வாய்ந்தவர்

களாய்த் தங்களை எப்பொழுதும், (passive state) இயங்கா நிலையில் வைத்துக்கொண்டிருந்தவ ரானதுபற்றித் தேவர் களென அழைக்கப் பெற்றனர். அதாவது தெய்வ நிலையையே கண்டு அந் நிலைக்கேற்ப நடந்து கொள்வதையே தமது ஒழுக்கமாகக் கொண்டவர்கள். ஆனால் திதி புத்திரர்களோ, தெய்வத்தை நம்பி உட்கார்ந்திருப்பதில் பயனில்லை யெனக் கூறித், தமது ஆற்றலால் (அஸு, பலம்) எல்லாவற்றையும் நடத்த வேண்டுமென நம்பி, எப்பொழுதும் முயற்சியையே தமக்குத் துணையாகக்கொண்டு ஒழுகினவர் ஆவர். இவர்களுக்குத் திவ்ய சக்ஷுஸ் என்பது இல்லாமற் போயினும், இவர்கள், தங்களுடைய அறிவைத் துணைக் கொண்டு நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து தீமைக்கான சக்திகளை யெல்லாம் அடக்கி நன்மையையே பெற்று வாழ வேண்டுமென்னும் தீவிர எண்ண முள்ளவர்கள். இவர்களுக்குப் புறத் தோற்றத்திலேயே நம்பிக்கை யானதுபற்றி இவர்களது நன்மை தீமைகள் புறத்தோற்றத்திற் காணும் நன்மை தீமைகளாகவே நின்றன. ஆனால் ஆதிதேயர்களது (அதிதி மக்களது) நன்மை தீமைகளோ வெனில், புறத் தோற்றத்தினளவாக மட்டும் நில்லாமல்,கொஞ்சம் ஆழ்ந்து, தீமை பொதிந்தநன்மைகளென்றும் நன்மை பொதிந்த தீமைகளென்றும் அறியக் கிடந்தனவா யிருந்தன. இந்த நிலையில் இத்தேவர்களுக்கும் அசுரர்களுக்கும், அதாவது, தெய்வம் ஒன்றிருந்து நடத்துகிறதென்று கண்ட ஆரியர்களுக்கும், பலத்தால் எதையும் கைக்கொண்டு விடலாமென்று நம்பி யிருந்த மற்றொரு வகை ஆரியர்களுக்கும், இன்னும் லௌகிகமாகப் பேசின், வைதிக ஆரியர்களுக்கும் அஹுர் மத ஆரியர்களுக்கும் (தற்கால வழக்குப்படிப் பேசின், அக் கால ஹிந்துக்களுக்கும் பார்ஸிக்களுக்கும்) ஸ்வர்க்க நரக நம்பிக்கை மட்டுமே இருந்தது. இதன் விரிவை 10-வது மறை

யின் விசேடக்குறிப்பில் ஒருவாறு விளக்கியுள்ளேன். எனி னும், ஈண்டு விஸ்தாரமாக இன்னும் சிலவற்றையும் கூறி, அதனையே விளக்குவல். இப் பிரஹ்மவாதிகள் என்னும் தேவர்களும் நன்மை தீமை வாதிகள் என்னும் அசுரர்களும் ஒருவர்க்கு ஒருவர் மேலாக நின்று காட்ட முயன்றதில், அறி வென்னும் பாற்கடலைக் கடைந்து, அதில் தோன்றிய அமுத மாகிய ஞானத்தை நூல் ரூபமாகப் பலரறியுமாறு வெளிப் படுத்தித், தமது அழியாத் தன்மையைத் தேவர் பெற்றனர். அதனால் வைதிக ஆரியரே முதல் முதல் கேவலம் வில்லே ருழவராயிராமல் சொல்லேருழவரானார்களென்பது போத ரும். பின்னர் அஹுர்மதத்தவரும் நூலியற்றும் அத்தொழி லையே மேற்கொண்டு, ஆரியரது நூல்களைப் போன்ற நூல் களையே இயற்றத் தொடங்கி யிருத்தல் வேண்டுமென்பது, துவஷ்ட புத்திரன் முதலாயினோர் தேவ ஆரியர்களுக்கும் சிற்சில காலங்களில் புரோஹிதர்களா யிருந்தார்களென்னும் வேத கதையினாலும், மகாபலி முதலாயினோர் நூறு அசுவ மேதஞ் செய்து இந்திர பதவியைப்பெற்றாரென்று புராணங் கூறுவதாலும் அறியக்கிடப்பதென அறிக. இஸ்லாம் மதத் திலும் கிறிஸ்து மதத்திலும் மதத்தலைமையின் இடம், அதாவது கிலாபாத் தலைமையும், பாப்பான (Pope) தலை மையும் இருந்த இடம் அடிக்கடி மாறிக்கொண்டிருந்த விஷ யம் மத்தியகால சரித்திரத்தால் வெளி வரும். அது போலவே, இந்திர பதவி, கிழக்குத் திக்கில் என்றும் நிலைத் திருப்பதாகிய ஒரு பதவி விசேடமென்ற உறுதி நிலைபோய், மேற்குத் திக்கிலிருந்த (இரண்ய சந்ததியான) மஹாபலி யினிடத்தும் சிறிது காலம் தங்கலாயிற்று என்பது போத ரும். இதனால் தேவ ஆரியரும் அஹுர்மத ஆரியரும் ஒத்து அளவளாவிக்கொண் டிருந்த காலம் ஒன்று உண் டென்பது விசதம். பின்னர் தேவ ஆரியர் அசுர (வலி)மத

ஆரியரைப் பிரிந்ததற்குக் காரணத்தைக் கவனித்தால் நமது முருகனுடைய ஏற்றம் நன்கு வெளிப்படும். (இம்முருகனைப் பற்றிய பெருமைகளே பின்னர் கிருஷ்ணன் என்ற அவதார விசேடத்துக்கும் ஏற்றப்பட்டதென்பதையும் இதனால் வெளிப்படுத்திக் கொள்ளுகிறேன்.) மனிதன் புண்ணிய பாப ஸங்கங்களிற் கட்டுண்டு ஸ்வர்க்க நரகங்களை யடைந்து அனுபவித்து முடிந்தபின் மீண்டும் மனிதனாகப் பிறக்கிறு னென்ற கொள்கையினிடத்துப் பூரணமான உண்மையில்லை யென்பதைச் சிலர் கண்டனர். பதவிசேடங்களாக அமைத்து வைத்த ஸ்வர்க்க நரகங்கள், சுகதுக்கங்களுக்கும் ஸந்தோஷ பீதிகரங்களுக்கும் ஏதுவாயினமையையும், மனிதனுக்கு அதனால் ஸ்வதந்திரமில்லை யென்றேற்படும் ஆபாஸத்தையும் அவர்கள் அறிந்தனர். அதனால், மனிதன் வினைச் சக்கரத்தில் கட்டிய புழுப் போன்றவன் தானு என்ற சர்ச்சை அடிக்கடி மாந்தர் உள்ளத்தில் எழலாயிற்று. இச் சர்ச்சையை நீக்குவார் எவரு மில்லையா வென்று எல்லாரும் விசாரணை செய்து கொண்டே யிருந்தனர். இந்திர வாதிகள், ஆதித்திய வாதிகள், பிரஹ்மவாதிகள் எல்லாரும் மயங்கி நின்றனர். அப்பொழுதுதான் அருள் என்பது ஒன்று உண்டென்பதை வெளிப்படுத்திச் சிவ வாதிகள் தோன்றியது. இச் சிவ வாதிகளின் முக்கிய குருவாக ஏற்பட்ட தட்சிணுமூர்த்தியும், பிரமனை விடுவிக்க வேண்டிய அவசரத்தில், இம் முருகனைத் தமக்குக் குருவாக ஒப்புக்கொள்ள வேண்டி வந்தது. இந்த நாளிலிருந்து சுக துக்கங்களின் வீறு ஒழிந்தது. சுவர்க்க நரகங்களின் பெருமை சிறுமைக ளொழிந்தன. ஏனெனில் ஸ்வர்க்கமென்று எண்ணப்பட்ட தீபேத்து பர்மா மலைப் பிரதேசங்களும், நரகமென (அதாவது கீழுலகங்களென அதல விதல முதலாகப் பிரித்து) எண்ணப்பட்ட பாரஸீகம், மெஸ

பொடோமியா, எகிப்து முதலிய பிரதேசங்களும், ஒரு பயனைத் தருவனவே யெனக் கொள்ளப்பட்டு, இத் தலங்களில் வசித்தல் யாதொரு சுகதுக்கத்தையும் விளைப்பதல்ல வென மதிக்கப்பட்டது. இதனைப் பட்டினத்தார்,

" நிரயஞ் சேரினும் சேர்க.........................
இன்பத்தழுந்தினும் அழுந்துக.............................
..........................................ஒன்றினும்
வேண்டலுமிலனே வெறுத்தலு மிலனே.........
................................................
கிடையாச் செல்வம் கிடைத்தலானே."

என்று கூறிப் போந்தார். இதனை நுணுகி யறிபவர்களுக்கு மேற்கண்ட வுண்மைகள் நன்கு விளங்கும்.

நிற்க, மாந்தரது நல்வினை தீவினைகளைக் கணக்கிட்டு நடுத் தீர்க்க ஒரு உலகமும், அவ் வுலகத்துக்குப் பெரிய தலையாக ஓர் அறக் கடவுளும், அக் கடவுளுடைய நியமனப் படி ஒழுகும் ஸ்வர்க்க நரகங்களும் மாறிப், புண்ணியமும் பாபமும் அவற்றின் அநுபவங்களாகிய ஸ்வர்க்கமும் நரகமும் வேண்டுவதில்லையென்றும், அறக்கடவுள் செய்யும் வேலையை மனிதனே செய்துகொள்ள வல்லவனென்றும், அதற்கு வேண்டிய சக்தி அவனிடத்திலேயே மறைந்து கிடக்கிறதென்றும், அச் சக்தியை வெளிப்படுத்த வல்ல உலக குரு ஒருவர் உண்டென்றும், மனிதனுடைய அந்தகாரத்தை அதாவது அஞ்ஞானத்தைப் போக்கி அவனுக்கு மோட்சத்தை யடையும் நெறியைக் காட்டுவதாலேயே அவருக்குக் குருவென்று பெயர் வந்ததென்றும், அக் குருவே கைலாஸம் வைகுண்டம் என்னும் பதங்களில் வசிப்பவரென்றும், இம்மாதிரி இருவகைப்படக் கூறுவதும் மாந்தருடைய குணவிசேடங்களுக்கு இயையவென்றும், கேவலம் பக்தி அல்லது அன்பையே சிறப்பித்து

நிற்பவர் வைகுந்தம் வழியாகவும், அன்போடு யோகத்தை யும் புரிந்து வீட்டை யடைபவர் கைலாஸத் துவாராவாக வும், மோட்சத்தை (விடுதலையைப்) பெறுகிறார்களென்றும், பலரும் கண்டறிய லானார்கள். ஆகவே முன்பிருந்த பொன் விலங்கும் இரும்பு விலங்கு மாகிய ஸ்வர்க்க நரகங் கள் மாந்தர் லக்ஷ்யத்தினின்றும் விலகிப்போயின. அத னால் மனிதன் நேராக வைகுந்தம் ஆருகவோ கைலாஸத் தூடாகவோ விடுதலையைப் பெறலானான். அவன் தனது பூத உடம்போடு வாழும்போதே அப்படிப் பெற்றதற்கு அடையாளம் தெரிகின்ற காரணத்தால்தான், இச் சைவ வைணவங்களாகிய அருள் மதங்கள் அநுபூதி மதங்களென் னப் பெற்றன. என்றாலும் இவ் விரண்டினோடும் முன் னிருந்த நம்பிக்கைகளைத் தோற்றும் மதமாகிய பிதிர் மதத்தையும் கலக்கின்றனரே யெனில் அது அறியாமையே யென்க. ஒவ்வொரு தனி மனிதனும் பண்படுத்திப் பெற்ற ஸாலோக, ஸாமீப, ஸாரூப, ஸாயுஜ்ய நிலைகளில் ஒன்றிற் கருகில் யமலோகத்தையும் பிதிர் லோகத்தையும் கலந்து கூட்டிக் குழப்புவதைப் போன்ற பேதைமை வேறொன்று மில்லை யென்றறிக. ஒரு பிதிர்வாதி அல்லது யமவாதி, 'பக் குவப் படாமல் இறந்து போகும் சிசுக்களுக்கும் அறிவிலி களுக்கும் கதியென்ன?' என்று என் பக்கத்தில் நின்று கேட்கிறான். அவனுக்கு நான் சொல்வது இது: இயம நிய மாதி மார்க்க வாருகவோ அல்லது பக்தி ப்ரபத்தி யாரு கவோ செல்லா நிற்கும் குடும்பத்தில் ஸம்ஸ்கரித்துப் பிறந்த குழந்தைக்குச் சரியையாதிகளும் ஸாலோகாதி களும் கண்ணிற் படுமேயன்றிப் பிதிர்லோகம் கண்ணிற் படுமா? அப்படிப் பிதிர்லோகம் கண்ணிற் படும்படியான கிரியைகளைச் செய்யும் குடும்பத்தினர் ஸரியான விதத்தில் தங்களது ஸமய தீட்சைகளையோ ஸமாச்ரயணங்களையோ

பெற்றவர்களல்ல வென்று திண்ணமாகக் கூறுவேன். மனிதனுக்கு இயற்கையாக வுள்ளது அன்பு. அவ் அன்பைப் பூதவுடம்பு உதித்த விடமாகிய பிதா மாதாக்களிடத்தில் அளவு கடந்து செலுத்துவதற்குப் பாசம் என்று பெயர். அப் பாசத்தை அறுப்பதற்கே அஷ்டாங்கயோக அப்பியாசங்கள் உதவுவன; அல்லது பரப் பிரேமை உதவுவது. இந் நியமங்களும் பிரேமையும் முதல் முதலில் கேவலமான பாசவுணர்ச்சிகளையே கண்டிக்கின்றன. இப் பாசவுணர்ச்சிகளைக் கண்டித்து நிற்கும் நெறியில் தீட்சை பெற்றுக் கங்கணங் கட்டிக்கொண்டு ஒழுகும் மாந்தரிடத்துப் பாசம் எப்படிப் பற்றும்? அப்படிப் பற்றவில்லையாயின் பிதிர் நினைப்பும் யமன் நினைப்பும் எங்கிருந்து வரும்? 'எல்லார்க்கும் காலன் துறவீவான், ஈயாமுன் நல்லார் துறப்பர் என்று உந்திபற' என்ற அவிரோத வுந்திப்படி, தீட்சை பெற்ற நல்லார் உலகிலிருந்தும் துறவு நிலை பெற்றவரே யாவர். இத் துறவுநிலையென்பது காஷாயம் கண்டிகை பூணும் வேடநிலை யல்லவென்பதை,

காடே திரிந்தென்ன வோடே எடுத்தென்ன கந்தை சுற்றி,
வீடே செலாது கெடுக்கும் அகப்பகை வேரறுத்துத்
தாள்தோய வல்லவ ரல்லாதவர் முறை சாதித்திடார்,
காடாய கண்டிகை பூண்டத னலென்ன கண்மணியே.

—கண்மணிமாலை.

மனத்தகத் தழுக்கறாத மௌனயோக ஞானிகள்
வனத்தகத் திருப்பினும் மனத்தகத் தழுக்கறார்;
மனத்தகத் தழுக்கறுத்த மௌனயோக ஞானிகள்
முலைத்தடத் திருப்பினும் பிறப்பறுத் திருப்பரே.—சிவவாக்கியர்.

என்னும் செய்யுட்களா லறியலாம். அதனால் சிவ மதத்தினருக்கும் வைணவ மதத்தினருக்கும் பிதிர்மதம் உடன்பாடாக விருக்கப்படாதென வறிக. இவர்கள் பிதிர்மதத்தை

மனங்கொள்ளத் தலைப்படுவாரேல், இவர்கள் செய்து கொண்ட தீட்சைகளும் ஸமாச்ரயணங்களும் போலியாய் மாற, இவர்கள் மதப் பிரஷ்டர்களாய்த் திரியவேண்டி வரும் என்க. இவ்வளவையும் உபதேசித்த குரு முருகனைதுபற்றியே முருகனைத் தட்சிண மூர்த்திக்கும் மேற்போந்த குரு வென்றேன். தட்சிணமூர்த்தியின் அவஸரம் ஒரு தனி நிலையையே காட்டும். பின்னர் அத் தட்சிண மூர்த்தியே சிவனாக மாறிப் பார்வதி கல்யாணஞ் செய்து கொண்டாரென்னும் புராண கதையை எவரும் பார்ப்பதில்லை. அப்படிப் பார்ப்பவருக்கும் அது இரண்டு அவஸரமாகப் படும். ஆனால் ஸுப்ரஹ்மண்யனது அவஸரத்தில் அவ் வகையாக இரண்டு உருவம் தோன்றாமலே ஒரே அவஸரத்தில் ஞானம், குடும்ப வாழ்க்கை, என்னும் இம்மை மறுமைப் பயனிரண்டும் காணப்படுவது நன்கு விளங்கும். அதனாலேயே முருகனை உத்தம குரு வென்பேன் யான்.

இனி இக் குரு ஏற்பட்ட காலத்திருந்த உலக நிலையைச் சற்றுக் கவனிப்போம். இந்துஸ்தானம் கடலாயிருந்தது மாறிப்போயிற்று. மேற் காசியாப் பிராந்தத்திலிருந்து எகிப்து ஆபிரிக மடகாஸ்கர் வரையில் எட்டியிருந்ததும், கிழக்கே ஜாவாத் தீவையும் கடந்து நின்றதுமான மகேந்திரம் (Lemuria ?) என்னும் ஒரு பெரிய கண்டத்தில் அசுரர்கள் (அல்லது அஹுர் மதத்தவர்கள்) வியாபித்துப் பரவி நின்றனர். அப் பிராந்தத்துக்குப் போவதற்கு மேலைமலைத் தொடர் நெறி ராஜபாட்டையாக வாய்வதற்குமுன், இந்திரன் நாடாகிய பர்மாவிலிருந்து அக்கினி நாடாகிய சீயத்தினூக மலாயம் சென்று அம் மகேந்திரத்தை யடையும் நெறி சிறந்திருப்பினும், தென்னிந்தியா வழியாக அம் மகேந்திரத்துக்குச் செல்லும் ஓர் அரு நெறியும் கண்டுபிடிக்கப் பட்டு வழக்கில் வரத் தலைப்பட்டது. இந்தப் பூமியமைப்

பில், நம் முருகன் செய்த திக்கு விஜயமே, சூரபன்ம வத நூலாகிய ஸ்காந்தமாக விளங்குவது. அக்காலத்து ராட்சஸர் என்ற பாவனை மாந்தரிடை ஏற்படவில்லை என்பதை யறியவும். தைத்தியரென்றும், அசுரரென்றும் தேவதாயாதிகள் அழைக்கப்பட்டனரே யன்றி, ராட்சஸரென்ற பெயரே நமது முருகன் திக்கு விஜயஞ் செய்த காலத்தி லில்லையென்று அறியவும். அதனால் பகல் இரவு என்ற பேதத்தினால் உண்டாகும் புத்திரோற்பத்திக் கிரமத்திற்கு தெய்வப் பிரகிருதிகள் ராட்சஸப் பிரகிருதிகள் என்ற பெயர் மாறுபட்ட நினைப்பு அக்காலத்தில் ஏற்படவில்லையென்பது விசதம். மாயை, காசிபப் பிரஹ்மாவைப் பகலில் மயக்கி மறைந்து, மறுபடியும் இரவிலேயே வந்து கூடினளெனக் கூறியுள்ளதும் கவனிக்கத்தக்கது. மகேந்திரத்தில் அரசு கொண்டு எகிப்து கால்டியாவென்னும் நாடுகளில் பரவியிருந்த அசுரரை எல்லாம் ஜயித்து அழித்தவன் இந்த முருகனே ஆவன். இம்முருகனது காலத்திலிருந்துதான் எகிப்தியர் சிவம் சக்திகளைத் தெய்வங்களாகக் கொள்ளத் தலைப்பட்டன ரென்க. இவ்வளவையும் மனதிற்கொண்டே அருணகிரியார் 'திதிபுத்திரர் வீறடு சேவகனே' என்றனர் என்க. இம் முறையில் பார்க்கில் ஆதித்திய மதத்தினரால் முதலில் மனம் மாற்றப்பட்ட அசுரர் அக்கினி மதத்தின ரானது வெளியாகும். இக் காலத்திலிருந்துதான் இயற்கை மதம் ஒழிந்து அருள் மதம் ஏற்பட்டது என அறிக. அதாவது பௌதிகமாக வெளியில் தோற்றும் இந்திரன், பர்ஜன்யன், மாதரிச்வான், சோமநஸீ என்னும் தேவதைகளின் வணக்கம் மாறி, அந்தர்முகமாக நின்று பார்க்கும்போது காணப்படும் திவ்ய சக்தியே பெரியதென உணரப் பெற்றது. இவ்வளவு மாறுபாடும் பிறந்த இடம் கங்கை நதியின் பிறப்பிட மாதலால், இவ்வகைய மாறுதல்களைத் தோற்றிய பெரிய குருவை 'நதி புத்திர' வென்று உபசரித்துக் கூறினர். இனி விரிப்பிற் பெருகும் என இதனோடு இதனை நிறுத்துகிறேன்.

## நினைத்தபடி தரிசனம் அளிக்க

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே! 51

### அந்வயம்

குகனே! உருவாய் அருவாய் உளதாய் இலதாய் மருவாய் மலராய் மணியாய் ஒளியாய் கருவாய் உயிராய் கதியாய் விதியாய் குருவாய் வருவாயாக; (வந்து) அருள்வாயாக.

### பொழிப்புரை

தலைப்பு :—[கருதுவார் கருதும் மாதிரியெல்லாம் தோன்றுவதும் அருள் புரிவதும் கடவுளுக்கு இயற்கையென்பதை வெளிப்படுத்த வந்தவர், சில வழிகளைப் பக்தர்கள் கருதுவதற்கான மார்க்கமாகக் காட்டிச் சென்றார். ஒழுங்குபட்ட உள்ளமுடையோர்க்கு முரணான சிந்தைகள் தோற்றலாகா வென்பதைக் காட்டி இவ்வகைச் சிந்திக்கவென நெறிகாட்டினா ரென்பதறிக.] உபாஸகன் எவ்விதமாகத் தனது ஒழுங்குபட்ட உள்ளத்தில் நினைக்கின்றானோ அவ்விதமாகத் தரிசனந் தந்து அருள் புரிய.

செய்யுள் :—உபாஸகர்களது இதயமாகிய குகையில் அவர்கள் அறியாதபடியே வசித்து அவர்கள் உணரும்போது வெளிப்பட் டருள்பவனே! ரூபத்தோடும் ரூபமின்றியும், உள்ளதாகவும் இல்லாததுபோன்றும், மலர் மரு, மணி ஒளி, என்னும் குணிகுணங்களாயும், உடல் உயிரென்னும் ஜட ஜீவ ஸ்வரூபங்களாகவும், கதி விதியென்னும் நெறி முடிவுகளாகவும், காணப்படுவதோடு குருவாகவும் வெளிப்பட்டு எனக்கு ஞானத்தைத் தந்து அருளைப் புரிவாயாக.

### விசேடக் குறிப்புகள்

நினைத்த காட்சிகளெல்லாம் மாந்தர் நினைப்பின் முறுக்கத்தால் தோற்றுவது உண்மையாயினும், அத்தகைய தோற்

றங்களைக் காண்போருக்கு அவற்றின் கருப்பொருள் விளங்கிலன்றி அவை பயன்படமாட்டா வாகலானும், அவ்வகைத் தோற்றங்களுக்கு ஆதாரமாயுள்ள அறிவு உணர்ச்சிகளை விருத்தி செய்யும் குருவினது தோற்றமே ஏற்றமுள்ளதாகலானும், தமது தீர்மானத்தையும் காட்டிக், ' குருவாய் வருவாய் அருள்வாய்' என முடித்துக் காட்டினார் என்க. இதனாலேயே ஒரு சாரார், யோகஞானத்தால் உணரப்பட வேண்டிய காட்சிகளைப் பூதக்கண்ணால் அறியுமாறு அமைப்பது முறை பிறழ்வாகுமென வாதித்துக் கூறுகின்றனர். அன்னார் கூற்றிற் றவறொன்று மில்லையென வுரைக்கலாமாயினும், அன்னார் கூறுவதே முற்றுஞ் சரியெனக் கூறுவதும் பொருந்தாது. ஏனெனில்,

" தம்பக்க மன்றிய மற்றொரு பக்கத்தைச் சார்ந்து, அதனை
நம்பக்க மாக்கலா காதென் றுரைக்கு நவிரமதை
எம்பக்க மாக்கிக் கடந்தால் இருவிரு மெண்ணுநகர்
உம்பக்க மாகும் ; விரைவிற் சமரச மோங்குவிரே "

—சத்தி நிபாதக் கோவை.

என்ற அருள் வாக்கின்படி, இருவர் தம் பக்கத்தையும் தழுவி நோக்கின லன்றிச் சமரசம் ஏற்படுவதில்லை யென்றறிக. இதனாலேயே தற்காலத்து எழுந்துள்ள ஸமாஜங்களும் ஸங்கதன்களும் பண்டைய மதங்களைப்போலச் சிறப்படைவதில்லை யென்க. அதனால், இருபட்சங்களையும் தீர நோக்கும் ஆற்றலைப் படைப்பதே அருளை யாள்வோருடைய உரிமையாதல்பற்றி, இருகட்சியினரது கொள்கைகளையும் எடுத்துக்காட்டி அவற்றிற் சிறப்பு வாய்ந்ததையும் குறித்துச் செல்லவேண்டுமென்ற ஒழுங்கில், அருணகிரிநாதர் இம்மறையில் அவ்வகை முடிவுபடுத்திக் கூறினரென்றறிக.

---

குறிப்பு :—32-வது மறையின் விசேடக் குறிப்புகளின் இறுதியில் அடியில் வருவதனையும் கூட்டிப்படிக்க.

இனிக் கலையைச் சாஸ்திரமெனப் பொருள்கொண்டு தலைஊடலை எனப் பதம் பிரித்துச் 'சொற்போரில் வெற்றிகொள்ளல் அளவாக நின்றுவிடல் தகாது' எனக் கூறுவாரும் உளர். அவ்வுரை 'கொலை மறுத்தல்' என்னும் தலைப்புக்கு இயையாமை அறிக.